ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்க்ரஹம் — 1

" ஸ்ரீ சங்க க்ருபா அனுபந்தம் "

21-5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-२२

॥ श्रीः ॥







# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா 22

21-5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு:

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–२२

## सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहः

(प्रथमः अंशः)



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா–22

## ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்

(முதற் பகுதி)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்.

1968



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिर्द्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவில் இது 22-வது மலர் ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்யாள் அருளிய வேதாந்த பிரகரணங்களுள் மிகப் பெரியதாக உள்ள 'ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்' என்ற பிரகரணம் வழக்கம்போல தமிழில் பத உரை கருத்துரைகளுடன் இதில் வெளியிடப்படுகிறது 1006 சுலோகங்களுள்ள இந்நூல் விவேக சூடாமணிக்கு வியாக்யானமாக அமைந்திருப்பதாகக் கருதலாம்.

सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहनामकः ।
ग्रन्थोऽयं हृदयग्रन्थिविच्छित्त्यै रचितः सताम् ॥

என்ற கடைசி சுலோகத்தில் இந்நூலின் பெயர் ஆசார்யாளால் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எல்லா உபநிஷத்துக்களின் தீர்மானமெதுவோ அதன் ஸாரம் சுருக்கமாகக் கூறப்பட்டிருப்பதாக இந்தப் பெயரிலிருந்து தெரிகிறது. ஆனுல் பெயர் அமைந்திருப்பதைப்போலவே எல்லா விஷயங்களும் மிக விரிவாகவே விளக்கப்பட்டிருக்கின்றன. மிக விரிவான இந்நூலை ஐந்து பகுதிகளாக வெளியிடுவதாக உத்தேசிக்கப் பட்டிருக்கிறது. இதன் முதல் பகுதி இம்மலரில் வந்துள்ளது. மற்ற பகுதிகளும் முறையே தொடர்ச்சியாக வெளிவரும்.

ஒரு நூலை ஒருவர் வாசிக்க ஆரம்பிக்கவேண்டுமானுல் அதிலுள்ள விஷயம், பிரயோஜனம், ஸம்பந்தம், அதிகாரி என்ற இந்த நான்கும் அவனுக்குத் தெரிந்திருக்கவேண்டும் இதுவே அனுபந்த சதுஷ்டயம் எனப்படுவது இதை முதலில் காட்டுகிருர். பிறகு ஸாதன சதுஷ்டயத்தை விரிவாக விளக்கிக்காட்டுகிருர். நித்யாநித்யவஸ்து விவேகம், இஹாமுத்ரார்த்த பல போக விராகம், சமாதிஷட்கம், முமுக்ஷுத்வம் என்ற நான்கு ஸாதனங்களைக் கைக்கொண்டவன்தான் வேதாந்த விசாரத்தில் அதிகாரியாகிருன். இதில் முதல் இரண்டு ஸாதனங்களும் சமாதிஷட்கத்தில் சமம், தமம், திதிக்ஷை, உபரதி இந் நான்கும் இந்த முதல் பகுதியில் உள்ளன. பாக்கியுள்ள சிரத்தை, ஸமாதானம் முமுக்ஷுத்வம் இவைகளும் பின்னர் சிஷ்யன் குருவிடம் சென்று ப்ரச்னம் [செய்வது] முதலானவை பின் பகுதிகளில் வரும்,

வைராக்யம் வருவதற்காக விஷயங்களின் தோஷங்களை மிக விரிவாக எடுத்துக்காட்டுகிறார் உபரதி நிரூபணத்தில் ஞானத்தால்தான் முக்தி, கர்மாவால் அல்ல என்று காட்டி முமுக்ஷுவுக்கு ஸர்வகர்மபரித்யாக ரூபமான ஸந்யாஸம் அவசியம் என்பதையும் காட்டுகிறார்.

விவேகசூடாமணியிலுள்ள சில சுலோகங்களும் யோக வாஸிஷ்டத்திலுள்ள சில சுலோகங்களும் இதில் காணப்படுகின்றன இது பற்றிய விபரங்களை இதன் கடைசிப் பகுதியின் முகவுரையில் காணலாம். விவேகசூடாமணிபோலவே இந்நூலும் குரு சிஷ்ய ஸம்வாதரூபமாக அமைந்துள்ளது ஸத்குருவின் உபதேசத்தால் சிஷ்யனுக்கு ஸம்ஸார பந்தம் நீங்கியதாக கடைசியில் காட்டுகிறார்.

इत्याचार्यस्य शिष्यस्य संवादेनात्मलक्षणम् ।
निरूपितं मुमुक्षूणां सुखबोधोपपत्तये ॥

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்கார்யதர்சி
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி


விஷயாநுக்ரமணிகை

॥ श्रीः ॥

# ॥ सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहः ॥

## ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம்.

—o—

[ ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யார் வித்வான்களை உத்தேசித்து பிரஸ்தானத்ரய பாஷ்யங்களை இயற்றியிருப்பதுடன் ஸாமான்ய வ்யுத்பத்தியுள்ளவர்களுக்கும் வேதாந்த தத்வ ஜ்ஞானத்தைப் புகட்டவேண்டுமென்று கருதி வெகு லளிதமான நடையில் அநேகம் பிரகரணங்களை செய்திருக்கிறார். அவைகளிலும் ஒரு சுலோகம், மூன்று சுலோகங்கள், பத்து சுலோகங்கள், நூறு சுலோகங்கள் ஐநூறு சுலோகங்கள், என்றவாறாக பலவிதமாக பிரகரணங்களை இயற்றியிருப்பதில் மிகவும் முக்கியமானது விவேகசூடாமணி என்பது. அது வேதாந்தார்த்தம் தெரிந்துகொள்ள ஆரம்பிக்கும் வித்தியார்த்திக்கும் ஆத்ம ஸாக்ஷாத்கார மடைந்திருக்கும் பிரஹ்மவித்துக்கும் உபயோகப் படக்கூடியதாகவே அமைந்திருக்கிறது. அதையே இன்னமும் ஸுலபமாக மனதில் படியும்படி அதற்கு வியாக்யான ரூபமாகவே எழுதப் பட்டிருக்கும் பிரகரணம் தான் இந்த ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம் என்பது. இதில் மொத்தம் 1006 சுலோகங்கள் இருக்கின்றன. யாருக்கும் ஸுலபமாக அர்த்தமாகக் கூடிய ரீதியிலேயே எழுதப்பட்டிருக்கிறபடியால், ஸம்ஸ்கிருதம் தெரியாதவர்களுக்காக அப்படியே தமிழில் மொழி பெயர்க்க வேண்டியது மாத்திரம் அவசியமாகுமே தவிர விசேஷ குறிப்புகளுக்கு அவசியம் இராது. சிற்சில இடங்களில் மாத்திரம் மூலக் க்ரந்தத்தின் தாத்பர்யத்தை நன்கு தெளிவுபடுத்துவதற்காக அவசியமாய் தோன்றின சிலகுறிப்புகளுடன் இந்த மொழி பெயர்ப்பு வெளியிடப்படுகிறது. ஸ்ரீமத் ஆசார்யாருடைய உபதேச மொழிகளைக்கேட்டறிந்து தங்களால் இயன்றமட்டும் அனுபவத்திற்குக் கொண்டுவந்து வாசகர்கள் கிருதார்த்தர்கள் ஆவார்களாக. ]

अखण्डानन्दसंबोधो वन्दनाद्यस्य जायते ।
गोविन्दं तमहं वन्दे चिदानन्दतनुं गुरुम् ॥ १ ॥

*அகண்டாநந்தஸம்போதோ வந்தநாத் யஸ்ய ஜாயதே ।*
*கோவிந்தம் தமஹம் வந்தே சிதாநந்ததநும் குரும் ॥*

**यस्य**-எவருடைய (எவரைக்குறித்து), **वन्दनात्**-நமஸ்காரத்தால் (நமஸ்காரம் செய்வதால்), **अखण्डानन्दसंबोधः**-பிரிவற்ற பரிபூர்ணமான ஆனந்தஞானம், **जायते**-உண்டாகிறதோ, **तं**-அந்த, **चिदानन्दतनुं**-ஞானனந்த ஸ்வரூபரும், **गुरुं**-குருவுமான, **गोविन्दं**-கோவிந்தரை, **अहं**-நான், **वन्दे**-வணங்குகிறேன்.

*எவரை வந்தனம் செய்வதால் பரிபூர்ணமான ஆனந்தத்தின் திடமான உணர்ச்சியறிவு ஏற்படுகிறதோ, அந்த ஞானனந்த ஸ்வரூபராயுள்ள குருவாகிய கோவிந்தரை நான் வந்தனம் செய்கிறேன்.*

*[ஸச்சிதானந்த ஸ்வரூபமான பரப்ரஹ்மத்தையும் அதை ஸாக்ஷாத்கரித்திருக்கும் பிரஹ்ம நிஷ்டரான குருவையும் பேதப் படுத்தாமல் இருவருக்கும் அன்வயிக்கும்படியான விசேஷணங் களை உபயோகப்படுத்தி "கோவிந்தரை நான் வணங்குகிறேன்" என்று ஆசார்யபாதாள் இந்த சுலோகத்தில் தன் குருவான கோவிந்த பாதாசார்யாரை ஸர்வ ஜகந்நியந்தாவான கோவிந்தராகவே எண்ணுவதாகக் காட்டியிருக்கிறார். அந்த தத்வம்தான் ஜீவனிடத்தில் பிரத்யகாத்மாவாக விளங்குகிறது என்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார்.]* (1)

**अखण्डं सच्चिदानन्दं अवाङ्मनसगोचरम् ।**
**आत्मानं अखिलाधारं आश्रयेऽभीष्टसिद्धये ॥ २ ॥**

*அகண்டம் ஸச்சிதாநந்தம் அவாங்மநஸ கோசரம் ।*
*ஆத்மாநம கிலாதாரம் ஆச்ரயேऽபீஷ்டஸித்தயே ॥*

**अखण्डं** – பிரிவு அற்றதும், **सच्चिदानन्दं** – ஸத்ய-ஞான-ஆனந்த வடிவமாயும, **अवाङ्मनसगोचरं**-வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத தாயும், **अखिलाधारं**-எல்லாவற்றிற்கும ஆதாரமாயும் உள்ள, **आत्मानं**-ஆத்மவஸதுவை, **अभीष्टसिद्धये** – கோரிக்கை நிறைவேறுவதற்காக, **आश्रये**-ஆச்ரயிக்கிறேன.

பரிபூர்ணமாய் ஸச்சிதாநந்தமாய் வாக்குக்கும் மனஸிற்கும் விஷயமாகாததாய் ஸகலத்திற்கும் ஆதாரமாயிருக்கும் ஆத்மாவை விரும்பும் விஷயம் ஸித்திக்கவேண்டியதற்காக ஆசிரயிக்கிறேன்.

இவ்விதமாக பிரஹ்மத்தையும் குருவையும் ஆத்மாவையும் ஸச்சிதாநந்தஸ்வருபம் என்று வர்ணித்திருக்கிறபடியால் அம் மூன்றும் ஒரே தத்வம்தான் என்பதை விளக்கி ஸர்வவேதாந்தங்களிலும் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருப்பதின் ஸாரத்தின் சுருக்கம் இவ்வளவுதான் என்று இந்த கிரந்தத்தில் பிரதிபாதிக்கப்படும் விஷயத்தை குறிப்பிட்டிருக்கிறார். ஆனாலும் கிரந்த மூலமாய் பிரதிபாதனம் செய்யும்போது வாக்கையும் மனஸையுமே உபயோகப்படுத்தியாகவேண்டியிருப்பதால் வியாவஹாரிக தசையில் அதற்கு எவ்வித இடையூறும் ஏற்படக் கூடாதென்ற எண்ணத்துடன் எல்லா விக்கினங்களையும் போக்கக் கூடிய விக்நேசுவரரை அடுத்த சுலோகத்தில் வணங்கிவிட்டு அதற்கு மேல் கிரந்தத்தை ஆரம்பிக்கிறார். (2)

यदालम्बो दरं हन्ति सतां प्रत्यूहसंभवम् ।
तदालम्बे दयालम्बं लम्बोदरपदाम्बुजम् ॥ ३ ॥

யதாலம்போ தரம் ஹந்தி ஸதாம் ப்ரத்யூஹஸம்பவம்।
ததாலம்பே தயாலம்பம் லம்போதர பதாம்புஜம் ॥

**यदालम्बः**—எதனுடைய பிடிப்பானது, **सतां**—நல்லோர்களுக்கு **प्रत्यूहसंभवं**—இடைஞ்சல்களால் உண்டாகும், **दरं**—பயத்தை, **हन्ति**—போக்குகிறதோ, **तत्**—அந்த, **दयालम्बं**- கருணைக்கு ஆச்ரயமான, **लम्बोदरपदाम्बुजं** – விநாயகரின் திருவடித்தாமரையை, **आलम्बे** – பிடித்துக்கொள்கிறேன்.

எதினுடைய அவலம்பனமானது ஸாதுக்களுக்கு, இடைஞ்சல்களால் ஏற்படும் பயத்தைப்போக்கடிக்குமோ அந்த, தயைக்கு ஆசிரயமாயிருக்கும் மஹாகணபதியின் பாதகமலத்தை நான் ஆசிரயிக்கிறேன். (3)

(அ) கிரந்தத்தில் சொல்லப்போகும் விஷயத்தையும், யாருக்காக, எதற்காக என்ற விஷயத்தையும், சுருக்கமாகச் சொல்கிறார்:—

वेदान्तशास्त्रसिद्धान्तसारसंग्रह उच्यते ।
प्रेक्षावतां मुमुक्षूणां सुखबोधोपपत्तये ॥ ४ ॥

*வேதாந்த சாஸ்த்ர ஸித்தாந்த ஸார ஸங்க்ரஹ உச்யதே ।*
*ப்ரேக்ஷாவதாம் முமுக்ஷூணாம் ஸுகபோதோபபத்தயே ॥*

**मुमुक्षूणां**-மோக்ஷம் அடைய தீவ்ர ஆவலுள்ள, **प्रेक्षावतां**-அறிவாளிகளுக்கு, **सुखबोधोपपत्तये**-சுலபமாக ஞானம் உண்டாவதற்காக, **वेदान्तशास्त्र**-வேதாந்த சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள, **सिद्धान्त**- தீர்மானங்களுடைய, **सारसंग्रहः**-ஸாரத்தின் சுருக்கம், **उच्यते**-சொல்லப்படுகிறது.

*நல்ல அறிவுள்ளவர்களாயும் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடைய ஆவலுள்ளவர்களாயுமிருப்பவர்களுக்கு சிரமம் அன்னியில் ஞானம் ஏற்படும் பொருட்டு வேதாந்தமாகிற சாஸ்திரத்தின் ஸித்தாந்தத்தினுடைய ஸாரம் சுருக்கிச்சொல்லப் படுகிறது.* (4)

अस्य शास्त्रानुसारित्वात् अनुबन्धचतुष्टयम् ।
यदेव मूले शास्त्रस्य निर्दिष्टं तदिहोच्यते ॥ ५ ॥

*அஸ்ய சாஸ்த்ராநுஸாரித்வாத் அநுபந்த சதுஷ்டயம் ।*
*யதேவ மூலம் ஶாஸ்த்ரஸ்ய நிர்திஷ்டம் ததிஹோச்யதே ॥*

**अस्य**-இந்நூலுக்கு, **शास्त्रानुसारित्वात्**- வேதாந்தசாஸ்திரத்தை ஒட்டியிருக்கும் தன்மையிருப்பதால், **शास्त्रस्य**-வேதாந்த சாஸ்திரத்திற்கு, **यत्**-எந்த, **अनुबन्धचतुष्टय**-நான்கு அனுபந்தங்கள், **मूले**-மூலமாக, **निर्दिष्टं**-குறிப்பிடப்பட்டுள்ளதோ, **तदेव**-அதுவே, **इह**-இங்கு, **उच्यते**-சொல்லப்படுகிறது.

*இந்த கிரந்தமானது சாஸ்திரத்தை பொட்டியேயிருப்பதால் சாஸ்திரத்திற்கு மூலமாக எந்த நான்கு அனுபந்தங்கள் சொல்லப் பட்டிருக்கின்றனவோ அவைகளே இங்கு சொல்லப்படுகின்றன.*

(அ) *சாஸ்திரத்தின் நான்கு அனுபந்தங்கள் என்பன எவை என்பதைக் குறிப்பிடுகிறார்:—*

अधिकारी च विषयः संबन्धश्च प्रयोजनम् ।
शास्त्रारम्भफलं प्राहुः अनुबन्धचतुष्टयम् ॥ ६ ॥

அதிகாரீ ச விஷய: ஸம்பந்தச்ச ப்ரயோஜநம் ।
சாஸ்த்ராரம்பபலம் ப்ராஹு: அநுபந்தசதுஷ்டயம் ॥

अधिकारी च–அதிகாரியும், विषयः–விஷயமும், संबन्धश्च–ஸம்பந்தமும், प्रयोजनं–பிரயோஜனமும், अनुबन्धचतुष्टयं–இந்த நான்கு அநுபந்தங்களையும், शास्त्रारम्भफलं–சாஸ்திரம் ஆரம்பிப்பதை பிரயோஜனமாகக் கொண்டதாக, प्राहुः–சொல்கிறார்கள்.

ஏதேனும் ஒரு சாஸ்திரத்தை ஆரம்பிக்கவேண்டுமானால் அதில் யார் அதிகாரி அதாவது அதை அறிந்து கொள்ள நினைப்பவருக்கு என்ன யோக்கியதை இருக்கவேண்டுமென்று சொல்ல வேண்டும். அந்த சாஸ்திரத்தில் சொல்லப்போகும் விஷயம் என்ன என்று சொல்லவேண்டும். அந்தவிஷயத்திற்கும் இந்த சாஸ்திரத்திற்கும் என்ன ஸம்பந்தம் என்று சொல்லவேண்டும். இந்த சாஸ்திரத்தை அறிவதினால் என்ன பிரயோஜனம் ஏற்படும் என்றும் சொல்லவேண்டும். இந்த நான்கு அம்சங்களில் ஏதேனும் ஒரு அம்சம் குறைவாயிருந்தாலும் சாஸ்திரத்தை ஆரம்பிப்பது நியாயமாகாது. அப்படியே ஆரம்பித்தால் யாருக்கும் எவ்வித பிரயோஜனமும் ஏற்படாததால் வீண் காலக்ஷேபமேயாகும். அதற்கு அறிவாளிகள் ஸம்மதிக்கமாட்டார்கள். ஆகையால் சாஸ்திரத்தை யொட்டி ஏற்பட்டிருக்கும் இந்த கிரந்தத்திற்கும் இந்த நான்குவித அனுபந்தங்கள் இருப்பதாக முதலிலேயே காட்டினால் தான் இதை ஆரம்பிப்பது நியாயமென்று ஏற்படும். (6)

(அ) மேலே கூறப்பட்ட நான்கு அம்சங்களும் இங்கேயும் இருக்கிறதென்று மேல் சுலோகங்களால் விளக்குகிறார். அதில் முதலாவதாக அதிகாரியைப்பற்றிக் கூறுகிறார்:—

चतुर्भिः साधनैः सम्यक् संपन्नो युक्तिदक्षिणः ।
मेधावी पुरुषो विद्वान् अधिकार्यत्र संमतः ॥ ७ ॥

சதுர்பி: ஸாதநை: ஸம்யக் ஸம்பந்நோ யுக்திதக்ஷிண: ।
மேதாவீ புருஷோ வித்வான் அதிகார்யத்ர ஸம்மத: ॥

**चतुर्भिः साधनैः**–நான்கு ஸாதனங்களோடு, **सम्यक् संपन्नः**–நன்கு கூடியவனும், **युक्तिदक्षिणः**–யுக்திகளில் திறமையுள்ளவனும், **मेधावी**–தாரணசக்தியுள்ளவனும், **विद्वान्**–அறிவுள்ளவனுமான, **पुरुषः**–புருஷன், **अत्र**–இந்த சாஸ்திரத்தில், **अधिकारी**–அதிகாரியாக, **संमतः**–ஒப்புக்கொள்ளப்பட்டவன்.

*[1] நான்கு ஸாதனங்களுடன் நன்கு சேர்ந்தவனாய், யுக்தி செய்வதில் ஸாமர்த்தியமுள்ளவனாய், நல்ல மேதையுள்ளவனாய் அதாவது சொல்வதைகேட்டு மனதில் தாரணை செய்யக்கூடியவனாய், சொல்வதை மனஸில் வாங்கிக்கொள்வதற்கு வேண்டிய அவசியமான வ்யுத்பத்தி முதலிய வித்யா ஸம்பத்து உள்ளவனாய் இருக்கும் புருஷன் அதிகாரி. அதாவது சாஸ்திரத்தை வாசிக்கத்தகுதியுள்ளவன்.* (7)

*(அ) இரண்டாவதான விஷயத்தைக் கூறுகிறார்:—*

**विषयः शुद्धचैतन्यं जीवब्रह्मैक्यलक्षणम् ।**
**यत्रैव दृश्यते सर्ववेदान्तानां समन्वयः ॥ ८ ॥**

*விஷய: ஶுத்தசைதன்யம் ஜீவப்ரஹ்மைக்ய லக்ஷணம் ।*
*யத்ரைவ த்ருச்யதே ஸர்வவேதாந்தாநாம் ஸமந்வய: ॥*

**सर्ववेदान्तानां** - எல்லா உபநிஷத்துக்களுடையவும், **समन्वयः**–தாத்பர்யம், **यत्रैव**–எதிலேயே, **दृश्यते**–காணப்படுகிறதோ அந்த, **जीवब्रह्मैक्यलक्षणं** - ஜீவனுடையவும் ப்ரஹ்மத்தினுடையவும் அபேதத்தைக்காட்டுகின்ற, **शुद्धचैतन्यं**-சுத்தமான சைதன்யம், **विषयः**-சாஸ்திரத்திற்கு விஷயம்.

*உபநிஷத்துக்களில் பற்பல விஷயங்கள் பேசப்பட்ட போதிலும் எல்லா உபநிஷத்துக்களும் ஒரேமாதிரியாக கருத்துடன் எடுத்துக்கூறுவது ஜீவப்ரஹ்மைக்யத்தைத்தான். சுத்த சைதன்யத்தில் வேற்றுமையைக்காட்டும் உபாதிகள் இல்லாததால் அங்கு ஐக்யமே காணப்படுகிறது. இந்த சைதன்யம்தான் சாஸ்திரத்திற்கு விஷயம்.* (8)

*(அ) மூன்றாவதான ஸம்பந்தத்தைக் கூறுகிறார்:—*

---

*1. நான்கு ஸாதனங்களைப் பின்னால் கூறப்போகிறார்.*

एतदैक्यप्रमेयस्य प्रमाणस्यापि च श्रुतेः ।
संबन्धः कथ्यते सद्भिः बोध्यबोधकलक्षणः ॥ ९ ॥

*ஏததைக்யப்ரமேயஸ்ய ப்ரமாணஸ்யாபி ச ச்ருதே: I*
*ஸம்பந்த: கத்யதே ஸத்பி: போத்யபோதகலக்ஷண: II*

**एतदैक्यप्रमेयस्य**-இந்த ஜீவப்ரஹ்மைக்யம் என்னும் விஷயத்திற்கும், **प्रमाणस्य**-பிரமாணமான, **श्रुतेरपि च**-உபநிஷத்திற்கும், **बोध्यबोधकलक्षणः**-அறிவிக்கப்படுவது, அறிவிப்பது என்பது ரூபமான, **संबन्धः** -ஸம்பந்தம், **सद्भिः** -ஸாதுக்களால், **कथ्यते** -சொல்லப்படுகிறது.

*இந்த ஜீவப்ரஹ்ம ஐக்யரூபமான விஷயத்திற்கும் அதைக் காட்டிக்கொடுக்கும் பிரமாணமான வேதத்திற்கும் உள்ள ஸம்பந்தம் அறிவிக்கப்படுவது – அறிவிக்கிறது என்பதான ஸம்பந்தமென்று பெரியோர்களால் சொல்லப்படுகிறது.*

*இந்த ஜீவப்ரஹ்மைக்யத்தை அறிவிப்பதற்காகவே உபநிஷத்துக்கள் ஏற்பட்டுள்ளன. ஆதலால் உபநிஷத்துகளால் அறிவிக்கப்படும் முக்கிய விஷயம் ஜீவப்ரஹ்மைக்யம் தான். (9)*

ब्रह्मात्मैकत्वविज्ञानं सन्तः प्राहुः प्रयोजनम् ।
येन निःशेषसंसारबन्धात् सद्यः प्रमुच्यते ॥ १० ॥

*ப்ரஹ்மாத்மைகத்வவிஜ்ஞாநம் ஸந்த: ப்ராஹு:*
*ப்ரயோஜநம் I*
*யேந நிச்சேஷஸம்ஸாரபந்தாத் ஸத்ய: ப்ரமுச்யதே II*

**येन**-எதனால், **निःशेषसंसारबन्धात्**-பாக்கியன்னில் ஸம்ஸாரமாகிய கட்டிலிருந்து, **सद्यः**-உடனே, **प्रमुच्यते**-விடுபடுவானோ (அந்த), **ब्रह्मात्मैकत्वविज्ञानं**-ப்ரஹ்மமும் ஆத்மாவும ஒன்று என்ற நிச்சயரூபமான ஞானனுபவத்தை, **प्रयोजनं**-பலனுக, **सन्तः**-பெரியோர்கள், **प्राहुः**-சொலகிறுர்கள்.

*எதை அறிவதினுல் கொஞ்சமேனும் மீதமில்லாமல் ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து முழுவதும் உடனே நன்கு விடுபடுவானோ,*

அந்த பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் ஒன்றாயிருக்கும் தன்மையை நன்கு அறிவதே பிரயோஜனம் என்று பெரியோர்கள் சொல்கிறார்கள். (10)

प्रयोजनं संप्रवृत्तेः कारणं फललक्षणम् ।
प्रयोजनमनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते ॥ ११ ॥

ப்ரயோஜநம் ஸம்ப்ரவ்ருத்தே: காரணம் பல லக்ஷணம் ।
ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோऽபி ப்ரவர்த்ததே ॥

**फललक्षणं**-பலரூபமான், **प्रयोजनं**-பிரயோஜனமானது, **संप्रवृत्तेः**-நன்கு பிரவிருத்திசெய்வதற்கு, **कारणं** - காரணமாகிறது. **प्रयोजनं अनुद्दिश्य**-பலனை எதிர்பாராமல், **मन्दोपि**-மூடனும், **न प्रवर्तते**-பிரவர்த்திக்கமாட்டான்.

பிரயோஜனம் என்பதே பிரவிருத்தியின் பலனாயிருப்பதால் நன்கு பிரவிருத்தி செய்வதற்கே பிரயோஜனம் காரணமாகும். முட்டாள் கூட எவ்விதப்பிரயோஜனத்தையும் உத்தேசிக்காமல் பிரவிருத்தி செய்யமாட்டான்.

நான்கு அநுபந்தங்களில் கடைசியாகச் சொல்லப்பட்ட பந்த நிவிருத்தி என்ற பிரயோஜனமானது பலனாபடியால் இதுதான் ப்ரவிருத்திக்கு முக்கியகாரணமாகிறது. உலகில் எல்லோரும் பலனை அடையத்தான் கார்யங்களைச் செய்கிறார்கள். முட்டாள் கூட பலனை எதிர்பாராமல் காரியத்தைச் செய்யமாட்டான் (11)

(அ) இவ்விதமாக நான்கு அனுபந்தங்களையும் எடுத்துச் சொல்லிவிட்டு முதல் அனுபந்தமான அதிகாரியைப்பற்றி சொல்லும்போது ஏழாவது சுலோகத்தில் அவனுக்கு நான்கு ஸாதனங்கள் இருக்கவேண்டுமென்று கண்டபடியால் அந்த ஸாதனங்கள், ஸாதனங்கள் என்றபெயுரை எப்படி அடைந்தன என்பதை முதல் இரண்டு சுலோகங்களில் குறிப்பிடுகிறார்: —

साधनचतुष्टयसंपत्तिः यस्यास्ति धीमतः पुंसः ।
तस्यैवैतत्फलसिद्धिः नान्यस्य किंचिदूनस्य ॥ १२ ॥

ஸாதநசதுஷ்டயஸம்பத்தி: யஸ்யாஸ்தி தீமத: பும்ஸ: ।
தஸ்யைவைதத் பலஸித்தி: நாந்யஸ்ய கிஞ்சிதூநஸ்ய ॥

**धीमतः**-புத்திசாலியான, **यस्य पुंसः**-எந்த புருஷனுக்கு, **साधनचतुष्टयसंपत्तिः**-நான்கு ஸாதனங்களின் சேர்க்கை, **अस्ति**-இருக்கிறதோ, **तस्यैव**-அவனுக்கே, **एतत्फलसिद्धिः**-இந்த பலன் ஸித்திக்கும், **किंचिदूनस्य**-சிறிது குறைவாயுள்ள, **अन्यस्य**-மற்றவனுக்கு, **न**-ஸித்திக்காது.

எந்த புத்திசாலியான புருஷனுக்கு நான்கு ஸாதனங்களின் நல்ல சேர்க்கை இருக்கிறதோ அவனுக்குத்தான் முன் குறிப்பிட்ட பலன் கைகூடும். இவைகளில் கொஞ்சம் குறைந்துள்ள எவனுக்கும் கைகூடாது. (12)

**चत्वारि साधनान्यत्र वदन्ति परमर्षयः ।**
**मुक्तिर्येषां तु सद्भावे नाभावे सिध्यति ध्रुवम् ॥ १३ ॥**

சத்வாரி ஸாதநாந்யத்ர வதந்தி பரமர்ஷய: ।
முக்திர் யேஷாம் து ஸத்பாவே நாபாவே ஸித்யதி
த்ருவம் ॥

**येषां सद्भावे**-எவைகள் இருந்தால், **मुक्तिः**-மோக்ஷம் ஏற்படுமோ, **अभावे**-எவைகளில்லா விட்டால், **ध्रुवं**-நிச்சயமாக, **न सिध्यति**-முக்தி ஸித்திக்காதோ -(அந்த), **साधनानि**-ஸாதனங்கள், **चत्वारि**-நான்கு (என்று), **अत्र**-இங்கு, **परमर्षयः**- மஹரிஷிகள், **वदन्ति**-சொல்கிறார்கள்.

எவை இருந்தால்தான் மோக்ஷம் நிச்சயமாக ஸித்திக்குமோ எவை இல்லையானால் மோக்ஷம் ஸித்திக்காதென்பது நிச்சயமோ, அந்த ஸாதனங்கள் இவ்விஷயத்தில் நான்கு என்று மஹர்ஷிகள் சொல்கிறார்கள்.

இந்நான்கும் சேர்ந்து இருந்தால்தான் முக்தி என்ற பலன் கிடைக்கும் இவைகளில்லாவிட்டால் முக்தி கிடைக்காது என்று சொல்வதால் முக்திக்கு இவை முக்யஸாதனங்கள் என்று தெரிகிறது. (13)

(அ) நான்கு ஸாதனங்களை இரு சுலோகங்களால் குறிப்பிடுகிறார்:—

आद्यं नित्यानित्यवस्तुविवेकः साधनं मतम् ।
इहामुत्रार्थफलभोगविरागो द्वितीयकम् ॥ १४ ॥

शमादिषट्कसंपत्तिः तृतीयं साधनं मतम् ।
तुरीयं तु मुमुक्षुत्वं साधनं शास्त्रसंमतम् ॥ १५ ॥

ஆத்யம் நித்யாநித்யவஸ்துவிவேக: ஸாதனம் மதம் ।
இஹாமுத்ரார்த்த பலபோக விராகோ த்விதீயகம் ॥

ஶமாதிஷட்கஸம்பத்தி: த்ருதீயம் ஸாதநம் மதம் ।
துரீயம் து முமுக்ஷுத்வம் ஸாதநம் ஶாஸ்த்ர ஸம்மதம் ॥

नित्यानित्यवस्तुविवेकः–நித்யாநித்ய வஸ்து விவேகம், आद्यं–साधनं–முதலாவது ஸாதனமாக, मतं–எண்ணப்பட்டுள்ளது. इहामुत्रार्थफलभोगविरागः-இஹாமுத்ரார்தத பல போக விராகம், द्वितीयकं–இரண்டாவது ஸாதநம், शमादिषट्कसंपत्तिः–ஸமாதி ஷட்கஸம்பத்தி, तृतीयं साधनं–மூன்றாவது ஸாதநமாக मतं–கருதப்பட்டுள்ளது मुमुक्षुत्वं तु–முமுக்ஷுத்வமோவெனில் तुरीयं साधनं–நான்காவது ஸாதநமாக शास्त्रसंमतं–சாஸ்திரங்களில் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது.

இவ்வகளில் முதலாவது ஸாதனம் நித்ய–அநித்யவஸ்து விவேகம் என்று கருதப்படுகிறது. இரண்டாவது இம்மை மறுமையில் வேண்டக்கூடிய பலன்களை அனுபவிப்பதில் ஆசை அற்றிருத்தல். சமம் முதலான ஆறும் நன்கு சேர்ந்திருப்பது மூன்றாவது ஸாதனம் என எண்ணப்படுகிறது. விடுதலையடைய வேண்டுமென்ற ஆவலை நான்காவதாக சாஸ்திரம் ஒப்புக் கொண்டிருக்கிறது. (14-15)

(அ) இவ்விதமாக நான்கு ஸாதனங்கள் எவை என்று சொல்லிவிட்டு அவைகளின் லக்ஷணங்களைச் சொல்லக்கருதி முதலாவதான நித்யாநித்ய வஸ்து விவேகம் என்றால் என்ன என்பதை ஆறு சுலோகங்களால் தெளிவுபடுத்துகிறார்:—

ब्रह्मैव नित्यं अन्यत्तु ह्यनित्यमिति वेदनम् ।
सोऽयं नित्यानित्यवस्तुविवेक इति कथ्यते ॥ १६ ॥

*ப்ரஹ்மைவ நித்யமந்யத்து ஹ்யநித்யமிதி வேதநம் ।*
*ஸோऽயம் நித்யாநித்யவஸ்துவிவேக இதி கத்யதே ॥*

**ब्रह्मैव**–ப்ரஹ்மம் ஒன்றுதான் **नित्यं**–உத்பத்தி விநாசமற்றது **अन्यत्तु**–மற்றதோ **अनित्यं हि**–அநித்யமானதல்லவா **इति वेदनं**–என்று அறிவது யாதொன்று உண்டோ **सोऽयं**–அந்த இது **नित्यानित्यवस्तुविवेकः इति**–நித்யாநித்யவஸ்துவிவேகம் என்று **कथ्यते**–சொல்லப்படுகிறது.

*பிரஹ்மம் தான் நித்யம், மற்றதோ அநித்யமே என்று அறிவது எதுவோ, அது நித்யா நித்ய வஸ்து விவேகம் என்று சொல்லப்படுகிறது.* (16)

(அ) *திருஷ்டாந்தம் மூலம் விளக்குகிறார்:—*

**मृदादिकारणं नित्यं त्रिषु कालेषु दर्शनात् ।**
**घटाद्यनित्यं तत्कार्यं यतस्तन्नाश ईक्ष्यते ॥ १७ ॥**

*ம்ருதாதி காரணம் நித்யம் த்ரிஷு காலேஷு தர்ஶநாத் ।*
*கடாத்யநித்யம் தத்கார்யம் யதஸ்தந்நாஶ ஈக்ஷ்யதே ॥*

**कारणं**–காரணமான **मृदादि**–மண் முதலியவை **त्रिषु कालेषु**–முக்காலங்களிலும் **दर्शनात्**–தெரிவதனால் **नित्यं**–நித்யமானது **तत्कार्यं**–அதன் காரியமான **घटादि**–குடம் முதலானவை **अनित्यं**–அநித்யமானது **यतः**–ஏனெனில் **तन्नाशः**–அதன் அழிவு **ईक्ष्यते**–காணப்படுகிறது.

*மண்முதலிய காரண வஸ்து மூன்று காலங்களிலும் தெரிவதினால் நித்யம். அவைகளின் கார்யமான குடம் முதலியவை அநித்யம், ஏனென்றால் அவைகளின் நாசம் பார்க்கப்படுகிறது.*

**तथैवैतज्जगत् सर्वं अनित्यं ब्रह्मकार्यतः ।**
**तत्कारणं परं ब्रह्म भवेन्नित्यं मृदादिवत् ॥ १८ ॥**

*ததைவைதத் ஜகத் ஸர்வம் அநித்யம் ப்ரஹ்மகார்யத: ।*
*தத்காரணம் பரம் ப்ரஹ்ம பவேத் நித்யம் ம்ருதாதிவத் ॥*

**तथैव**-அதுபோலவே **एतत्**-இந்த **जगत् सर्वं**-பிரபஞ்சம் முழுவதும் **ब्रह्मकार्यतः**-பிரஹ்மத்திலிருந்து உண்டாகும் காரியமாக இருப்பதால் **अनित्यं**-அநித்யமானது. **तत्कारणं**-அந்த பிரபஞ்சத்தின் காரணமான **परं ब्रह्म**-பரப்ரஹ்மம் **मृदादिवत्**-மண்முதலியவைபோல் **नित्यं भवेत्**-நித்யமாக இருக்கும்.

அவ்விதமே இந்த ஜகத்து பூராவும் பிரஹ்மத்தின் கார்யமாயிருத்தலால் அநித்யம். அந்த ஜகத்தின் காரணமாகிய பரப்பிரஹ்மம், மண் முதலியவை போல், நித்யமாகும்.

ப்ரஹ்மம் நித்யம் பிரபஞ்சம் அநித்யம் என்பதற்கு யுக்தியைக் கூறி திருஷ்டாந்தத்தைக்காட்டுகிறார். உலகில் கார்யம் அநித்யம் என்பதையும் காரணப்பொருள் நித்யமென்பதையும் கண்டிருக்கிறோம். உதாஹரணமாக மண்ணிலிருந்து குடம் உண்டாவதையும் மண்ணிலேயே அழிந்துவிடுவதையும் நாம் காண்கிறோம் இதனால் உத்பத்தி விநாசங்களுடன் கூடின கார்யப்பொருளான குடம் முதலியவை அநித்யம் என்று தெரிகிறது. காரணமான மண், குடம் உண்டாவதற்கு முன்னும், குடம் இருக்கும் காலத்திலும், குடம் அழிந்தபிறகும் இருக்கிறபடியால் நித்யமானது இதேபோல் பிரபஞ்சம் முழுவதற்கும் காரணமான ப்ரஹ்மத்திலிருந்து பிரபஞ்சம் உண்டாகி அதிலேயே இருந்து அதிலேயே நாசம் அடைகிறது. ஆகையால் நடுவில் உண்டாகி அழியும் கார்யமான பிரபஞ்சம் முழுவதும் அநித்யமென்றும் முக்காலங்களிலும் உள்ள காரணமான ப்ரஹ்மம் நித்யமென்றும் தீர்மானித்துக்கொள்ள வேண்டும் இங்கு திருஷ்டாந்தத்திற்காக மண்ணை நித்யமென்று கூறினார். குடத்தைக்காட்டிலும் அதிககாலமுள்ளது என்பது தான் அதன் கருத்து. மண்ணுக்கும் வேறொருகாரணமிருப்பதால் அதையொட்டி மண் காரியமாகவும் அநித்யமாகவும் ஆகிவிடுகிறது. எல்லாவற்றிற்கும் காரணமான ப்ரஹ்மத்திற்கு வேறு காரணமில்லாததால் அது எப்பொழுதும் காரணம் தான். ஆகையால் அது ஒன்றே நித்யம். மற்றவைகளெல்லாம் காரணமாகவும் காரியமாகவும் ஆகிறபடியால் அநித்யம் தான். (18)

सर्वं वक्त्यस्य तस्माद्वा एतस्मादित्यपि श्रुतिः ।
सकाशाद्ब्रह्मणस्तस्मात् अनित्यत्वे न संशयः ॥ १९ ॥

ஸர்கம் வக்த்யஸ்ய தஸ்மாத் வா ஏதஸ்மாதித்யபி ச்ருதி: 1
ஸகாசாத் ப்ரஹ்மணஸ்தஸ்மாதநித்யத்வே ந ஸம்சய: 11

तस्मात् वा एतस्मादिति श्रुतिरपि–'தஸ்மாத் வா ஏதஸ்மாத்' என்று ஆரம்பிக்கும் தைத்திரீய உபநிஷத்தும், ब्रह्मणः सकाशात्– ப்ரஹ்மத்திலிருந்து, अस्य–இந்த பிரபஞ்சத்திற்கு, सर्ग–ஸிருஷ்டியை वक्ति–கூறுகிறது. तस्मात्–ஆகையால், अनित्यत्वे–பிரபஞ்சம் அநித்யம் என்பதில், न संशयः–ஸந்தேஹமில்லை.

तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः என்று ஆரம்பித்து தைத்திரீயோபநிஷத்து ஆகாசம் முதலான பிரபஞ்சம் முழுவதும் ஆத்மரூபமான ப்ரஹ்மத்திலிருந்து உண்டானதாகக் கூறுகிறது. குடம் மண்ணிலிருந்து உண்டாவதை நாம் நேரில் காண்பதால் அது காரியம் என்பதையும் அதனால் அநித்யம் என்பதையும் தீர்மானிக்கமுடிகிறது. இதுபோல் பிரபஞ்சம் உண்டாவதை நாம் நேரில் காணமுடிகிறதில்லை. ஆனாலும் உபநிஷத்துக்கள் பிரஹ்மத்திலிருந்து பிரபஞ்சம் உண்டாவதைப் பற்றி விரிவாகக் கூறுவதால் பிரபஞ்சம் காரியம் என்பதையும் அநித்யம் என்பதையும் தீர்மானித்துக் கொள்ளலாம். ஆகவே பிரபஞ்சம் அநித்யம் என்பதில் கொஞ்சமும் ஸந்தேஹமில்லை. (19)

सर्वस्यानित्यत्वे सावयवत्वेन सर्वतः सिद्धे ।
वैकुण्ठादिषु नित्यत्वमतिर्भ्रम एव मूढबुद्धीनाम् ॥ २० ॥

ஸர்வஸ்யாநித்யத்வே ஸாவயவத்வேந ஸர்வத: ஸித்தே 1
வைகுண்டாதிஷு நித்யத்வமதிர் ப்ரம ஏவ
மூடபுத்தீநாம் 11

सावयवत्वेन–அவயவங்களோடு கூடியிருப்பதினால், सर्वस्य–எல்லாப் பொருளிற்கும், अनित्यत्वे–அழியும் தன்மை, सर्वतः–எல்லா விதத்திலும், सिद्धे–தீர்மானமாயிருக்கும் பொழுது, वैकुण्ठादिषु–வைகுண்டம் முதலானவைகளில், मूढबुद्धीनां–புத்தி மோஹம் கொண்டவர்களின், नित्यत्वमतिः–நித்யம் என்ற எண்ணமானது, भ्रम एव–ப்ராந்தியே.

சிலர் "அந்தந்த தேவதையின் உபாஸனையால் அடையப்படும் வைகுண்டம், கைலாஸம் முதலான லோகங்கள் சாச்வதமானவை அவற்றிற்கு அழிவே கிடையாது இதுதான் மோக்ஷம் உபாஸகர்களும் இங்கு சாச்வதமாயிருக்கின்றனர்." என்று கூறுகின்றனர் இது யுக்திக்குப் பொருந்தாது. அவயவத்துடன் கூடியபொருள் எல்லாம் நித்யமல்ல. அவற்றிற்கு உத்பத்தி விநாசமுண்டு என்பது யாவரும் ஒப்புக்கொண்ட விஷயம் எனவே இந்த லோகங்களுக்கும் அவயவமிருப்பதால் நித்யமாக எவ்வாறு இருக்க முடியும்? ப்ராந்தியால் தான் மூடர்கள் இவ்வாறு கூறுகிறார்கள்.

अनित्यत्वं च नित्यत्वमेवं यच्छ्रुतियुक्तिभिः ।
विवेचनं नित्यानित्यविवेक इति कथ्यते ॥ २१ ॥

அநித்யத்வம் ச நித்யத்வம் ஏவம் யத் ச்ருதியுக்திபி: ।
விவேசநம் நித்யாநித்யவிவேக இதி கத்யதே ॥

एवं-இவ்வாறு, श्रुतियुक्तिभिः-ச்ருதிகளாலும் யுக்திகளாலும், अनित्यत्वं-அநித்யத்தன்மையும், नित्यत्वं च-நித்யத்தன்மையும், विवेचनं यत्-பிரித்து அறிவது யாதோ (அது), नित्यानित्यविवेक इति-நித்யாநித்யவிவேகம் என்று, कथ्यते-சொல்லப்படுகிறது.

இவ்விதமாக வேதம் யுக்தி இவைகளால் அநித்யத் தன்மையையும் நித்யத்தன்மையையும் பிரித்து அறிவது எதுவோ, அது நித்யா நித்ய விவேகம் என்று சொல்லப்படுகிறது. (21)

(அ) விவேகத்தினால் ஏற்படக்கூடிய இரண்டாவது ஸாதனமான வைராக்கியத்தைப்பற்றி விஸ்தாரமாக 22 முதல் 93 முடிய 72 சுலோகங்களில் அதன் லக்ஷணத்தையும் அவசியத் தன்மையையும் பிரயோஜனத்தையும் வற்புறுத்துகிறார்:—

ऐहिकामुष्मिकार्थेषु ह्यनित्यत्वेन निश्चयात् ।
नैःस्पृह्यं तुच्छबुद्ध्या यत्तद्वैराग्यमितीर्यते ॥ २२ ॥

ஐஹிகாமுஷ்மிகார்த்தேஷு ஹ்யநித்யத்வேந நிச்சயாத் ।
நைःஸ்ப்ருஹ்யம் துச்சபுத்த்யா யத் தத்
வைராக்யமிதீர்யதே ॥

**ऐहिकामुष्मिकार्थेषु**—இம்மையிலும் மறுமையிலும் கிடைக்கும் பொருள்களில், **अनित्यत्वेन**—அழியும் தன்மை உள்ளதாக, **निश्चयात्**—தீர்மானத்தினுலும், **तुच्छबुद्ध्या**—ஸாரமற்றது என்ற எண்ணத்தாலும், **नैःस्पृह्यं**—ஆசையற்றிருக்கும் தன்மை, **यत्**—யாதோ, **तत्**—அது, **वैराग्यमिति**—வைராக்யமென்று, **ईर्यते**—சொல்லப்படுகிறது.

*இவ்வுலகிலும் மேலுலகங்களிலும் உள்ள எல்லாப்பொருள்களும் அழிந்துபோகக் கூடியவை இருக்கும் காலத்திலும் அவை ஸாரமற்றவை பொய்யாகத்தோன்றுபவை என்று விசாரம் செய்து தீர்மானித்து அவற்றில் ஆசைகொள்ளாதிருத்தலே வைராக்யமெனப்படும்.* **(22)**

**नित्यानित्यपदार्थविवेकात्पुरुषस्य जायते सद्यः ।**
**स्रक्चन्दनवनितादौ सर्वत्रानित्यवस्तुनि विरक्तिः ॥ २३ ॥**

*நித்யாநித்யபதார்த்த விவேகாத் புருஷஸ்ய ஜாயதே ஸத்ய:* **।**
*ஸ்ரக்சந்தநவநிதாதௌ ஸர்வத்ராநித்யவஸ்துநி விரக்தி:* **॥**

**नित्यानित्यपदार्थविवेकात्**—இது நித்யம் இது அநித்யம் என்று பொருள்களைப் பிரித்துத் தெரிந்துகொள்வதால், **पुरुषस्य**—மனிதனுக்கு **सद्यः**—உடனே, **स्रक्चन्दनवनितादौ**—பூமாலை, சந்தனம், பெண் முதலான, **सर्वत्रानित्यवस्तुनि**—எல்லா அநித்யப்பொருளிலும், **विरक्तिः**—வைராக்யம், **जायते**—உண்டாகிறது.

*பொருள்களின் தன்மையை நன்கு விசாரித்துத் தெரிந்துகொள்ளாததால் அவற்றில் ஆசை ஏற்படுகிறது. இவைகளெல்லாம் சாச்வதமல்ல ப்ரஹ்மம் ஒன்றே நித்யமானது என்று பிரித்துத்தெரிந்துகொண்டுவிட்டால் அநித்யமான பொருளில் ஆசை ஏற்படாது. நான்கு ஸாதனங்களில் முதலாவதான நித்யாநித்ய விவேகம் இரண்டாவதான வைராக்யத்திற்குக் காரணமாகிறது. ஆகையால் ஒருவனுக்கு வைராக்யம் ஏற்படவில்லையானல் நித்யாநித்ய வஸ்து விவேகம் இன்னம் ஸித்திக்கவில்லை என்றே தாத்பர்யம். அது நன்கு ஸித்தித்திருந்தால் வைராக்யம்*

ஏற்படுவதில் தாமஸமேற்பட நியாயமில்லை யென்பதை ஆசார்யார் காட்டுகிறார். (23)

(அ) வைராக்யம் தீவ்ரமாக இருக்கவேண்டுமென்றும் தீவிரமாக ஏற்படுவதற்கு விஷயங்களிலுள்ள தோஷத்தை நன்கு உணர்வதே காரணமாகுமென்றும் தோஷத்தை உணர்வதற்கு ஒவ்வொரு விஷயத்தின் தன்மையையும் நன்கு பரிசீலனை செய்து அதன் வாஸ்தவமான நிலையை அறிந்து கொள்ளவேண்டுமென்றும் மேலால் மூன்று சுலோகங்களில் குறிப்பிடுகிறார்:—

काकस्य विष्ठावदसह्यबुद्धि-
भोग्येषु सा तीव्रविरक्तिरिष्यते ।
विरक्तितीव्रत्वनिदानमाहु-
र्भोग्येषु दोषेक्षणमेव सन्तः ॥ २४ ॥

காகஸ்ய விஷ்டாவதஸஹ்யபுத்தி:
போக்யேஷு ஸா தீவ்ரவிரக்திரிஷ்யதே ।
விரக்திதீவ்ரத்வநிதாநமாஹு:
போக்யேஷு தோஷேக்ஷணமேவ ஸந்த: ॥

**काकस्य**-காக்கையின், **विष्ठावत्**-விஷ்டையில்போல், **भोग्येषु**-அநுபவிக்கப்படும் விஷயங்களில், **असह्यबुद्धिः**-ஸஹிக்க முடியாத யாதொரு எண்ணமுண்டோ, **सा**-அது, **तीव्रविरक्तिः**-தீவிர வைராக்ய மாக, **इष्यते**-எண்ணப்படுகிறது. **भोग्येषु**-போக்யமான விஷயங்களில் **दोषेक्षणमेव**-தோஷத்தைக் கண்டுகொளவதையே, **विरक्तितीव्रत्व-निदानं**-தீவ்ரவைராக்யத் தன்மைக்குக காரணமாக, **सन्तः**-பெரியோர்கள் **आहुः**-கூறுகிறார்கள்.

காக்கையின் விஷ்டை கண்ணில் பட்டுவிட்டால் அதைப் பார்க்கவே முடியாதபடி ஓர் வெறுப்பு, ஜுகுப்ஸை ஏற்பட்டு கண்ணை மூடிக்கொண்டு விலகிப்போய்விடுகிறோம் நாம் அனுபவிக்கும் பொருள்கள் யாவற்றிலும் காக விஷ்டையில் போல் வெறுப்பு ஏற்படுமானல் அதுவே தீவ்ர வைராக்யமெனப்படும் விவேகத்தால் அநித்யம் என்ற எண்ணம் ஏற்பட்டு பொருள்களில் வைராக்யம் ஏற்பட்டாலும் அந்த வைராக்யம் தீவ்ரமாவதற்கு

அப்பொருள்களில் இயற்கையாக அமைந்துள்ள தோஷங்களைக் கண்டுபிடித்துத் தெரிந்துகொள்ளவேண்டும் வஸ்துக்களின் தோஷம் தெரிந்துவிட்டால் பிறகு கொஞ்சமும் ஆசை ஏற்படாது.

प्रदृश्यते वस्तुनि यत्र दोषो
न तत्र पुंसोऽस्ति पुनः प्रवृत्तिः ।
अन्तर्महारोगवतीं विजानन्
को नाम वेश्यामपि रूपिणीं व्रजेत् ॥ २५ ॥

ப்ரத்ருச்யதே வஸ்துநி யத்ர தோஷோ
ந தத்ர பும்ஸோऽஸ்தி புந: ப்ரவ்ருத்தி: ।
அந்தர்மஹாரோகவதீம் விஜாநன்
கோ நாம வேச்யாமபி ரூபிணீம் வ்ரஜேத் ॥

यत्र वस्तुनि–எந்தப் பொருளில், दोषः–தோஷமானது, प्रदृश्यते–நன்கு காணப்படுகிறதோ, तत्र–அதில், पुंसः–மனிதனுக்கு, पुनः–மறுபடியும், प्रवृत्तिः–ப்ரவிருத்தியானது, नास्ति–இல்லை, रूपिणीमपि–அழகுள்ளவளாயிருந்தபோதிலும், वेश्यां–தாஸியை, अन्तर्महारोगवतीं–உள்ளே பெருவியாதியுள்ளவளாக, विजानन्–அறிந்துகொண்ட, को नाम–எவன்தான், व्रजेत्–செல்வான் ?

பொருள்களிலுள்ள தோஷம் தெரியாதவரை அதை அடைவதில் மனிதன் ஈடுபடுவான். தோஷம் தெரிந்துவிட்டால் அதனருகிலும் மனிதன் செல்வானு? தாஸி மனதைக்கவரும் மிக்க அழகுள்ளவள்தான் ஆனாலும் அவள் உடலில் மஹாரோகம் ஏற்பட்டுவிட்டது. எத்தனை மறைத்தபோதிலும் ரோகமிருப்பது தெரிந்துவிட்டது இதுவரை அவளிடம் போய்க்கொண்டிருந்தவன் கூட வியாதி இருப்பது தெரிந்தபிறகு அவள் அருகில் செல்வானு? மாட்டான். இதுபோலவே எல்லாப்பொருள்களிலும். (25)

अत्रापि चान्यत्र च विद्यमान-
पदार्थसंमर्शनमेव कार्यम् ।
यथाप्रकारार्थगुणाभिमर्शनं
सन्दर्शयत्येव तदीयदोषम् ॥ २६ ॥

அத்ராபி சாந்யத்ர ச வித்யமாந
பதார்த்த ஸம்மர்சநமேவ கார்யம் ।
யதாப்ரகாரார்த்த குணாபிமர்சனம்
ஸந்தர்சயத்யேவ ததீயதோஷம் ॥

**अत्रापि च**-இங்கும், **अन्यत्र च**-வேறிடத்திலும், **विद्यमान**-இருக்கும், **पदार्थ**-பொருள்களின், **संमर्शनं**-ஆராய்ச்சியை, **कार्यमेव**-கட்டாயம் செய்யவேண்டும். **यथाप्रकारार्थगुणाभिमर्शनमेव**-பொருள்களின் ஸ்வபாவங்களை உள்ளது உள்ளபடி ஆராய்ச்சிசெய்வதே, **तदीयदोषं**-அவைகளைச் சேர்ந்த தோஷங்களை, **संदर्शयति**-நன்கு எடுத்துக் காட்டுகிறது.

இங்கேயோ வேறு எங்கேயோ உள்ள பதார்த்தங்களை நன்கு பரிசீலனை செய்யவே வேண்டும். அவை வாஸ்தவத்தில் எப்படியிருக்கிறதென்று அவைகளின் அம்சங்களை நன்கு பரிசீலனை செய்வது அவைகளின் தோஷத்தைத் தெளிவாக எடுத்துக் காட்டவே காட்டும். (26)

(அ) இவ்விதமாக பொதுவாக நாம் செய்யவேண்டியது என்னவென்று குறிப்பிட்டு போக்கிய பதார்த்தங்களைப்பற்றி தனித்தனியே விசாரிக்கவாரம்பிக்கையில் முதலில் நாம் ஜன்மம் எடுத்து வளர்ந்து வந்து இறந்து பரலோகம் போய் வரும்வரை அனுபவிக்கும்படி ஏற்படும் துன்பங்களை வர்ணித்து இவைகளை கவனித்தாலே இனிப் பிறப்பு இறப்பு வேண்டாமென்ற எண்ணம் ஏற்பட்டு வைராக்யம் வராமலிருக்குமாவென்று ஸ்ரீமத் ஆசார்யர் கேட்கிறார்:—

कुक्षौ स्वमातुर्मलमूत्रमध्ये
स्थितिं तदा विट्क्रिमिदंशनं च ।
तदीयकौक्षेयकवह्निदाहं
विचार्य को वा विरतिं न याति ॥ २७ ॥

குக்ஷௌ ஸ்வமாதுர் மலமூத்ரமத்யே
ஸ்திதிம் ததா விட்க்ருமிதம்சநம் ச ।

*ததீய கௌக்ஷேயக வஹ்நிதாஹம்*
*விசார்ய கோ வா விரதிம் ந யாதி ॥*

**स्वमातुः**-தன் தாயாரின், **कुक्षौ**-வயற்றில், **मलमूत्रमध्ये**-மலம், மூத்திரம் இவைகளின் நடுவில், **स्थितिं**-இருப்பையும், **तदा**-அப்பொழுது **विट्कृमिदंशनं च**-மலத்திலுள்ள புழுக்கள் கடிப்பதையும், **तदीय-कौक्षेयकवह्निदाहं**-அவளுடைய வயிற்றிலுள்ள ஜாடராக்னியின் சூட்டையும், **विचार्य**-ஆராய்ந்துபார்த்து, **को वा**-எவன்தான், **विरतिं**-வெறுப்பை, **न याति**-அடையமாட்டான் ?

*தன்னுடைய தாயாரின் வயற்றில் மலமூத்திர மத்தியில் இருப்பதையும், அப்பொழுது மலத்திலுள்ள புழுக்களால் கடிக்கப் படுவதையும், அவளுடைய வயற்றிலுள்ள ஜாடராக்னியின் உஷ்ணத்தினல் சுடப்படுவதையும், விசாரித்துப்பார்த்தால் எவன் தான் வைராக்யத்தையடையமாட்டான்? இந்த சுலோகத்தில் கர்ப்பவாஸத்திலுள்ள துன்பங்களை நன்ருக குறிப்பிடுகிருர். ஒவ்வொருவரும் கர்பத்தில் வஸித்துத்தான் பிறக்கவேண்டும். இப்பொழுது அது மறந்து போனலும் ஊகித்துத் தெரிந்து கொள்ளலாம் சரீரமெடுக்கும்தோறும் இவை கட்டாயமுண்டு வைராக்யத்துடன் பிறப்பற்ற நிலையையடைந்தால் தான் இவை நீங்கும்.* (27)

(அ) *சைசவத்திலுள்ள கஷ்டங்களைக் குறிப்பிடுகிருர்:—*

स्वकीयविण्मूत्रनिमज्जनं तत्
चोत्तानगत्या शयनं तदा यत् ।
बालग्रहाद्याहतिभाक्च शैशवं
विचार्य को वा विरतिं न याति ॥ २८ ॥

*ஸ்வகீய விண்மூத்ர நிமஜ்ஜநம் தத்*
*சோத்தாநகத்யா மயநம் ததா யத் ।*
*பாலக்ரஹாத்யாஹதிபாக் ச மைமவம்*
*விசார்ய கோ வா விரதிம் ந யாதி ॥*

**स्वकीयविण्मूत्रनिमज्जनं**-தன்னுடைய மல மூத்திரங்களில் அமிழ்ந்

திருப்பது, **उत्तानगत्या शयनं च**-மல்லாந்த நிலையில் படுத்திருப்பது, **तदा**-அப்பொழுது, **बालग्रहाद्याहतिभाक् च**-பாலக்ரஹ பீடைகளை அடைவது இவ்விதமான, **यत्**-எந்த, **शैशवं**-குழந்தை பருவமுண்டோ, **तत्**-அதை, **विचार्य** - விசாரித்து, **को वा** - எவன்தான், **विरतिं**-வெறுப்பை, **न याति**-அடையமாட்டான் ?

*தன்னுடைய மலமூத்திரத்திலேயே மூழ்கிக்கிடப்பது; அப்பொழுது மல்லாந்தே படுத்திருக்கவேண்டியநிலை குழந்தைகளுக்கு ஏற்படக்கூடிய கிரஹபீடை முதலிய கஷ்டங்கள் இவைகளுடன் கூடிய குழந்தைப் பருவத்தை விசாரித்துப்பார்த்தால் எவனுக்குத்தான் வைராக்கியம் வராது? மலமூத்திரங்களில் எவ்வளவு நேரமிருந்தபோதிலும், மல்லாந்த நிலையில் எத்தனை நேரமிருந்தபோதிலும் பிறரின் உதவியின்றி தானாக குழந்தைகள் விலக முடியாது. சிசுக்களுக்கு க்ரஹபீடைகளும் மிகவும் அதிகம்.*

*(அ) கௌமார நிலையை விளக்குகிறார்:—*

**स्वीयैः परैस्ताडनमज्ञभाव-**
**मत्यन्तचापल्यमसत्क्रियां च ।**
**कुमारभावे प्रतिषिद्धवृत्तिं**
**विचार्य को वा विरतिं न याति ॥ २९ ॥**

*ஸ்வீயை: பரைஸ்தாடநமஜ்ஞபாவம்*
*அத்யந்த சாபல்ய மஸத்க்ரியாம் ச ।*
*குமாரபாவே ப்ரதிஷித்த வ்ருத்திம்*
*விசார்ய கோ வா விரதிம் ந யாதி ॥*

**कुमारभावे**-குமாரனாக (சிறுவனாக) இருக்கும் பர்வத்தில், **स्वीयैः**-தன்னைச் சேர்ந்தவர்களாலும், **परैः**-பிறர்களாலும், **ताडनं**-அடிப்பதையும் **अज्ञभावं**-அறியாத்தன்மையையும், **अत्यन्तचापल्यं**-மிகுந்த சஞ்சல ஸ்வபாவத்தையும், **असत्क्रियां च**-கெட்ட செய்கையையும், **प्रतिषिद्ध-वृत्तिं**- தடுக்கப்பட்ட காரியங்களில் பிரவிருத்தியையும், **विचार्य**-ஆராய்ந்து, **को वा**-எவன்தான், **विरतिं**-வைராக்யத்தை, **न याति**-அடையமாட்டான் ?

திறுவனுயிருக்கும் நிலையில் ஒன்றிலும் சரியான அறிவு இருக்காது. எந்தப்பொருளைக் கண்டாலும் ஆசை ஏற்படும் ஏதாவது சேஷ்டைகளைச் செய்துகொண்டே இருப்பர். செய்யத் தகாத காரியத்தையும் செய்வர். இதனால் தன்னைச் சேர்ந்தவரும் பிறரும் அடிப்பார்கள். அதைத்தடுக்க முடியாமல் பொருத்துக் கொள்ளத்தான் வேண்டும் இம்மாதிரியான கௌமார நிலையி லுள்ள துன்பங்களை எண்ணிப்பார்த்தால் யாருக்குத்தான் பிறவியில் வைராக்யம் வராது? (29)

(அ) வாலிபபர்வத்தின் சேஷ்டைகளைக் கூறுகிறார்:—

मदोद्धतिं मान्यतिरस्कृतिं च
 कामातुरत्वं समयातिलङ्घनम् ।
तां तां युवत्योदितदुष्टचेष्टां
 विचार्य को वा विरतिं न याति ॥ ३० ॥

மதோத்ததிம் மாந்யதிரஸ்க்ருதிம் ச
 காமாதுரத்வம் ஸமயாதிலங்கநம் ।
தாம் தாம் யுவத்யோதித துஷ்ட சேஷ்டாம்
 விசார்ய கோ வா விரதிம் ந யாதி ॥

**मदोद्धतिं**-கர்வம் மேலோங்கியிருப்பதையும், **मान्यतिरस्कृतिं च**-கொண்டாடத்தக்கவர்களை அவமதிப்பதையும், **कामातुरत्वं**-காமத்தில் ஈடுபட்டிருப்பதையும், **समयातिलंघनं**-மரியாதையை மீறுவதையும், **तां तां**-அந்தந்த, **युवत्या**-யுவதிமூலம், **उदितदुष्टचेष्टां**-ஏற்பட்ட கெட்ட செய்கையையும், **विचार्य**-விசாரித்து, **को वा**-எவன்தான், **विरतिं**-வைராக்யத்தை, **न याति**-அடையமாட்டான்?

மதச்செருக்கையும், வெகுமதிக்கவேண்டியவர்களை திரஸ் காரம் செய்வதையும், காமத்தில் ஈடுபட்டிருப்பதையும், கட்டுப் பாடுகளை மீறி நடப்பதையும், ஸ்திரீ மூலம் ஏற்பட்ட பலவிதமான துஷ்ட செயல்களையும், விசாரித்துப்பார்த்தால் எவன்தான் வைராக்யத்தை அடையமாட்டான்? வாலிப நிலையில் கர்வங் கொண்டு பெரியோர்களை அவமதித்து லோகத்திலும் சாஸ்திரங் களிலும் உள்ள கட்டுப்பாடுகளை மீறி காமத்தால் மதிமயங்கி

பெண்ணுக்கு அடிமையாகி கெட்டகாரியம் பல புரிந்து இதன் பலனக நரகத்தில் விழ்வான். (30)

(அ) கிழத்தன்மையை இரண்டு சுலோகங்களில் வர்ணிக்கிறார்:—

विरूपतां सर्वजनादवज्ञां
सर्वत्र दैन्यं निजबुद्धिहैन्यम् ।
वृद्धत्वसंभावितदुर्दशां तां
विचार्य को वा विरतिं न याति ॥ ३१ ॥

விருபதாம் ஸர்வஜநாதவஜ்ஞாம்
ஸர்வத்ர தைந்யம் நிஜபுத்திஹைந்யம் ।
வ்ருத்தத்வ ஸம்பாவிததுர்தசாம் தாம்
விசார்ய கோ வா விரதிம் ந யாதி ॥

**विरूपतां**-குரூபியாயிருப்பதையும், **सर्वजनात्**-எல்லா மனிதரிட மிருந்தும், **अवज्ञां**-அவமதிப்பையும், **सर्वत्र**-எங்கும், **दैन्यं**-தீனனுக இருப்பதையும், **निजबुद्धिहैन्यं**-தனது புத்திக்குறைவையும், **तां**-அந்த, **वृद्धत्वसंभावित**-கிழட்டுத்தன்மையால் ஏற்பட்ட, **दुर्दशां**-கெட்ட நிலையையும், **विचार्य**-விசாரித்து **को वा**-எவன்தான், **विरतिं**-வைராக்யத்தை, **न याति**-அடையமாட்டான் ?

விகாரமடைந்த ருபத்துடனிருப்பது, எல்லா ஜனங்களாலும் அவமதிக்கப்படுவது எல்லா விஷயங்களிலும் தைன்யத்துடனிருக்க வேண்டியிருப்பது, தன் புத்திக்கு ஏற்படும் சக்திக் குறைவு, கிழட்டுத்தனத்தால் ஏற்படக்கூடிய பலவித துர்தசை, இவைகளை விசாரித்தால் எவன்தான் வைராக்யத்தை அடையமாட்டான்? கிழவனுகிவிட்டால் யாருக்குமே அழகு நீங்கி புத்தி குறைந்து சின்னகாரியத்திற்கும் கெஞ்ச வேண்டிய நிலை ஏற்படுகிறது. எல்லோரும் அவமதிக்கின்றனர். (31)

पित्तज्वरार्शःक्षयगुल्मशूल-
श्लेष्मादिरोगोदिततीव्रदुःखम् ।

दुर्गन्धमस्वास्थ्यमनूनचिन्तां
विचार्य को वा विरतिं न याति ॥ ३२ ॥

*பித்த ஜ்வரார்ஶ: க்ஷயகுல்ம ஶூல*
*ச்லேஷ்மாதி ரோகோதித தீவ்ரதுக்கம் ।*
*துர்கந்தமஸ்வாஸ்த்ய மநூநசிந்தாம்*
*விசார்ய கோ வா விரதிம் ந யாதி ॥*

**पित्त**–பித்தம், **ज्वर**–ஜ்வரம், **अर्शः**–மூலம், **क्षय**–க்ஷயம், **गुल्म**–வயிற்றில் கட்டி, **शूल**–வயிற்றுவலி, **श्लेष्मादि**–கபம் முதலான, **रोगोदित**–வியாதிகளால் உண்டாகும், **तीव्रदुःखं**–கடுமையான துக்கத்தையும், **दुर्गन्धं**-துர்நாற்றத்தையும், **अस्वास्थ्यं**–ஸ்வாதீனமில்லாமல் இருப்பதையும், **अनूनचिन्तां**–குறைவில்லாத கவலையையும், **विचार्य**–விசாரித்து, **को वा**–எவன்தான், **विरतिं**–வெறுப்பை, **न याति**–அடையமாட்டான் ?

*பித்தம், ஜ்வரம், மூலம், க்ஷயம், கட்டி. வயற்றுவலி கபம், முதலான ரோகங்களால் ஏற்படும் கடுமையான துக்கத்தையும், துர்நாற்றத்தையும், ஸ்வாதீனமற்றிருக்கும் நிலமையையும், கொஞ்சமேனும் குறைவன்னியில் இருக்கின்ற கவலையையும், விசாரித்துப் பார்த்தால் எவன்தான் வைராக்யத்தை அடையமாட்டான் ? கிழட்டுத்தன்மை வந்துவிட்டால் எல்லா வியாதிகளும் சரீரத்தில் துர்வாஸனையும் சேர்ந்துவிடும். ஒன்றிலும் ஸ்வாதீனமிருக்காது கவலைமட்டும் குறையாது* "**वृद्धस्तावच्चिन्तासक्तः**" *(பஜகோவிந்த ஸ்தோத்ரம் ச. 7)* **(32)**

*(அ) பிராணன் நீங்கும் காலத்தில் உண்டாகும் துன்பத்தை கூறுகிறார்:—*

यमावलोकोदितभीतिकम्प-
मर्मव्यथोच्छ्वासगतीश्च वेदनाम् ।
प्राणप्रयाणे परिदृश्यमानां
विचार्य को वा विरतिं न याति ॥ ३३ ॥

*யமாவலோகோதித பீதி கம்ப*
*மர்ம வ்யதோச்ச்வாஸ கதீச்ச வேதநாம் I*
*ப்ராணப்ரயாணே பரித்ருச்யமாநாம்*
*விசார்ய கோ வா விரதிம் ந யாதி II*

**यमावलोकोदित**-யமனைப் பார்த்ததால் உண்டாகும், **भीति**-பயம், **कम्प**-நடுக்கம், **मर्मव्यथा**-மர்மஸ்தானங்களில் வலி, **उच्छ्वासगतीश्च**-மூச்சு மேல்நோக்கிச் செல்வது இவைகளையும், **प्राणप्रयाणे**-பிராணன் வெளிக் கிளம்பும்போது, **परिदृश्यमानां**-காணப்படுகிற, **वेदनां**-துன்பத்தையும், **विचार्य**-விசாரித்து, **को वा**-எவன்தான், **विरतिं**-வைராக்யத்தை, **न याति**-அடையமாட்டான் ?

*மரணசமயத்தில் காணப்படும் யமனைப் பார்ப்பதினால் ஏற்படும் பயம், நடுக்கம், மர்மஸ்தானங்களில் வலி, மூச்சு மேலோங்குவது இவைகளையும் பிராணன் வெளிக்கிளம்பும்போது உண்டாகும் காலத்தில் ஆயிரம் தேள்கடிக்கு சமமான வேதனையையும் விசாரித்துப்பார்த்தால் எவன்தான் வைராக்யத்தை அடையமாட்டான் ?* (33)

**अङ्गारनद्यां तपने च कुम्भी-**
**पाकेऽपि वीच्या (प्यवीच्या) मसिपत्रकानने ।**
**दूतैर्यमस्य क्रियमाणबाधां**
**विचार्य को वा विरतिं न याति ॥ ३४ ॥**

*அங்காரநத்யாம் தபநே ச கும்பீ-*
*பாகேபி வீச்யாம் (ப்யவீச்யாம்) அஸிபத்ரகாநநே I*
*தூதைர் யமஸ்ய க்ரியமாண பாதாம்*
*விசார்ய கோ வா விரதிம் ந யாதி II*

**अङ्गारनद्यां**-நெருப்புத்தணல் நதியில், **तपने च**-வாட்டுவதிலும், **कुम्भीपाकेऽपि**-கும்பீபாகத்திலும், **(अ)वीच्यां**-(அ)வீசியிலும் **असिपत्र कानने**-அஸிபத்ரவநத்திலும், **यमस्य**-யமனுடைய, **दूतैः**-கிங்கரர்களால், **क्रियमाणबाधां** - செய்யப்படும் துன்பத்தை, **विचार्य**-

விசாரித்து, को वा-யார்தான், विरतिं-வைராக்யத்தை, न याति-அடைய மாட்டார்?

தணலே பிரவஹிக்கும் நதியில் வாட்டும் போதும், கும்பீபாகம் (கொப்பரையில் போட்டு வேகவைக்கிறதென்ற நரகம்), அவீசி (அலையற்று ஸ்தப்தமாயிருக்கும் அவீசி என்ற நரகம்) அஸிபத்ர காநநம் (கத்திகளையே இலைகளாகவுடைய மரங்கள் அடர்ந்த காடு என்ற நரகம்) இவைகளில் யமதூதர்களால் செய்யப்படும் துன்பத்தையும், விசாரித்துப்பார்த்தால் எவன்தான் வைராக்யத்தை அடையமாட்டான்? (34)

(அ) பாபம் செய்திருக்கிறவர்களுக்கு ஏற்படும் துன்பத்தை எடுத்துச்சொல்வதுடன் நிறுத்தாமல், புண்யம் செய்து ஸ்வர்காதி லோகம் போகிறவர்களுக்கும் துன்பம் உண்டு என்பதை அடுத்த சுலோகத்திலும், கல்பாரம்பத்தில் அங்கே போய் ஆதிகாரிக ஸ்தாநம் வஹித்து தேவர்களாக விளங்குகிறவர்களுக்கும் துன்பம் உண்டு என்பதை அதற்கடுத்த சுலோகத்திலும் குறிப்பிடுகிறார்:—

पुण्यक्षये पुण्यकृतो नभःस्थै-
निपात्यमानान् शिथिलीकृताङ्गान् ।
नक्षत्ररूपेण दिवश्च्युतांस्तान्
विचार्य को वा विरतिं न याति ॥ ३५ ॥




புண்யக்ஷயே புண்யக்ருதோ நப:ஸ்தைர்
நிபாத்யமாநான் ஶிதிலீக்ருதாங்கான் ।
நக்ஷத்ரரூபேண திவச்ச்யுதாம்ஸ்தான்
விசார்ய கோ வா விரதிம் ந யாதி ॥

पुण्यक्षये-புண்யம் செலவான பிறகு, नभःस्थैः ஆகாசத்திலுள்ள தேவர்களால், निपात्यमानान्-தள்ளப்படுகிறவர்களும், शिथिलीकृताङ्गान्-சிதறிப்போன அவயவங்களுள்ளவர்களும், नक्षत्ररूपेण-நக்ஷத்திர உருவமாக, दिवः-ஸ்வர்கத்திலிருந்து, च्युतान्- நழுவி விழுந்தவர்களுமான, तान्- அந்த, पुण्यकृतः- புண்யம் செய்தவர்களை பற்றி, विचार्य-விசாரித்துப்பார்க்கில், को वा-எவன்தான், विरतिं-வெறுப்பை, न याति- அடையமாட்டான்?

j-xxii-4,

புண்ணியம் செய்தவர்கள் புண்ணியம் தீர்ந்துபோன பிற்பாடு தளதளத்துப்போன அங்கங்களுடன் ஆகாசத்திலுள்ளவர்களால் கீழே தள்ளப்படுவதையும், அவர்கள் நக்ஷத்திரரூபத்துடன் மேல் லோகத்திலிருந்து நழுவிவிழுவதையும், நன்கு கவனித்தால் எவன் தான் வைராக்யத்தை அடையமாட்டான் ?

இவ்வுலகில் புண்யம் செய்தவர்கள் நரகதுக்கத்தை அனுபவிப்பதில்லை ஸ்வர்க்கம் சென்று தங்கள் புண்ணியத்திற்குத் தக்கபடி ஸுகமனுபவிக்கிறார்கள். ஆனாலும் புண்யம் தீர்ந்த பிறகு தேவர்களால் கீழே தள்ளப்பட்டு அந்த சரீரம் சிதறிப்போய் நக்ஷத்ர உருவமாக கீழே நழுவிவிழுவதை எண்ணிப்பார்த்தால் ஸ்வர்க்க ஸுகத்தில் யாருக்காவது ஆசை உண்டாகுமா? (35)

**वाय्वर्कवह्नीन्द्रमुखान् सुरेन्द्रान्**
**ईशोग्रभीत्या ग्रथितान्तरङ्गान् ।**
**विपक्षलोकैः परिदूयमानान्**
**विचार्य को वा विरतिं न याति ॥ ३६ ॥**

வாய்வர்க்க வஹ்நீந்த்ரமுகான் ஸுரேந்த்ரான்
ஈசோக்ரபீத்யா க்ரதிதாந்தரங்கான் ।
விபக்ஷலோகை: பரிதூயமானான்
விசார்ய கோ வா விரதிம் ந யாதி ॥

**ईशोग्रभीत्या**-பரமேசுவரனிடமிருந்து உண்டாகும் கடுமையான பயத்தால், **ग्रथितान्तरङ्गान्**- பீடிக்கப்பட்ட மனமுள்ளவர்களாயும், **विपक्षलोकैः**-எதிரி ஜனங்களான அஸுரர்களால், **परिदूयमानान्**-துன்பப்படுபவர்களாயுமுள்ள, **वाय्वर्क**-வாயு, ஸூர்யன், **वह्नीन्द्र-मुखान्**-அக்னி, இந்திரன் முதலான, **सुरेन्द्रान्**-தேவசிரேஷ்டர்களைப் பற்றி, **विचार्य**-விசாரித்து, **को वा**- எவன்தான், **विरतिं**-வைராக்யத்தை, **न याति**-அடையமாட்டான் ?

பரமேசுவரனிடமிருந்து ஏற்படும் கடுமையான பயத்தினால் வாயு, ஸூர்யன், அக்னி, இந்திரன் முதலான தேவசிரேஷ்டர்கள் பீடிக்கப்பட்ட மனஸ் உள்ளவர்களாயிருப்பதையும், எதிரிகளான அஸுரர்களால் துன்பப்படுத்தப்படுபவர்களாயிருப்பதையும், விசாரித்தால் எவன்தான் வைராக்யத்தை அடையமாட்டான் ?

இந்த தேவர்களும் பயந்தே நடக்கிறார்களென்பது "भीषाऽस्माद्वातः पवते । भीषोदेति सूर्यः । भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च । मृत्युर्धावति पंचम इति" என்று தைத்திரீய உபநிஷத்திலும் भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः । भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः என்று கடோபநிஷத்திலும் தெளிவாய் சொல்லப்படுகிறது. (36)

(அ) எங்கேயெல்லாம் ஸாதனமான கர்மாக்களில் மேல் கீழ் என்ற தாரதம்யம் இருக்கிறதோ, அதற்குத் தகுந்தபடி பல ரூபமான ஸுகத்திலும் தாரதம்யம் இருந்தே தீரும் என்ற நியாயத்தை அனுஸரித்து போகங்களில் மேல் கீழ் என்று இருக்குமாதலால், மேலுள்ளவர்களைப் பார்த்து கீழ் உள்ளவர்களுக்கு துக்கம் இல்லாமலிராது என்ற விஷயத்தை ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக்காட்டுகிறார்:—

श्रुत्या निरुक्तं सुखतारतम्यं
ब्रह्मान्तमारभ्य महीमहेशम् ।
औपाधिकं तत्तु न वास्तवं चेत्
आलोच्य को वा विरतिं न याति ॥ ३७ ॥

ச்ருத்யா நிருக்தம் ஸுக தாரதம்யம்
ப்ரஹ்மாந்தமாரப்ய மஹீமஹேசம் ।
ஔபாதிகம் தத்து ந வாஸ்தவம் சேத்
ஆலோச்ய கோ வா விரதிம் ந யாதி ॥

**महीमहेशमारभ्य**—பூலோகசக்ரவர்த்தியிடமாரம்பித்து, **ब्रह्मान्तं**—பிரஹ்மாமுடிய, **सुखतारतम्यं**—ஸுகத்தின் அளவில் மேல் கீழ் என்ற வித்யாசமானது, **श्रुत्या**—உபநிஷத்தினால், **निरुक्त**—நன்கு விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது, **तत्तु**—அதுவோவெனில், **औपाधिकं**—உபாதியால் ஏற்பட்டது, **न वास्तवं चेत्**—உண்மையல்ல என்றால், **आलोच्य**—(இதை) ஆலோசித்து, **को वा**—எவன்தான், **विरतिं**—வைராக்யத்தை, **न याति**—அடையமாட்டான்?

பூலோக சக்கிரவர்த்தியிலிருந்து ஆரம்பித்து பிரஹ்மா முடிய ஸுகத்தில் தாரதம்ய முண்டென்பது வேதத்தினால் நிர்வசனம்

செய்யப்பட்டிருக்கிறது. அதுவோ உபாதியினால் ஏற்பட்டதே தவிர வாஸ்தவமில்லை யென்றிருப்பதால் இவ்விஷயத்தை ஆலோசனைசெய்து பார்க்கும்போது எவன்தான் வைராக்யத்தை அடையமாட்டான்? '**सैषानन्दस्य मीमांसा भवति**' என்று ஆரம்பித்து '**स एको ब्रह्मण आनन्दः**' என்பது வரையுள்ள தைத்திரீய உபநிஷத் வாக்யங்களில் மானுஷ (பூலோக சக்ரவர்த்தியின்) ஆனந்தத்திலிருந்து மேலே ஒவ்வொன்றும் நூறு நூறு மடங்கு அதிகமானது என்று ப்ரஹ்மாவின் ஆனந்தம்வரை கூறப்பட்டிருக்கிறது. இக்கத்தாரதம்யம் அந்தந்த ஸ்தானங்களாகிற உபாதிகளால் தோன்றுகிறதே தவிர உபாதிகளை நீக்கிவிட்டால் ஆனந்த ஸ்வரூபம் அகண்டமானது. இதைத் தெரிந்துகொண்டால் இந்த ஸ்தானங்களில் ஆசை ஏற்படாது.

**सालोक्यसामीप्यसरूपतादि-**
**भेदस्तु सत्कर्मविशेषसिद्धः ।**
**न कर्मसिद्धस्य तु नित्यतेति**
**विचार्य को वा विरतिं न याति ॥ ३८ ॥**

*ஸாலோக்ய ஸாமீப்ய ஸரூபதாதி*
*பேதஸ்து ஸத்கர்மவிசேஷ ஸித்த: ।*
*ந கர்மஸித்தஸ்ய து நித்யதேதி*
*விசார்ய கோ வா விரதிம் நயாதி ॥*

**सालोक्य**-ஸாலோக்யம், **सामीप्य**-ஸாமீப்யம், **सरूपतादि**-ஸாரூப்யம் முதலான, **भेदस्तु**-வேற்றுமையோவெனில், **सत्कर्मविशेषसिद्धः**-புண்யகர்மவிசேஷங்களால் ஏற்பட்டது, **कर्मसिद्धस्य तु**-கர்மாவினால ஏற்பட்டதற்கு, **नित्यता**-நித்யமாயிருக்கும் தன்மை, **न**-கிடையாது, **इति**-என்று, **विचार्य**-விசாரித்து, **को वा**-எவன்தான், **विरतिं**-வைராக்யத்தை, **न याति**-அடையமாட்டான்?

*ஸாலோக்யம் (உபாஸ்ய தேவதையின் லோகத்தில் இருப்பது), ஸாமீப்யம் (அத்தேவதையின் ஸமீபத்தில் இருப்பது), ஸாரூப்யம் (அத்தேவதையைப்போலுள்ள ரூபத்தை தரிப்பது), ஸாயுஜ்யம் (தேவதையின் ஸ்வரூபத்தில் சேர்ந்திருப்பது) இந்த வெவ்வேறான பலன்கள் அதற்கு ஸாதனமான புண்ணிய கர்மாக்களுக்குள்*

உள்ள மாறுபாட்டால் ஏற்பட்டதே. கர்மாவினால் ஏற்படும் எவ்வித பலனும் நித்யமாக இருக்காது இவ்விதம் கவனித்தால் எவன்தான் வைராக்யத்தை அடையமாட்டான். (38)

यत्रास्ति लोके गतितारतम्य-
मुच्चावचत्वान्वितमत्र तत्कृतम् ।
यथेह तद्वत्खलु दुःखमस्ती-
त्यालोच्य को वा विरतिं न याति ॥ ३९ ॥

யத்ராஸ்தி லோகே கதிதாரதம்யம்
உச்சாவசத்வாந்விதமத்ர தத்க்ருதம் ।
யதேஹ தத்வத் கலு துக்கமஸ்தீ-
த்யாலோச்ய கோ வா விரதிம் ந யாதி ॥

यथेह-இங்கு எப்படியோ, तद्वत्-அதுபோல், लोके-உலகில், यत्र-எங்கெல்லாம், उच्चावचत्वान्वितं-மேல் கீழ்த்தன்மையுடன் கூடிய, गतितारतम्यं-பலனில் வேற்றுமை, अस्ति-இருக்கிறதோ, अत्र-இங்கு तत्कृतं-அதனாலேற்பட்ட, दुःखं-துக்கமும், अस्ति खलु-இருக்குமல்லவா, इति-என்று, आलोच्य-ஆலோசித்து, कोवा-யார்தான், विरतिं-வைராக்கியத்தை, न याति-அடையமாட்டான் ?

இவ்வுலகில் அவரவர் செய்யும் முயற்சிக்குத்தக்கபடி பலவிதமான உயர்ந்ததும் தாழ்ந்ததுமான பலன்கள் ஏற்படுவதையும் அவற்றின்மூலம் துக்கம் ஏற்படுவதையும் நாம் நேரில் காண்கிறோம் இதேபோல் உலகில் எங்கெல்லாம் பலனில் மேல் கீழ் என்ற வேற்றுமையுள்ளதோ அங்கெல்லாம் அதன்மூலம் துக்கமும் கட்டாயம் ஏற்படும் என்பதை ஒருவன் ஆலோசித்துப் பார்த்தானேயானால் நிச்சயமாக வைராக்யத்தையடைவான். (39)

(அ) இவ்வாறு வைராக்யம் ஏற்படுவதற்காக கர்ப்பவாஸம், சைசவம், கௌமாரம், யௌவநம், வார்த்தக்யம் என்ற நிலைகளிலும் மரணத்திலும் இதற்குப்பின் ஜீவர்கள் செல்லும் ஸ்தானங்களிலும் உள்ள துக்கத்தைக் காட்டிவிட்டு வைராக்கியம் அடையாதவன் அவிவேகி என்று கூறுகிறார் :—

को नाम लोके पुरुषो विवेकी
विनश्वरे तुच्छसुखे गृहादौ ।
कुर्याद्रतिं नित्यमवेक्षमाणो
वृथैव मोहात् म्रियमाणजन्तून् ॥ ४० ॥

கோ நாம லோகே புருஷோ விவேகீ
விநச்வரே துச்சஸுகே க்ருஹாதௌ ।
குர்யாத் ரதிம் நித்யமவேக்ஷமாணோ
வ்ருதைவ மோஹாந் ம்ரியமாண ஜந்தூன் ॥

**मोहात्**—அவிவேகத்தால், **वृथैव**—வீணுகவே **म्रियमाणजन्तून्**—இறந்துகொண்டிருக்கும் பிராணிகளை, **नित्यं**—எப்பொழுதும், **अवेक्षमाणः** பார்த்துக்கொண்டிருக்கிற, **विवेकी**—விவேகத்துடன் கூடிய, **को नाम पुरुषः**—எந்தப்புருஷன் தான், **लोके**—உலகில், **विनश्वरे**—அழியும் ஸ்வபாவமுள்ளதும், **तुच्छसुखे**—ஸாரமற்ற இன்பமுள்ளதுமான, **गृहादौ**-வீடுமுதலியவற்றில், **रतिं कुर्यात्**—ஆசைகொள்வான் ?

*உலகில் ஸாதாரணமாக ஜனங்கள் விவேகமில்லாமல் மதிமயக்கத்தினுல் பொருள்களில்பற்றுக்கொண்டு வீணுக அழிந்துபோகின்றனர்: இதை எப்பொழுதும் பார்த்துக்கொண்டேயிருக்கும் விவேகி, அழியக்கூடியதும் ஸுககரமாகத் தோன்றியபோதிலும் உண்மையில் துக்கத்தையே தருவதும் தனது அழிவிற்குக் காரணமுமான வீடு முதலியவற்றில் ஆசைகொள்வானு? (40)*

सुखं किमस्त्यत्र विचार्यमाणे
गृहेऽपि वा योषिति वा पदार्थे ।
मायातमोन्धीकृतचक्षुषो ये
त एव मुह्यन्ति विवेकशून्याः ॥ ४१ ॥

ஸுகம் கிமஸ்த்யத்ர விசார்யமாணே
க்ருஹே஽பி வா யோஷிதி வா பதார்த்தே ।
மாயா தமோந்தீக்ருத சக்ஷுஷோ யே
த ஏவ முஹ்யந்தி விவேகஶூந்யா:॥

**अत्र**-இங்கு, **विचार्यमाणे**-ஆராய்ந்து பார்த்தால், **गृहे**-வீட்டிலோ, **योषिति वा**-பெண்ணிடத்திலோ, **पदार्थेऽपि वा**-(வேறு எந்த ) பொருளிலுமோ, **सुखं किमस्ति**-ஸுகம் இருக்கிறதா ? **ये**-எவர்கள், **मायातमोऽन्धीकृतचक्षुषः**-மாயையென்னும் இருட்டால் குருடான கண்களுள்ளவர்களாய், **विवेकशून्याः**-விவேகமற்றவர்களோ, **त एव**-அவர்கள் தான் **मुह्यन्ति**-மோஹிப்பார்கள்.

*[விவேகமில்லாமல் உள்ளதை உள்ளபடி தெரிந்துகொள்ளாமல் விபரீதமாகத் தெரிந்துகொள்வது என்ற மாயையால் அறிவு குருடாயுள்ளவர்கள் தான் உலகப்பொருள்களைக்கண்டு மயங்குவார்கள். நல்ல விவேகத்துடன் ஆராய்ந்து பார்ப்பவர்கள் வீட்டிலோ, ஸ்திரீயினிடமோ, மற்றப்பொருளிலோ ஸுகமிருப்பதாக எண்ணுவார்களா ? உண்மையில் இவற்றில் ஸுகம் கொஞ்சமும் கிடையாது. ஸுகமிருப்பதாக எண்ணுவது ப்ராந்திதான்.* (41)

**अविचारितरमणीयं सर्वं उदुम्बरफलोपमं भोग्यम् ।**
**अज्ञानां उपभोग्यं न तु तज्ज्ञानां योषिति वा पदार्थे ॥ ४२ ॥**

*அவிசாரிதரமணீயம் ஸர்வம் உதும்பர*
*பலோபமம்போக்யம் ।*
*அக்ஞாநாம் உபபோக்யம் நது தஜ்ஞாநாம்*
*யோஷிதி வா பதார்த்தே ॥*

**भोग्यं**-போக்யமான, **सर्वं**-எல்லாம், **अविचारितरमणीयं**-விசாரிக்காதவரையில் அழகாகத்தோன்றக்கூடியது, **उदुम्बरफलोपमं**-அத்திப் பழத்திற்கொப்பானது, **अज्ञानां**-அறியாதவர்களுக்குத்தான், **उपभोग्यं**-அனுபவிக்கத்தக்கது, **तज्ज्ञानां**-அதன் தன்மையை அறிந்தவர்களுக்கு, **योषिति**-பெண்ணிடமோ, **पदार्थे वा**-மற்றப்பொருளிலோ, **न तु**-ஆசை உண்டாகாது.

*போக்யமாயுள்ள எல்லாமே அத்திப்பழத்தைப்போல விசாரிக்காமலிருக்கும்வரையில் ரமணீயமாகத்தோன்றி ஞானமில்லாதவர்களுக்கு போகத்திற்குரியதாகும். ஆனால் அது விஷயமான ஞானமுள்ளவர்களுக்கு ஸ்திரீயிடத்திலோ வேறு பதார்த்தத்திலோ அவ்விதமிராது.* (42)

गतेऽपि तोये सुषिरं कुलीरो
हातुं ह्यशक्तो म्रियते विमोहात् ।
यथा तथा गेहसुखानुषक्तो
विनाशमायाति नरो भ्रमेण ॥ ४३ ॥

கதேऽபி தோயே ஸுஷிரம் குளீரோ
ஹாதும் ஹ்யஶக்தோ ம்ரியதே விமோஹாத் ।
யதா ததா கேஹஸுகாநுஷக்தோ
விநாஶமாயாதி நரோ ப்ரமேண ॥

यथा–எவ்வாறு, कुलीरः–நண்டு, विमोहात्–மோஹத்தினுல், तोये–ஜலம், गते ऽपि–சென்றபிறகும், सुषिरं–பொந்தை, हातुं–விடுவதற்கு, अशक्तः–சக்தியில்லாததாக, म्रियते–இறந்துபோகிறதோ, तथा–அவ்வாறு, नरः–மனிதன், भ्रमेण–ப்ராந்தியால், गेहसुखानुषक्तः வீட்டின் ஸுகத்தில் ஈடுபட்டவனுக, विनाशं आयाति–நாசத்தையுடைகிறுன்.

பொந்தில் வஸிக்கும் நண்டு கடும் கோடையில் ஜலம் முழுவதும் வற்றிப்போன பிறகும் அதைவிட்டு வெளியேவர மனமில்லாமல் கடைசியில் அங்கேயே இறந்து போகிறது. இது போல் மனிதனும் வீடு, பெண்டிர், பொருள் இவற்றில் பற்றுவைத்து சேகரித்து அவற்றிலேயே ஈடுபட்டு ஸுக லேசத்தால் இன்பமுற்றிருக்கும்பொழுதே ஆயுள் முடிந்து இறந்துவிடுகிறுன். ஸத்கதியையடைய முயற்சிக்காமல் காலம் சென்றுவிடுகிறது. (43)

(அ) இதற்கே மற்ருேர் திருஷ்டாந்தம் கூறுகிறுர் :—

कोशक्रिमिस्तन्तुभिरात्मदेहं
आवेष्ट्य चावेष्ट्य च गुप्तिमिच्छन् ।
स्वयं विनिर्गन्तुमशक्त एव सन्
ततस्तदन्ते म्रियते च लग्नः ॥ ४४ ॥

यथा तथा पुत्रकलत्रमित्र-
स्नेहानुबन्धैर्ग्रथितो गृहस्थः ।

**कदाऽपि वा तान् परिमुच्य गेहात्**
**गन्तुं न शक्तो म्रियते मुधैव ॥ ४५ ॥**

*கோஶக்ரிமிஸ் தந்துபிராத்மதேஹம்*
*ஆவேஷ்ட்ய சாவேஷ்ட்ய ச குப்திமிச்சன் ।*
*ஸ்வயம் விநிர்கந்துமஶக்த ஏவ ஸன்*
*ததஸ் ததந்தே ம்ரியதே ச லக்ந: ॥*

*யதா ததா புத்ரகளத்ர மித்ர*
*ஸ்நேஹாநுபந்தைர் க்ரதிதோ க்ருஹஸ்த: ।*
*கதாऽபி வா தான் பரிமுச்ய கேஹாத்*
*கந்தும் ந ஶக்தோ ம்ரியதே முதைவ ॥*

**यथा**-எப்படி, **कोशक्रिमिः**-பட்டுப்புழு, **गुप्तिमिच्छन्**-காப்பாற்று வதை விரும்பி, **आत्मदेहं**-தன் உடலை, **तन्तुभिः**-நூல்களால், **आवेष्ट्य चावेष्ट्य च**-சுற்றிச்சுற்றி, **स्वयं**-தானுக, **विनिर्गन्तुं**-வெளியே வருவதற்கு, **अशक्त एव सन्**-திறமையில்லாததாகவே இருந்துகொண்டு, **ततः**-பிறகு, **तत्**-அதில், **लग्नः**-மாட்டிக்கொண்டு, **अन्ते**-முடிவில், **म्रियते**-சாகிறதோ, **तथा**-அப்படியே, **गृहस्थः**-கிருஹஸ்த்தன, **पुत्र**-பிள்ளை, **कलत्र**-மனைவி, **मित्र**-நண்பன, **स्नेहानुबन्धैः**-இவர்களிடம் அபிமானமாகிற கட்டுக்களால், **ग्रथितः**-முடியப்பட்டு, **कदापि वा**-ஒரு பொழுதும், **तान्**-அவர்களை, **परिमुच्य**-விட்டு, **गेहात्**-வீட்டிலிருந்து, **गन्तुं**-செல்வதற்கு, **न शक्तः**-சக்தியில்லாதவனுக, **मुधैव**-வீணுகவே, **म्रियते**-இறக்கிருன்.

*எப்படி பட்டுப் பூச்சிப்புழுவானது தன்னை ரக்ஷித்துக்கொள்ள நினைத்து தன் சரீரத்தை தன்னிடமிருந்தே உண்டாகும் நூல் களால் சுற்றிக்கொண்டு சுற்றிக்கொண்டு அதற்குள் அடைபட்டு தானுக அதை விட்டு வெளியில் வருவதற்கு முடியாமலேற்பட்டு கடைசியில் அங்கேயே கட்டுண்டு சாகிறதோ, அப்படியே வீட்டிலுள்ளவன் புத்திரன், பார்யை, நண்பன் இவர்களிடம் அபிமானம் கொண்டு இந்த சிநேகபாசங்களால் கட்டுப்பட்டு, எக்காலத்திலும் அவர்களை விட்டுவிட்டு வீட்டிலிருந்து வெளியே போய் விட சக்தியற்றவனுய் ஸத்கதிக்கு வழிதேடாமல் வீணுகவே இறக்கிருன்.* **(44-45)**

(அ) நன்கு கவனித்துப்பார்த்தால் ஸம்ஸாரமென்பதே ஒருவித காராகிருஹமே (ஜயிலே)யாகுமென்று மூன்று சுலோகங்களில் எடுத்துக்காட்டுகிறார் :-

**कारागृहस्यास्य च को विशेषः**
**प्रदृश्यते साधु विचार्यमाणे ।**
**मुक्तेः प्रतीपत्वं इहापि पुंसः**
**कान्तासुखाभ्युत्थितमोहपाशैः ॥ ४६ ॥**

*காராக்ருஹஸ்யாஸ்ய ச கோ விசேஷ:*
*ப்ரத்ருச்யதே ஸாது விசார்யமாணே ।*
*முக்தே: ப்ரதீபத்வமிஹாபி பும்ஸ:*
*காந்தா ஸுகாப்யுத்தித மோஹபாசை: ॥*

**साधु**–நன்றாக, **विचार्यमाणे**–விசாரிக்கப்படும்பொழுது, **कारा-गृहस्य**-ஜயிலுக்கும் **अस्य च**–இந்த ஸம்ஸாரத்திற்தும், **को विशेषः**–என்ன வேற்றுமை, **प्रदृश्यते**–காணப்படுகிறது? **कान्तासुखाभ्युत्थित**–பெண்களின் இன்பத்தில் ஏற்படும், **मोहपाशैः**–மதிமயக்கமாகிறபாசங்களால், **इहापि**–இந்த ஸம்ஸாரத்திலும், **पुंसः**–மனிதனுக்கு, **मुक्तेः प्रतीपत्वं**-முக்திக்கு எதிரிடையாயிருக்கும தன்மை (இருக்கிறதல்லவா !)

நன்றாக விசாரித்துப்பார்க்கும்போது காரா கிருஹத்திற்கும் இந்த ஸம்ஸாரத்திற்கும் சிறிதும் வேற்றுமையில்லை என்பது நன்கு தெரியவரும். ஜயிலில் இருப்பவன் கைகளிலும் கால்களிலும் விலங்குகளால் கட்டுப்பட்டு இதிலிருந்து விடுபடமுடியாமல் துன்புறுகிறான். இதுபோல் ஸம்ஸாரத்திலும் பெண்களின் மேல் ஆசை கொண்டு இந்த ஆசையால் கட்டுப்பட்டு இதிலிருந்து விடுபட முடியாமல் துன்புறுகிறான். ஜயிலிலிருப்பவனுக்கும் முக்தி (விடுதலை) இல்லை. ஸம்ஸாரபந்தத்தில் அகப்பட்டவனுக்கும் முக்தி (மோக்ஷம்) இல்லை. (46)

(அ) ஜயிலுக்கும் ஸம்ஸாரபந்தத்திற்குமுள்ள ஒற்றுமையை விளக்குகிறார்:—

**गृहस्पृहा पादनिबद्धशृङ्खला**
**कान्तासुताशा पटुकण्ठपाशः ।**

शीर्षे पतद्भूयशनिर्हि साक्षात्
प्राणान्तहेतुः प्रबला धनाशा ॥ ४७ ॥

க்ருஹஸ்ப்ருஹா பாதநிபத்தச்ருங்கலா
காந்தா ஸுதாஶா படுகண்டபாஶ: ।
ஶீர்ஷே பதத்பூர்யஶநிர் ஹி ஸாக்ஷாத்
ப்ராணாந்த ஹேது: ப்ரபலா தநாஶா ॥

**गृहस्पृहा**-வீட்டில் வைக்கும் ஆசை, **पादनिबद्धशृङ्खला**-காலில் கட்டப்பட்ட சங்கிலி, **कान्तासुताशा**-மனைவியிடமும் தனயர்களிடமும் வைக்கும் ஆசை, **पटुकण्ठपाशः**-உறுதியான கழுத்தில் கட்டப்பட்டகயிறு, **प्रबला**-மிகபலமான, **धनाशा**-பணத்திலுசை, **प्राणान्तहेतुः**-பிராணனின் முடிவுக்குக்காரணமான, **साक्षात्**-நேரான, **शीर्षे**-தலையில் **पतद्भूयशनिः हि** விழும் பெரிய இடியல்லவா !

*வீட்டில் வைக்கும் ஆசை கால்களில் கட்டிய சங்கிலிக் கொப்பானது, பார்யை புத்ரர்களில் வைக்கும் ஆசை கழுத்தில் இறுகின கட்டு ஆகும் பணத்தில் வைக்கும் பேராசையோ தலையில் விழும் பெரிய இடியாயிருந்து மிகவும் பலமாய் பிராணனுக்கே நாசத்தை யுண்டுபண்ணக் காரணமாயுள்ளது.* (47)

आशापाशशतेन पाशितपदो नोत्थातुमेव क्षमः
कामक्रोधमदादिभिः प्रतिभटैः संरक्ष्यमाणोऽनिशम् ।
संमोहावरणेन गोपनवतः संसारकारागृहा-
न्निर्गन्तुं त्रिविधेषणापरवशः कः शक्नुयाद्रागिषु ॥

ஆஶாபாஶஶதேந பாஶிதபதோ நோத்தாதுமேவ க்ஷம:
காமக்ரோதமதாதிபி: ப்ரதிபடை:
ஸம்ரக்ஷ்யமாணோऽநிஶம் ।
ஸம்மோஹாவரணேந கோபநவத: ஸம்ஸாரகாராக்ருஹாத்
நிர்கந்தும் த்ரிவிதேஷணாபரவஶ: க: ஶக்நுயாத் ராகிஷு ॥

**रागिषु**-பற்றுதலுள்ளவர்களுள், **आशापाशशतेन**-நூற்றுக்கணக்கான ஆசைகளென்னும் கயிறுகளால், **पाशितपदः**- கட்டப்பட்ட

கால்களையுடையவனும், **उत्थातुमेव**–எழுந்திருப்பதற்கே, **न क्षमः**–சக்தியற்றவனும், **कामक्रोधमदादिभिः**–காமம், கோபம், கர்வம் முதலான, **प्रतिभटैः**–காவலாளர்களால், **अनिशं**–எப்பொழுதும், **संरक्ष्यमाणः** காவல் செய்யப்படுகிறவனும். **संमोहावरणेन**–மோஹமென்னும் மதிள் சுவரால், **गोपनवान्**–மறைவுடன் கூடியவனும், **त्रिविधेषणापरवशः**–மூன்றுவித ஆசைகளுக்கு அதீனனும் இருக்கும், **कः**–எவன் தான், **संसारकारागृहात्**–ஸம்ஸாரமென்னும் ஜயிலிலிருந்து, **निर्गन्तुं** வெளியே செல்வதற்கு, **शक्नुयात्**–சக்தியுள்ளவனாவான் ?

*ஜயிலிலுள்ள குற்றவாளியின் கால்கள் எழுந்திருக்கவே முடியாதபடி இரும்புச் சங்கிலிகளால் கட்டப்பட்டிருக்கும் அவன் வெளியே போக முடியாதபடி எப்பொழுதும் காவல் காத்து வருவார்கள். நான்கு புறமும் உயரமான சுவர்கள் எழுப்பப் பட்டிருக்கும் இந்நிலையில் கைதி வெளியே போவதைப்பற்றி மனதில்கூட எண்ணமுடியுமா? இந்நிலையில்தான் ஸம்ஸாரிகளுமிருக்கின்றனர். உலகிலுள்ள ஒவ்வொரு பொருளிலும் வைக்கும் ஒவ்வொரு ஆசையும் இரும்புச்சங்கிலிபோன்றது. காமம், கோபம் மதம், லோபம், முதலானவர்கள் முக்தி மார்கத்திற்குச் செல்ல விடாமல் பாதுகாத்து வருகின்றனர். அவிவேகம் சுவர்போல் நம்மைச்சூழ்ந்து கொண்டிருக்கிறது.*

*மூன்றுவித ஆசை அதாவது தாரேஷணை (ஸ்திரீவிஷயமான ஆசை, இதில் புத்ராதிகள் விஷயமான ஆசையும் சேரும்), வித்தேஷணை (வீடு, நிலம், பணம், கீர்த்தி முதலியன இதில் சேர்ந்தவை), லோகேஷணை (உலகத்திற்கு திருப்தி ஏற்படும்படி நடந்து கொள்ளவேண்டுமென்ற எண்ணம் இதில் சேர்ந்தது) இவற்றிற்கு அதீனனாகிவிட்டவன் இந்த நிலையில் தன் விடுதலையை உத்தேசித்து ஸ்வதந்திரமாக பிரயத்தினம் செய்வதே ஸாத்தியமாகாது. ஆகவே ராகமுள்ளவன் எவனும் ஸம்ஸார ஜயிலிலிருந்து வெளிச்செல்ல முடியாது.* **(48)**

*(அ) காமத்தால் ஏற்படும் அனர்த்தங்களை 12 சுலோகங்களால் விளக்கிக் கூறுகிறார்:—*

**कामान्धकारेण निरुद्धदृष्टि-**
**र्मुह्यत्यसत्यप्यबलास्वरूपे ।**

न ह्यन्धदृष्टेरसतः सतो वा
सुखत्वदुःखत्वविचारणाऽस्ति ॥ ४९ ॥

காமாந்தகாரேண நிருத்தத்ருஷ்டி:
முஹ்யத்யஸத்யப்யபலாஸ்வரூபே ।
ந ஹ்யந்தத்ருஷ்டேரஸத: ஸதோ வா
ஸுகத்வதுக்கத்வவிசாரணாஸ்தி ॥

**कामान्धकारेण**-காமம் என்னும் இருட்டினால், **निरुद्धदृष्टिः**-தடைபட்டபார்வை (அறிவு) உள்ளவன், **असत्यपि**-கெட்டதாயிருந்தபோதிலும், **अबलास्वरूपे**-பெண் உருவத்தில், **मुह्यति**-மயங்குகிறான், **अन्धदृष्टेः**-பார்வை குருடானவனுக்கு, **असतः**-கெட்டதற்கோ, **सतो वा**-நல்லதற்கோ, **सुखत्वदुःखत्वविचारणा**-ஸுகத்தன்மையுள்ளது, துக்கத்தன்மையுள்ளது என்ற ஆராய்ச்சி **नास्ति हि**-இல்லையல்லவா!

*இருளில் கண்பார்வை மறைக்கப்பட்டவனுக்கும் குருடனுக்கும் பொருள்களைப்பார்க்க முடியாது. இதுபோல் மனதில் காமம் குடிகொண்டு விவேகமாகிறபார்வை மறைந்துபோனவனுக்கு இது நல்லது, இது கெட்டது, இதனால் ஸுகம் ஏற்படும், இதனால் துக்கமேற்படும் என்ற விசாரணையே இருக்காது. கெட்டதை நல்லதாகவும், துக்கம் தருவதை ஸுகம் தருவதாகவும் விபரீதமாக எண்ணுவான். இவன் கெட்டதும் துக்கம் தருவதுமான ஸ்திரீயின் உருவத்தைகண்டு மயங்குகிறான். (49)*

*(அ) வைராக்யம் உண்டாகும்படியாக பெண்ணின் உருவத்தை வர்ணிக்கிறார்:—*

श्लेष्मोद्गारि मुखं स्रवन्मलवती नासाऽश्रुमल्लोचनं
स्वेदस्रावि मलाभिपूर्णमभितो दुर्गन्धदुष्टं वपुः ।
अन्यद्वक्तुमशक्यमेव मनसा मन्तुं क्वचिन्नार्हति
स्त्रीरूपं कथमीदृशं सुमनसां पात्रीभवेन्नेत्रयोः ॥ ५० ॥

*ச்லேஷ்மோத்காரி முகம் ஸ்ரவன் மலவதீ
நாஸாऽச்ருமத் லோசநம்
ஸ்வேதஸ்ராவி மலாபிபூர்ணமபிதோ
துர்கந்த துஷ்டம் வபு: ।*

*அந்யத் வக்தும்ஶக்யமேவ மநஸா மந்தும்*
*க்வசித் நார்ஹதி*
*ஸ்த்ரீரூபம் கதமீத்ருஶம் ஸுமநஸாம் பாத்ரீ*
*பவேத் நேத்ரயோ: ॥*

**श्लेष्मोद्गारि**-கபத்தை வெளியே தள்ளுகின்ற, **मुखं**-வாய், **स्रवन्मलवती**-ஒழுகும் சளியாகிற மலத்துடன் கூடிய, **नासा**-மூக்கு, **अश्रुमत्**-கண்ணீரோடுகூடிய, **लोचनं**-கண், **स्वेदस्रावि**-வியர்வை பெருகுகிறதும், **अभितः**-முழுவதும், **मलाभिपूर्णं**-அழுக்கு நிறைந்ததும் **दुर्गन्धदुष्टं**-துர்நாற்றத்தால் கெட்டதுமான, **वपुः**-சரீரம், **अन्यत्**-இது தவிற மற்ற விபரம், **वक्तुमेव**-சொல்வதற்கே, **अशक्यं**-முடியாதது. **क्वचित्**-ஒரு இடத்திலும், **मनसा**-மனதால், **मन्तुं**-எண்ணுவதற்கும், **नार्हति**-யோக்யமன்று, **ईदृशं**-இப்பேற்பட்ட, **स्त्रीरूपं**-பெண்ணின் உருவம், **सुमनसां**-நல்ல புத்தியுள்ளவர்களின், **नेत्रयोः**-கண்களுக்கு, **कथं**-எப்படி, **पात्रीभवेत्**-பார்க்கத்தக்கதாக, **भवेत्**-ஆகும் ?

*கபத்தை துப்பும் வாய், ஒழுகும் மலத்துடன் கூடின மூக்கு, கண்ணீருள்ள கண், வியர்வை கசிந்து கொண்டும் மலம் நிறைந்தும் எல்லா பக்கங்களிலும் துர்கந்தத்தினல் கெடுக்கப்பட்டதுமான சரீரம், மற்றது சொல்வதற்கே முடியாதது, ஒருஸமயத்திலும் மனஸினால் நினைக்கக்கூட யோக்கியதையற்றது. இவ்விதமுள்ள ஸ்திரீயின் ரூபம் நல்ல புத்தியுள்ளவர்களுடைய கண்களுக்குப் பார்க்கவேண்டிய பதரார்த்தமாக எப்படியாகும்?* (50)

दूरादवेक्ष्याग्निशिखां पतङ्गो
रम्यत्वबुद्ध्या विनिपत्य नश्यति ।
यथा तथा नष्टदृगेष सूक्ष्मं
कथं निरीक्षेत विमुक्तिमार्गम् ॥ ५१ ॥

कामेन कान्तां परिगृह्य तद्व-
ज्जनोऽप्ययं नश्यति नष्टदृष्टिः ।
मांसास्थिमज्जामलमूत्रपात्रं
स्त्रियं स्वयं रम्यतयैव पश्यति ॥ ५२ ॥

தூராதவேக்ஷ்யாக்நி ஸிகாம் பதங்கோ
ரம்யத்வபுத்த்யா விநிபத்ய நச்யதி ।
யதா ததா நஷ்டத்ருகேஷ ஸூக்ஷ்மம்
கதம் நிரீக்ஷேத விமுக்திமார்க்கம் ॥

காமேந காந்தாம் பரிக்ருஹ்ய தத்வத்
ஜநோபயம் நச்யதி நஷ்டத்ருஷ்டி: ॥
மாம்ஸாஸ்தி மஜ்ஜாமலமூத்ரபாத்ரம்
ஸ்த்ரியம் ஸ்வயம் ரம்யதயைவ பச்யதி ॥



**यथा**-எப்படி, **पतङ्गः**-விட்டில்பூச்சி, **दूरात्**-வெகுதூரத்திலிருந்து **अग्निशिखां**-நெருப்புஜ்வாலையை, **अवेक्ष्य**-பார்த்து, **रम्यत्वबुद्ध्या**-அழகியது என்ற எண்ணத்தால், **विनिपत्य**-(அதில் விழுந்து), **नश्यति**-நாசமடைகிறதோ, **तथा**-அதுபோலவே, **मांसास्थिमज्जामलमूत्रपात्रं**-மாம்ஸம், எலும்பு, கொழுப்பு, மலம், மூத்திரம் இவைகளுக்கு இருப்பிடமான, **स्त्रियं**-பெண் சரீரத்தை, **स्वयं**-தானாகவே, **रम्यतयैव**-அழகுள்ளதாகவே, **पश्यति**-பார்க்கிறான்- **कामेन**-காமத்தால், **कान्तां**-ஸ்திரீயை, **परिगृह्य**-ஸ்வீகரித்துக்கொண்டு, **तथा**-அந்த விட்டில் பூச்சிபோலவே, **अयं जनोऽपि**-இந்த மனிதனும், **नष्टदृष्टिः**-விவேகம் அழிந்தவனாக, **नश्यति**-நாசமடைகிறான். **नष्टदृक्**-விவேகமற்ற, **एषः**-இவன், **सूक्ष्मं**-ஸூக்ஷ்மமான, **विमुक्तिमार्गं**-மோக்ஷவழியை, **कथं**-எவ்வாறு, **निरीक्षेत**-அறிந்துகொள்வான் ?

*வெகு தூரத்திலிருந்து விட்டில் பூச்சி நெருப்பு ஜ்வாலையைப் பார்த்து அதை அழகிய தின்பண்டமென்று எண்ணி ஓடிவந்து அதில் விழுந்து நெருப்பினால் உடல் பொசுங்கிப்போய் இறந்து விடுகிறது. இதுபோலவே மனிதனும் அருவருப்பான மாம்ஸம், எலும்பு, கொழுப்பு, மலம், மூத்திரம் இவை நிறைந்த பெண்ணுருவைக்கண்டு அழகிய போக்ய வஸ்துவாக எண்ணி மயங்கி அவளை ஸ்வீகரித்துக்கொண்டு அவளிடமே ஈடுபட்டு மதி மயங்கி கீழ்நிலையை அடைகிறான். காமத்தால் விவேகமற்ற மனிதனுக்கு ஸூக்ஷ்மமான முக்திமார்க்கம் எப்படி புலப்படும் ?*

*[ இங்கு 51வது சுலோகத்தின் பின்பாதி 52வது சுலோகத்தின் பின்பாதியாகவும், 52வது சுலோகத்தின் பின்பாதி 51வது*

சுலோகத்தின் பின்பாதியாகவும் இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அப்பொழுதுதான் அன்வயம் சிரமமில்லாமல் இருக்கும்] (51-52)

काम एव यमः साक्षात्कान्ता वैतरणी नदी ।
विवेकिनां मुमुक्षूणां निलयस्तु यमालयः ॥ ५३ ॥

காம ஏவ யம: ஸாக்ஷாத் காந்தா வைதரணீ நதீ ।
விவேகிநாம் முமுக்ஷூணாம் நிலயஸ்து யமாலய: ॥

**मुमुक्षूणां**-முக்தியடைய தீவ்ர ஆவலுள்ள, **विवेकिनां**-விவேகிகளுக்கு, **काम एव**-காமம்தான், **साक्षात्**-நேரிடையான, **यमः**-யமன், **कान्ता**-மனைவி, **वैतरणीनदी**-வைதரணீநதி, **निलयस्तु**-வீடோவெனில் **यमालयः**-யமனின் இருப்பிடம்.

விவேகமில்லாத மூடர்கள்தான் மனைவியையும் வீட்டையும் கண்டு மயங்கி ஈடுபடுவார்களே தவிற மோக்ஷமடைவதில் தீவ்ர ஆவல் கொண்ட விவேகிகள் காமத்தை யமனாகவும், வீட்டை யமனின் இருப்பிடமாகவும், மனைவியை யமலோகத்திற்குச் செல்லும் வழியிலுள்ள வைதரணி நதியாகவும் எண்ணி இவற்றை மனதில் கூட எண்ணமாட்டார்கள். (53)

यमालये वाऽपि गृहेऽपि नो नृणां
तापत्रयक्लेशनिवृत्तिरस्ति ।
किंचित् समालोक्य तु तद्विरामं
सुखात्मना पश्यति मूढलोकः ॥ ५४ ॥

யமாலயே வாऽபி க்ருஹேऽபி நோ ந்ருணாம்
தாபத்ரயக்லேஶநிவ்ருத்திரஸ்தி ।
கிஞ்சித் ஸமாலோக்ய து தத்விராமம்
ஸுகாத்மநா பச்யதி மூடலோக: ॥

**नृणां**-மனிதர்களுக்கு, **यमालये वापि**-யமனது இருப்பிடத்திலோ, **गृहेऽपि**-வீட்டிலோ, **तापत्रयक्लेशनिवृत्तिः**-மூன்று வித தாபங்கள் விலகுவது, **नोऽस्ति**-இல்லை. **किंचित्**-கொஞ்சம், **तद्विरामं**-அந்த

துக்கம் ஓய்ந்திருப்பதை, **समालोक्य**-பார்த்து, **सुखात्मना**-(அதை) ஸுகருபமாக, **मूढलोकः**-அறிவில்லாத மனிதன், **पश्यति**- பார்க்கிறுன்.

*பாபம் செய்து அதன் பயனை யமலோகம் சென்றவர்கள் ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூவித தாபங்களை அனுபவித்துக்கொண்டேதானிருப்பார்கள் இதே போல்தான் வீட்டில் ஆசை கொண்டு ஈடுபட்டவர்களுக்கும் துன்பம் அடியோடு நீங்குவதில்லை. ஆனாலும் விவேகமில்லாத மனிதன் பலவித துன்பங்களை அனுபவிக்கும் பொழுது முதலில் அனுபவித்த துன்பம் நீங்குவதைக் கண்டு அதையே ஸுகமாக எண்ணுகிறுன். க்ஷணநேரத்தில் மற்றொரு துன்பம் வந்துவிடுகிறது [இந்த அவிவேகியின் மனோபாவத்தை ஒட்டித்தான் எல்லா துக்கங்களும் நீங்கியிருக்கும் நிலைதான் மோக்ஷமென்று ந்யாய சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது].* **(54)**

*(அ) காமத்தை யமனுக்கு ஸமமாக வர்ணித்து விட்டு, இரண்டு சுலோகங்களால் யமனைக் காட்டிலும் மிகக்கெட்டவன் காமன் என்பதைக்கூறுகிறுர்:—*

**यमस्य कामस्य च तारतम्यं**
**विचार्यमाणे महदस्ति लोके ।**
**हितं करोत्यस्य यमोऽप्रियः सन्**
**कामस्त्वनर्थं कुरुते प्रियः सन् ॥ ५५ ॥**

*யமஸ்ய காமஸ்ய ச தாரதம்யம்*
*விசார்யமாணே மஹதஸ்தி லோகே ।*
*ஹிதம் கரோத்யஸ்ய யமோऽப்ரிய: ஸன்*
*காமஸ்த்வநர்த்தம் குருதே ப்ரிய: ஸன் ॥*

**लोके**-உலகில், **विचार्यमाणे**-விசாரிக்கப்படும்பொழுது, **यमस्य**-யமனுக்கும். **कामस्य च**-காமனுக்கும், **महत् तारतम्यं**-நிறைய வித்யாஸம், **अस्ति**-இருக்கிறது. **यमः**-யமன், **अप्रियः सन्**-பிரியம் இல்லாதவனுக இருந்துகொண்டு, **अस्य**-இவனுக்கு, **हितं**-நன்மையை, **करोति**-செய்கிறுன். **कामस्तु**-காமனோவெனில், **प्रियः सन्**-ப்ரியனுக இருந்துகொண்டு, **अनर्थं**-கெடுதலை, **कुरुते**-செய்கிறுன்.

உலகத்தில் நன்கு விசாரித்துப்பார்க்கையில் யமனுக்கும் காமத்திற்கும் தாரதம்யம் நிறைய விருக்கிறது என்பது தெரிய வரும் யமன் த்வேஷ்யனுக, வெறுக்கத்தக்கவனுக இருந்த போதிலும் நல்லதையே இவனுக்குச்செய்கிறுன். காமமோ, பிரியமாக இருந்துகொண்டு, கெடுதலேயே செய்கிறது. யமனுல் துன்பப்பட்ட போதிலும் பாபங்கள் நீங்கி பரிசுத்தனுகிறுன். காமத்தால் பாபம் குவிந்து விடுகிறது. (55)

**यमोऽसतामेव करोत्यनर्थं**
**सतां तु सौख्यं कुरुते हितः सन् ।**
**कामः सतामेव गतिं निरुन्धन्**
**करोत्यनर्थं ह्यसतां तु का कथा ॥ ५६ ॥**

யமோzஸதாமேவ கரோத்யநர்த்தம்
ஸதாம் து ஸௌக்யம் குருதே ஹித: ஸன் ।
காம: ஸதாமேவ கதிம் நிருந்தன்
கரோத்யநர்த்தம் ஹ்யஸதாம் து கா கதா ॥

**यमः**–யமன், **असतामेव**–கெட்டவர்களுக்கு மட்டுமே, **अनर्थं**–துன்பத்தை, **करोति**–செய்கிறுன். **सतां तु**–நல்லவர்களுக்கோவெனில் **हितः सन्**–நன்மை புரிபவனுகிக்கொண்டு, **सौख्यं**–ஸுகத்தை, **कुरुते**–செய்கிறுன். **कामः**–காமன், **सतामेव**–நல்லவர்களுக்கே, **गतिं**–நற்கதியை, **निरुन्धन्**–தடுத்துக்கொண்டு, **अनर्थं**–தீங்கை, **करोति हि**–செய்கிறுனல்லவா! **असतां तु**–அஸாதுக்கள் விஷயத்திலோ வெனில், **का कथा**–என்ன சொல்வது ?

யமன் ஸாதுக்களல்லாதவர்களுக்கு மாத்திரம் கெடுதலைச் செய்கிறுன். ஸாதுக்களுக்கு ஹிதமாக இருந்து கொண்டு ஸௌக்கியத்தையே செய்கிறுன். காமம் ஸாதுக்களுடையவே நற்கதியை தடுத்துக்கொண்டு கெடுதலைச் செய்கிறது. ஸாதுக்களல்லாதவர்கள் விஷயத்தில் (கெடுதல் செய்கிறதென்று) சொல்லவேண்டுமா ? (56)

(அ) இவ்வளவு சக்தி காமத்திற்கு எப்படி ஏற்பட்டதென்று கேட்பவர்களுக்கு அது உலகம் ஸ்ருஷ்டியான காலம் முதல்

இருந்து வருகிறது, அது இருப்பதிஞலேயே தான் உலகம் பெருகிக்கொண்டு வருகிறது, என்பதைச் சொல்கிருர்:—

विश्वस्य वृद्धिं स्वयमेव काङ्क्षन् प्रवर्तकं कामिजनं ससर्ज ।
तेनैव लोकः परिमुह्यमानः प्रवर्धते चन्द्रमसेव चाब्धिः ॥५७॥

விச்வஸ்ய வ்ருத்திம் ஸ்வயமேவ காங்க்ஷன்
ப்ரவர்த்தகம் காமிஜநம் ஸஸர்ஜ ।
தேநைவ லோக: பரிமுஹ்யமாந:
ப்ரவர்த்ததே சந்த்ரமஸேவ சாப்தி: ॥

स्वयमेव-தாஞகவே, विश्वस्य-உலகத்தின், वृद्धिं-விருத்தியை, काङ्क्षन्-விரும்பியவருய்க்கொண்டு (பகவான்), प्रवर्तकं-ப்ரவ்ருத்திக் கிறவஞக, कामिजनं-காமத்துடன்கூடிய ஜனங்களை, ससर्ज-ஸ்ருஷ்டி செய்தார். तेनैव-அதஞலேயே, परिमुह्यमानः-மோஹத்தை அடைந்து இருக்கிற, लोकः-ஜநம், चन्द्रमसा-சந்திரஞல், अब्धिरिव-ஸமுத்ரம் போல், प्रवर्धते-நன்கு விருத்தியடைகிறது.

உலகத்தில் ஜனப்பெருக்கம் தாஞகவே ஏற்படவேண்டுமென்ற எண்ணத்துடன் அதில் பிரவிருத்திக்கக் கூடியவர்களாக ஆசையுள்ள ஜனங்களை (பகவான்) ஸ்ருஷ்டி செய்தார். அதிஞலேயே மோஹத்தை யடைந்திருக்கும் உலகம், சந்திரஞல் ஸமுத்திரம் பொங்குவதுபோல், நன்கு விருத்தி யடைந்து வருகிறது. (57)

कामो नाम महान् जगद्भ्रमयिता स्थित्वाऽन्तराङ्गे स्वयं
स्त्रीपुंसावितरेतराङ्गकगुणैः हासैश्च भावैः स्फुटम् ।
अन्योन्यं परिमोह्य नैजतमसा प्रेमानुबन्धेन तौ
बध्वा भ्रामयति प्रपञ्चरचनां संवर्धयन् ब्रह्महा ॥ ५८ ॥

காமோ நாம மஹான் ஜகத்ப்ரமயிதா
ஸ்தித்வாऽந்தரங்கே ஸ்வயம்
ஸ்த்ரீபும்ஸாவிதரேதராங்ககுணை: ஹாஸைச்ச
பாவை: ஸ்புடம் ।

*அந்யோந்யம் பரிமோஹ்ய நைஜதமஸா*
*ப்ரேமாநுபந்தேந தௌ*
*பத்த்வா ப்ராமயதி ப்ரபஞ்சரசநாம் ஸம்வர்த்தயன்*
*ப்ரஹ்மஹா ॥*

**जगद्भ्रमयिता**–உலகை மயங்கவைக்கிற, **महान्**–பெரிய, **कामो नाम**–பிரஸித்தமான காமமானது, **स्वयं**–தானாகவே, **अन्तरङ्गे**–மனதில், **स्थित्वा**–இருந்துகொண்டு, **स्त्रीपुंसौ**–ஆண், பெண்களை, **इतरेतराङ्गकगुणैः**–ஒருவருக்கொருவருடைய அங்கங்களாலும் ஸ்வபாவங்களாலும், **हासैश्च**–சிரிப்புகளாலும், **भावैः**–சிருங்கார சேஷ்டைகளாலும் **स्फुटं**–நன்கு, **अन्योन्यं**–ஒருவருக்கொருவர், **परिमोह्य**–மோஹிக்கும்படி செய்து, **नैजतमसा**–தனது அவிவேகமென்னும் இருளாலும், **प्रेमानुबन्धेन**–ப்ரீதி ஸம்பந்தத்தாலும், **तौ**–அவ்விருவர்களையும், **बद्ध्वा**–கட்டி, **प्रपञ्चरचनां**–பிரபஞ்ச ஸ்ருஷ்டியை, **संवर्धयन्**–விஸ்தரித்துக்கொண்டு, **ब्रह्महा**–ப்ரஹ்மக்னனாக, **भ्रामयति**–மயங்கவைக்கிறான்.

*உலகத்தை சுழற்றிக்கொண்டிருக்கும் பெரிய விஷயம் காமம் என்பது பிரஸித்தம்: அது மனதிற்குள் தானே இருந்துகொண்டு, ஸ்திரீ புருஷர்களை பரஸ்பரம் சரீர அங்கங்களினாலும் குணங்களினாலும் சிரிப்புகளினாலும் சிருங்கார சேஷ்டைகளினாலும் நன்றாக ஒருவருக்கொருவர் மோஹமடையும்படிச் செய்து, தமது அவிவேகமென்ற இருளாலும், ப்ரீதியென்ற ஸம்பந்தத்தினாலும் அவ்விருவர்களைக் கட்டி, விஸ்தாரமான உலகத்தை ஏற்படுத்துவதை விருத்தி செய்துகொண்டு, ஆனால் பிரஹ்மத்தை இல்லையென்று மறக்கும்படி செய்துகொண்டு, மயக்கிக்கொண்டிருக்கிறது.* **(58)**

**अतोऽन्तरङ्गस्थितकामवेगात्**
**भोग्ये प्रवृत्तिः स्वत एव सिद्धा ।**
**सर्वस्य जन्तोर्ध्रुवमन्यथा चेत्**
**अबोधितार्थेषु कथं प्रवृत्तिः ॥ ५९ ॥**

*அதோऽந்தரங்கஸ்த்தித காம வேகாத்*
*போக்யே ப்ரவ்ருத்தி: ஸ்வத ஏவ ஸித்தா ।*

*ஸர்வஸ்ய ஜந்தோர் த்ருவமந்யதா சேத்*
*அபோதிதார்த்தேஷு கதம் ப்ரவ்ருத்தி: ॥*

**अतः**–ஆகையால், **सर्वस्य जन्तोः**–எல்லா பிராணிக்கும், **अन्तरङ्गस्थितकामवेगात्**–மனதிற்குள் இருக்கும் காமத்தின் வேகத்தால் **भोग्ये**–அனுபவிக்கும் விஷயத்தில், **प्रवृत्तिः**–ஈடுபாடு, **स्वत एव**–தானாகவே, **सिद्धा**–ஏற்பட்டுள்ளது. **ध्रुवं**–நிச்சயம், **अन्यथा चेत्**–இப்படியில்லாமல்போனால், **अबोधितार्थेषु**–கற்றுக் கொடுக்கப்படாத விஷயங்களில், **प्रवृत्तिः**–ப்ரவ்ருத்தியானது, **कथं**–எப்படி ஏற்படும்?

*இவ்விதமாக மனஸில் குடிகொண்டிருக்கும் காமத்தின் வேகத்திலே போக்யமான வஸ்து விஷயமாய் தானாகவே பிரவிருத்தி எல்லா ஜந்துக்களுக்கும் ஏற்படுகிறதென்பது திண்ணம் இப்படிக் கன்னியில் இருந்தால் கற்றுக்கொடுக்காத விஷயங்களில் பிரவிருத்தி எப்படி ஏற்படுகிறது? பிறர்கற்றுக்கொடுக்காமலே எல்லா பிராணிகளுக்கும் காமபோகத்தில் ஈடுபாடு தானாகவே ஏற்படுவதால் ஸிருஷ்டியின் ஆரம்பம் முதற்கொண்டே ஒவ்வொரு பிராணியின் மனதிலும் காமவேகம் இருப்பதாகத் தெரிகிறது.*

**तेनैव सर्वजन्तूनां कामना बलवत्तरा ।**
**जीर्यत्यपि च देहेऽस्मिन् कामना नैव जीर्यति ॥ ६० ॥**

*தேனைவ ஸர்வஜந்தூநாம் காமநா பலவத்தரா ।*
*ஜீர்யத்யபி ச தேஹேऽஸ்மின் காமநா நைவ ஜீர்யதி ॥*

**तेनैव**–அதனால்தான், **सर्वजन्तूनां**–எல்லா பிராணிகளுக்கும், **कामना**–ஆசையானது, **बलवत्तरा**–மிகுந்த பலமுள்ளதாயிருக்கிறது. **अस्मिन् देहे**–இந்த சரீரம், **जीर्यत्यपि च**–தளர்ந்துபோனபோதிலும், **कामना**–காமமானது, **नैव जीर्यति**–தளர்ந்துபோவதேயில்லை.

*இதே காரணத்தினால் தான் எல்லா ஜந்துக்களுக்கும் அடக்க முடியாதபடி ஆசை மிகவும் பலமுள்ளதாயிருக்கிறது. இந்த சரீரம் வயதாகித் தளர்ந்து போனாலும், ஆசை தளர்ந்து போவதே கிடையாது.* **(60)**

**अवेक्ष्य विषये दोषं बुद्धियुक्तो विचक्षणः ।**
**कामपाशेन यो मुक्तः स मुक्तेः पथि गोचरः ॥ ६१ ॥**

அவேக்ஷ்ய விஷயே தோஷம் புத்தியுக்தோ விசக்ஷண: ।
காமபாசேந யோ முக்த: ஸ முக்தே: பதி கோசர: ॥

**बुद्धियुक्तः**–நல்ல புத்தியுடன்கூடியவனும், **विचक्षणः**–திறமையுள்ளவனுமான, **यः**–எவன், **विषये**–விஷயத்திலுள்ள, **दोषं**–தோஷத்தை, **अवेक्ष्य**–நன்கு கவனித்துப் பார்த்து. **कामपाशेन**–காமம் என்ற கட்டினால், **मुक्तः**–விடுபட்டவனாகிறானோ, **सः**–அவன், **मुक्तेः पथि गोचरः**–மோக்ஷ மார்க்கத்தில் செல்பவனாகிறான்.

நல்ல புத்தியுள்ளவனாய் ஸாமர்த்தியசாலியாய் எவன் விஷயத்திலுள்ள தோஷத்தை நன்கு ஆராய்ந்து பார்த்து விட்டு காமமாகிற கட்டிலிருந்து விடப்படுகிறானோ, அவன் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடைவதற்குள்ள மார்க்கத்தில் செல்பவனாவான். முதலில் காமத்திலிருந்து விடுபட்டவன்தான் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட முயற்சிக்கக்கூடும். (61)

(அ) இவ்விதம் முக்திக்கு பிரதிபந்தமாயிருக்கும் காமத்தை எப்படியும் ஜயித்தாகவேண்டியிருப்பதினால் அதன் உத்பத்திக்குக் காரணமான விஷயத்தில் "இது நல்லது" என்றேற்படும் எண்ணத்தை ஏற்படாமல் செய்வதே காமத்தை ஜயிப்பதற்குரிய உபாயம் என்று மேலால் எட்டு சுலோகங்களால் விளக்குகிறார்:—

**कामस्य विजयोपायं सूक्ष्मं वक्ष्याम्यहं सताम् ।
संकल्पस्य परित्यागः उपायः सुलभो मतः ॥ ६२ ॥**

காமஸ்ய விஜயோபாயம் ஸூக்ஷ்மம்
வக்ஷ்யாம்யஹம் ஸதாம் ।
ஸங்கல்பஸ்ய பரித்யாக: உபாய: ஸுலபோ மத: ॥

**सतां**–நல்லவர்களுக்கு, **सूक्ष्मं**–ஸூக்ஷ்மமான, **कामस्य**–காமத்தை **विजयोपायं**–ஜயிப்பதற்கு உபாயத்தை, **अहं**–நான், **वक्ष्यामि**–சொல்கிறேன். **संकल्पस्य परित्यागः**–ஸங்கல்பத்தை விடுவது, **सुलभः**–ஸுலபமான, **उपायः**–உபாயமாக, **मतः**–கருதப்பட்டிருக்கிறது.

நல்வழியில் செல்வோர்களுக்கு காமத்தை ஜயிக்கும் உபாயத்தை இந்த சுலோகத்தில் ஆசார்யாள் உபதேசிக்கிறார். ஸங்கல்பம் செய்யாமலிருப்பதுதான் காமத்தை ஜயிப்பதற்கு

உபாயம் என பெரியோர்கள் தீர்மானித்திருக்கின்றனர். இந்த உபாயத்தை ஸுலபமாக யாவரும் கைக்கொள்ளலாம். (62)

श्रुते दृष्टेऽपि वा भोग्ये यस्मिन् कस्मिंश्च वस्तुनि ।
समीचीनत्वधीत्यागात् कामो नोदेति कर्हिचित् ॥ ६३ ॥

ச்ருதே த்ருஷ்டேऽபி வா போக்யே யஸ்மின் கஸ்மிம்ஸ்ச வஸ்துநி ।
ஸமீசீநத்வதீத்யாகாத் காமோ நோதேதி கர்ஹிசித் ॥

**भोग्ये**–அனுபவிக்கத் தக்கதான, **यस्मिन् कस्मिंश्च वस्तुनि**–எந்த வஸ்துவும், **श्रुते**–காதால் கேட்கப்பட்டபோதிலும், **दृष्टेऽपि वा**–பார்க்கப் பட்டபோதிலும், **समीचीनत्वधीत्यागात्**–நல்லது என்ற எண்ணத்தை விட்டுவிடுவதால், **कर्हिचित्**–ஒருபோதும், **कामः**–காமம், **नोदेति**–உண்டாகிறதில்லை.

ஒரு வஸ்துவைப்பற்றி பிறர்மூலம் கேள்விப்பட்டாலும் நேரில் பார்த்தாலும் இது நல்ல பொருள், இதனால் இன்பமடையலாம் நன்மை கிடைக்கும் என்றெல்லாம் எண்ணமிடத் தொடங்கி விடுகிறோம். இதன் மூலம் தான் நம் மனதில் ஆசை தோன்றி எல்லா அனர்த்தங்களையும் அடைகிறோம் எந்த வஸ்துவைப் பார்த்தபோதிலும், அல்லது, கேள்விப்பட்டாலும், இது நல்ல பொருள் என்று எண்ணக்கூடாது மனதில் அந்த எண்ணம் ஏற்பட்டிருந்தால் அதை விட்டுவிடவேண்டும். அப்பொழுது ஆசை ஒருபொழுதும் உண்டாகாது. (63)

कामस्य बीजं संकल्पः संकल्पादेव जायते ।
बीजे नष्टेऽङ्कुर इव तस्मिन् नष्टे विनश्यति ॥ ६४ ॥

காமஸ்ய பீஜம் ஸங்கல்ப: ஸங்கல்பாதேவ ஜாயதே ।
பீஜே நஷ்டேऽங்குர இவ தஸ்மின் நஷ்டே விநச்யதி ॥

**संकल्पः**–ஸங்கல்பம், **कामस्य**–காமத்திற்கு, **बीजम्**–விதை, **संकल्पादेव**–ஸங்கல்பத்திலிருந்துதான், **जायते**–(காமம்) உண்டாகிறது. **बीजे नष्टे**–விதை அழிந்ததும், **अंकुर इव**–முளைபோல், **तस्मिन्**–அந்த ஸங்கல்பம், **नष्टे**–அழிந்ததும், **विनश्यति**–(காமம்) அழிந்துபோகிறது.

முளைக்கு விதை காரணமாவது போல காமத்திற்கு இது நல்லது என்ற எண்ணமாகிற ஸங்கல்பம் தான் காரணம் விதையிலிருந்து முளை உண்டாவது போல் ஸங்கல்பத்திலிருந்து காமம் உண்டாகிறது விதை அழிந்து விட்டால் முளை உண்டாவதில்லை. அதுபோல் ஸங்கல்பமில்லாவிட்டால் காமமும் உண்டாகாது. (64)

न कोऽपि सम्यक्त्वधिया विनैव
भोग्यं नरः कामयितुं समर्थः ।
यतस्ततः कामजयेच्छुरेतां
सम्यक्त्वबुद्धिं विषये निहन्यात् ॥ ६५ ॥

ந கோऽபி ஸம்யக்த்வதியா விநைவ
போக்யம் நர: காமயிதும் ஸமர்த்த: ।
யதஸ் தத: காமஜயேச்சுரேதாம்
ஸம்யக்த்வபுத்திம் விஷயே நிஹந்யாத் ॥

**यतः**–எந்த காரணத்தால், **कोऽपि नरः**–ஒரு மனிதனும், **सम्यक्त्वधिया विनैव**–நல்லது என்ற எண்ணமில்லாமலேயே, **भोग्यं**–விஷயத்தை, **कामयितुं**–ஆசைப்படுவதற்கு, **न समर्थः** ஸாமர்த்யமுள்ளவனில்லையோ, **ततः**–அதனால், **कामजयेच्छुः**–காமத்தை ஜயிப்பதில் ஆவலுள்ளவன். **विषये**–விஷயத்தில் உண்டாகும், **एतां**–இந்த, **सम्यक्त्वबुद्धिं**–நல்லதென்ற எண்ணத்தை, **निहन्यात्**–போக்கடிக்க வேண்டும்.

ஒருபொருளில் ஒரு மனிதனுக்கு ஆசை ஏற்படுகிறதென்றால் இதற்கு முன்னதாகவே அப்பொருள் நல்லது என்ற எண்ணம் அவன் மனதில் இருக்கவேண்டும். நல்லது என்ற எண்ணம் இல்லாதவரையிலும் அப்பொருளில் அம்மனிதனுக்கு ஆசை உண்டாகாது. இது கெட்டது என்ற எண்ணமுள்ளவனும் உதாஸீனனாயிருப்பவனும் ஆசை கொள்வதில்லை. ஆகையால் காமத்தை ஜயிக்க விரும்புபவன் நல்லது என்ற எண்ணம் கொள்ளக்கூடாது. மனதில் இந்த எண்ணம் ஏற்பட்டிருந்தால் உடனே அதைப்போக்கிவிடவேண்டும். (65)

भोग्ये नरः कामजयेच्छुरेतां सुखत्वबुद्धिं विषये निहन्यात् ।
यावत् सुखत्वभ्रमधीः पदार्थे तावन्न जेतुं प्रभवेद्धि कामम् ॥

போக்யே நர: காமஜயேச்சுரேதாம்
ஸுகத்வபுத்திம் விஷயே நிஹந்யாத் ।
யாவத் ஸுகத்வப்ரமதீ: பதார்த்தே
தாவத் ந ஜேதும் ப்ரபவேத் ஹி காமாத் ॥

कामजयेच्छुः-காமத்தை ஜயிக்க விரும்பும், नरः-மனிதன், भोग्ये-போகத்துக்குரிய, विषये-விஷயத்தில், एतां-இந்த, सुखत्वबुद्धिं-ஸுகமென்ற எண்ணத்தை, निहन्यात्-போக்கவேண்டும். यावत्-எதுவரை, पदार्थे-வஸ்துவில், सुखत्वभ्रमधीः-ஸுகமென்ற ப்ராந்தி ஞானம் (உள்ளதோ), तावत्-அதுவரை, कामं-காமத்தை, जेतुं-ஜயிப்பதற்கு न प्रभवेत् हि-ஸமர்த்தனாகமாட்டான்.

காமத்தை ஜயிக்க நினைக்கும் மனிதன் போக்யமான விஷயத்தில் இது ஸுகத்தைத்தரும் என்ற எண்ணத்தைத் தடுக்கவேண்டும். ஒரு பதார்த்தத்தில் இது ஸுகமென்ற பிரமமான எண்ணம் இருக்கும் வரையில், காமத்தை ஜயிப்பதற்கு அவன் ஸமர்த்தனாகமாட்டான். உண்மையில் உலகிலுள்ள விஷயங்கள் ஸுகஸாதனமல்ல. அவைகளால் ஸுகமேற்படுவதில்லை. அறியாமையால் ஸுகஸாதனம் என்று எண்ணிக்கொண்டிருக்கிறான். இந்த ப்ராந்தி இருக்கும்வரை காமத்தை ஜயிக்கமுடியாது, பெரியோர்களின் உபதேசத்தால் நன்கு ஆராய்ந்து இந்த ப்ராந்தியைப் போக்கிக்கொண்டு விட்டால் ஸுலபமாக காமத்தை ஜயித்துவிடலாம். (66)

(அ) காமத்திற்குக் காரணம் ஒரு பதார்த்தம் நல்லது என்கிற எண்ணமாகிற ஸங்கல்பமானதினால் ஸங்கல்பத்தை ஏற்படாமல் செய்தால் காமம் ஏற்படாதென்று சொல்லிவிட்டு இப்பொழுது ஸங்கல்பம் ஏற்படாமலிருக்க என்ன செய்யவேண்டுமென்பதை மூன்று சுலோகங்களால் சொல்கிறார் —

संकल्पानुदये हेतुः यथाभूतार्थदर्शनम् ।
अनर्थचिन्तनं चाभ्यां नावकाशोऽस्य विद्यते ॥ ६७ ॥

ஸங்கல்பாநுதயே ஹேது: யதாபூதார்த்ததர்ஸநம் ।
அநர்த்த சிந்தநம் சாப்யாம் நாவகாஸோऽஸ்ய வித்யதே ॥

**यथाभूतार्थदर्शनं**–வஸ்துக்களை உள்ளது உள்ளபடி பார்ப்பதும், **अनर्थचिन्तनं च**–கெடுதலை எண்ணிப்பார்ப்பதும், **संकल्पानुदये**–ஸங்கல்பம் உண்டாகாமலிருப்பதற்கு, **हेतुः**–காரணம், **आभ्यां**–இவ்விரண்டுகளால், **अस्य**–இந்த ஸங்கல்பத்துக்கு, **अवकाशः**–இடம் **न विद्यते**–இருக்காது.

*ஸங்கல்பம் உண்டாகாமலிருக்க வழி-(1) பதார்த்தம் எப்படி இருக்கிறதோ அப்படியே அதைப் பார்த்தல் (2) அதில் ஏற்படக்கூடிய கெடுதலை நினைத்துப் பார்த்தல் இவ்விரண்டும் இருந்துவிட்டால் ஸங்கல்பத்திற்கு இடமேயிராது.* (67)

रत्ने यदि शिलाबुद्धिः जायते वा भयं ततः ।
समीचीनत्वधीर्नैति नोपादेयत्वधीरपि ॥ ६८ ॥

ரத்நே யதி ஸிலாபுத்தி: ஜாயதே வா பயம் தத: ।
ஸமீசீநத்வதீர் நைதி நோபாதேயத்வதீரபி ॥

**रत्ने**–ரத்தினத்தில், **शिलाबुद्धिः**–கல் என்கிற எண்ணமோ, **ततः** அதிலிருந்து, **भयं वा**–பயமோ, **यदि जायते**–உண்டாகுமேயானால், **समीचीनत्वधीः**–நல்லது என்ற எண்ணம், **नैति**–வராது. **उपादेयत्वधीरपि**–எடுத்துக்கொள்ளவேணுமென்ற எண்ணமும், **न**–உண்டாகாது.

*ரத்தினத்தில் வெறும் கல் என்ற எண்ணம் ஏற்பட்டாலும் அதில் பயம் ஏற்பட்டாலும் அது நல்லதென்ற எண்ணம் ஏற்படாது. அப்படியே அதை எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணமும் ஏற்படாது. ஸாதாரணக்கல்லைப்போல ரத்னமும் ஒரு கல்தான் என்று எண்ணுபவனும் இதை வைத்துக் கொண்டால் பல தீங்குகள் ஏற்படும் என்று எண்ணுபவனும். ரத்னத்தை எடுத்து வைத்துக்கொள்ள முயற்சிக்கமாட்டான்.* (68)

यथार्थदर्शनं वस्तुन्यनर्थस्यापि चिन्तनम् ।
संकल्पस्यापि कामस्य तद्वयोपाय इष्यते ॥ ६९ ॥

யதார்த்த தர்ஸநம் வஸ்துந்யநர்த்தஸ்யாபி சிந்தநம் ।
ஸங்கல்பஸ்யாபி காமஸ்ய தத்வதோபாய இஷ்யுதே ॥

वस्तुनि-பதார்த்தத்தில், तत्-அந்த, यथार्थदर्शनं-உள்ளபடி பார்ப்பதும், अनर्थस्य चिन्तनमपि-துன்பத்தை நினைத்துப் பார்ப்பதும், संकल्पस्य-ஸங்கல்பத்துக்கும், कामस्यापि-காமத்திற்கும், वधोपायः-அழிக்கும் உபாயமாக, इष्यते-எண்ணப்படுகிறது.

ஆகையால் பதார்த்தத்தில் அந்த, உள்ளபடி பார்ப்பதும், அதினால் உண்டாகும் கெடுதலை நினைப்பதும் ஸங்கல்பத்தைத் துலைக்க உபாயமாயிருப்பதுடன் காமத்தை துலைக்கவும் உபாயம் என்று கருதப்படுகிறது. (69)

(அ) வஸ்துக்கள் தீங்கையுண்டுபண்ணும் என்று பொது வாகக் கூறிவிட்டு அவற்றுள் அர்த்தம் என்று பெயர் வைத்துக் கொண்டு வாஸ்தவமாக அனர்த்தமாகவேயிருந்துவரும் பணம் எவ்விதமெல்லாம் கெடுக்குமென்பதை 14 சுலோகங்களில் எடுத்துக்காட்டுகிறார் :—

धनं भयनिबन्धनं सततदुःखसंवर्धनम्
प्रचण्डतरकर्दनं स्फुटितबन्धुसंवर्धनम् ।
विशिष्टगुणबाधनं कृपणधीसमाराधनं
न मुक्तिगतिसाधनं भवति नापि हृच्छोधनम् ॥ ७० ॥

தநம் பயநிபந்தனம் ஸதததுக்க ஸம்வர்த்தநம்
ப்ரசண்டதர கர்தனம் ஸ்புடிதபந்துஸம்வர்த்தநம் ।
விஶிஷ்டகுணபாதநம் க்ருபணதீ ஸமாராதநம்
ந முக்திகதிஸாதநம் பவதி நாபி ஹ்ருச்சோதநம் ॥

धनं-பணமானது, भयनिबन्धनं-பயத்திற்குக் காரணமாக உள்ளது. सततदुःखसंवर्धनं-எப்பொழுதும் துக்கத்தை வளரச் செய்யும், प्रचण्डतरकर्दनं-மிகக் கடுமையாகக் கலங்கும்படிசெய்யும், स्फुटितबन्धुसंवर्धनम्-பந்துக்கள் ஒருவருக்கொருவர் பிரிந்துபோவதை அதிகமாக்கும். विशिष्टगुणबाधनं-நற்குணங்களைக் கெடுத்துவிடும். कृपणधीसमाराधनं-லோபிகளால் கொண்டாடத்தக்கது. मुक्तिगतिसाधनं-

மோக்ஷ வழியில் செல்வதற்கு ஸாதனமாக, **न भवति**—ஆகிறதில்லை. **नापि शुद्धये**—மனதிற்கு பரிசுத்தியைச் செய்வதுமல்ல.

பணமிருந்தால் கூடவே பயமும் ஏற்படும் பலவித துன்பங்களை உண்டாக்கும் மனதில் அதிகக் கலக்கத்தை உண்டு பண்ணும் பணம் மூலமாக மனஸ்தாபம் ஏற்பட்டு உறவினர்கள் பிரிந்துவிடுவார்கள். நற்குணங்களெல்லாம் விலகிவிடும். லோபித்தனத்தை வளர்த்து அவர்களால் கொண்டாடப்படும். பணம் சித்தசுத்தியைத்தராது. அதனால் முக்தியை அடையமுடியாது.

(அ) முன் ச்லோகத்தில் கூறியதை விவரிக்கிறார்:—

**राज्ञो भयं चोरभयं प्रमादात् भयं तथा ज्ञातिभयं च वस्तुतः ।**
**धनं भयग्रस्तं अनर्थमूलं यतः सतां नैव सुखाय कल्पते ॥ ७१ ॥**

ராஜ்ஞோ பயம் சோரபயம் ப்ரமாதாத்
பயம் ததா ஞாதிபயம் ச வஸ்துத: ।
தநம் பயக்ரஸ்தமநர்த்தமூலம்
யத: ஸதாம் நைவ ஸுகாய கல்பதே ॥

**राज्ञो भयं**-அரசனிடமிருந்து பயம், **चोरभयं**-திருடரிடமிருந்து பயம் **प्रमादात्** -கவனக்குறைவிலிருந்து, **भयं**-பயம், **तथा**-அவ்விதமே, **ज्ञातिभयं च**-பங்காளிகளிடமிருந்து பயம், **वस्तुतः**-வாஸ்தவத்தில், **धनं**-பணம் **भयग्रस्तं**-பயத்தால் பிடிக்கப்பட்டுள்ளது. **अनर्थमूलं**-துன்பங்களுக்கு மூலகாரணம், **यतः**-இந்த காரணத்தால், **सतां**-நல்வழியில் செல்பவர்களுக்கு, **नैव सुखाय कल्पते**-ஸுகத்தின் பொருட்டு ஆவதில்லை.

பணம் வைத்துக்கொண்டிருப்பவர்களுக்கு வரிபோட்டுப் பிடுங்கிக்கொண்டு விடுவானே என்று அரசனிடமிருந்து பயம். திருடர்களிடமிருந்து பயம் தமது கவனக்குறைவால் கெட்டுப் போய்விடுமோ என்ற பயம். பங்காளிகள் கேட்டுவிடுவார்கள் என்று பயம் வாஸ்தவத்தில் பணத்தைச் சுற்றிலும் பயமே மூடிக்கொண்டிருக்கிறது. எல்லாத் துன்பங்களுக்கும் பணமே மூல காரணம். ஆகையால் நல்லவர்கள் பணத்தால் ஸுகம் உண்டாவதாக எண்ணமாட்டார்கள். (71)

आर्जने रक्षणे दाने व्यये वाऽपि च वस्तुतः ।
दुःखमेव सदा नृणां न धनं सुखसाधनम् ॥ ७२ ॥

*ஆர்ஜநே ரக்ஷணே தாநே வ்யயே வாऽபி ச வஸ்துத: ।
துக்கமேவ ஸதா ந்ருணாம் ந தநம் ஸுகஸாதநம் ॥*

**आर्जने**-ஸம்பாதிப்பதிலும். **रक्षणे**-காப்பாற்றுவதிலும், **दाने**-கொடுப்பதிலும், **व्यये वापि च**-செலவழிப்பதிலும் இவ்வாறு, **सदा**-எப்பொழுதும் **नृणां**-மனிதர்களுக்கு, **दुःखमेव**-துன்பம்தான். **वस्तुतः**-உண்மையில் **धनं**-பணம், **न सुखसाधनं**-ஸுகத்தைத்தரும் வஸ்துவல்ல.

*வாஸ்தவத்தில் தனத்தை ஸம்பாதிப்பதிலோ, காப்பாற்றுவதிலோ, தானம் செய்வதிலோ, செலவு செய்வதிலோ, மனிதர்களுக்கு எப்பொழுதும் துக்கம்தான். அந்த தனம் ஸுகத்திற்கு ஸாதனமாக மாட்டாது.* (72)

सतामपि पदार्थस्य लाभात् लोभः प्रवर्धते ।
विवेको लुप्यते लोभात् तस्मिन् लुप्ते विनश्यति ॥ ७३ ॥

*ஸதாமபி பதார்த்தஸ்ய லாபாத் லோப: ப்ரவர்த்ததே ।
விவேகோ லுப்யதே லோபாத் தஸ்மின் லுப்தே
விநச்யதி ॥*

**सतामपि**-நல்லவர்களுக்குக்கூட, **पदार्थस्य लाभात्**-பொருள் கிடைப்பதால், **लोभः**-பேராசை, **प्रवर्धते**-வளருகிறது. **लोभात्** பேராசையால் **विवेकः**-பகுத்தறிவு, **लुप्यते**-போய்விடுகிறது, **तस्मिन् लुप्ते**-அதுபோய்விட்டால், **विनश्यति**-அழிந்துவிடுகிறான்.

*நற்குணங்கள் உள்ளவர்களுக்குக்கூட பணம் கிடைத்தால் இவை நீங்கி பேராசை அதாவது இந்த பணம் முழுவதும் என்னிடமே இருக்கவேண்டும் என்னைவிட்டு நீங்கக்கூடாது என்ற பேராசை வந்துவிடுகிறது. மேலும் நிறைய பணத்தை சேர்க்க வேண்டும் என்ற எண்ணம் வந்துவிடுகிறது. இதனால் இது நல்லது இது கெட்டது என்ற விவேகம் நீங்கி நற்கதியடையாமல் அதோகதியை அடைகிறான்.* (73)

दहत्यलामे निःस्वत्वं लामे लोभो दहत्यमुम् ।
तस्मात् संतापकं वित्तं कस्य सौख्यं प्रयच्छति ॥ ७४ ॥

தஹத்யலாபே நிஸ்ஸ்வத்வம் லாபே லோபோ
தஹத்யமும் ।
தஸ்மாத் ஸந்தாபகம் வித்தம் கஸ்ய ஸௌக்யம்
ப்ரயச்சதி ॥

**अलाभे**-(பணம்) கிடைக்காதவரை, **निस्स्वत्वं**-பணமில்லாத்தன்மை **दहति**-தாபத்தை உண்டுபண்ணுகிறது, **लाभे**-கிடைத்துவிட்டால், **लोभः**-பேராசை, **अमुं**-இவனை, **दहति**-வாட்டுகிறது. **तस्मात्**-ஆகையால், **संतापकं**-தாபத்தை உண்டுபண்ணுகிற, **वित्तं**-பணம், **कस्य**-யாருக்கு, **सौख्यं**-ஸுகத்தை, **प्रयच्छति**-கொடுக்கிறது. ?

கிடைக்காமலிருந்தால் தாரித்திரியம் இவனை வாட்டும். கிடைத்துவிட்டால் லோபம் இவனை எரிக்கும் ஆகையால் நன்கு தாபத்தையுண்டுபண்ணுகிற தனம் யாருக்குத்தான் ஸுகத்தைக் கொடுக்கும்? பணம் கிடைப்பதற்கு முன்னும் தாபம்தான். கிடைத்த பின்னும் தாபம்தான். (74)

भोगेन मत्तता जन्तोः दानेन पुनरुद्भवः ।
वृथैवोभयथा वित्तं नास्त्येव गतिरन्यथा ॥ ७५ ॥

போகேந மத்ததா ஜந்தோ: தாநேந புனருத்பவ: ।
வ்ருதைவோபயதா வித்தம் நாஸ்த்யேவ கதிரந்யதா ॥

**भोगेन**-அநுபவிப்பதால், **जन्तोः**-மனிதனுக்கு, **मत्तता**-கர்வம் உண்டாகிறது, **दानेन**-தானம் செய்வதால், **पुनरुद्भवः**-மேலும் மேலும் கிடைக்கிறது, **उभयथा**-இரண்டு விதத்திலும், **वित्तं**-பணம், **वृथैव**-வீண் தான், **अन्यथा**-வேறுவிதமாக, **गतिः**-கதி, **नास्त्येव**-இல்லவே இல்லை.

பணத்தை இரண்டுவிதமாக விநியோகிக்கலாம். தான் நன்றாக அனுபவிக்கலாம். அல்லது பிறருக்கு தானம் செய்யலாம். போகத்தால் மனதில் செருக்கு ஏற்பட்டு பிறரை அலக்ஷ்யமாகப் பார்ப்பான். தானம் செய்வதால் மேலும் மேலும் இவனுக்கு பணம் பெருகும். இந்த இரண்டு விதங்களாலும் இவன் முக்தி

வழியில் செல்லமுடியாதவனாய் விடுவான். ஆகவே பணம் இவன் பிறப்பை வீணாக்கிவிடும். (75)

धनेन मदवृद्धिः स्यात् मदेन स्मृतिनाशनम् ।
स्मृतिनाशात् बुद्धिनाशो बुद्धिनाशात् प्रणश्यति ॥ ७६ ॥

தநேந மதவ்ருத்தி: ஸ்யாத் மதேந ஸ்ம்ருதி நாசநம் ।
ஸ்மிருதி நாசாத் புத்திநாச: புத்திநாசாத் ப்ரணச்யதி ॥

**धनेन**-பணத்தால், **मदवृद्धिः स्यात्**-கர்வத்தின் விருத்தி உண்டாகும், **मदेन**-கர்வத்தால், **स्मृतिनाशनं**-நல்நினைவுகளின் அழிவு ஏற்படும், **स्मृतिनाशात्**-நல்நினைவுகளின் அழிவால், **बुद्धिनाशः**-புத்தி கெட்டுப்போகும், **बुद्धिनाशात्**-புத்திகெட்டுப்போவதால், **प्रणश्यति**-அழிந்து விடுகிறான்.

பணத்தால் கர்வம் தலைக்கேறி நல்ல எண்ணங்களெல்லாம் நீங்கி புத்தி கெட்டு மேல்நிலையையடைய முடியாமல் அழிந்து போகிறான். (76)

सुखयति धनमेवेत्यन्तराशापिशाच्या
दृढतरमुपगूढो मूढलोको जडात्मा ।
निवसति तदुपान्ते संततं प्रेक्षमाणो
व्रजति तदपि पश्चात् प्राणमेतस्य हृत्वा ॥ ७७ ॥

ஸுகயதி தநமேவேத்யந்தராசாபிசாச்யா
த்ருடதரமுபகூடோ மூடலோகோ ஜடாத்மா ।
நிவஸதி ததுபாந்தே ஸந்ததம் ப்ரேக்ஷமாணோ
வ்ரஜதி தத்பி பச்சாத் ப்ராணமேதஸ்ய ஹ்ருத்வா ॥

**धनमेव**-பணம்தான், **सुखयति**-ஸுகத்தைக்கொடுக்கிறது, **इति**-என்ற, **अन्तराशापिशाच्या**-உள்ளே மனதிலிருக்கும் ஆசையென்னும் பிசாசத்தால், **दृढतरं**-கெட்டியாக, **उपगूढः**-கட்டிக்கொள்ளப்பட்டு, **जडात्मा**-விவேகமற்றமனமுள்ள, **मूढलोकः**-முட்டாள் மனிதன், **संततं**-எப்பொழுதும், **प्रेक्षमाणः**-பார்த்துக்கொண்டு, **तदुपान्ते**-அதன் அருகில் **निवसति**-வஸிக்கிறான், **पश्चात्**-பின்னால், **तदपि**-அந்தப்

பணமும், एतस्य-இவனுடைய प्राणं-பிராணனை, हृत्वा-அபஹரித்து விட்டு, व्रजति-போய்விடுகிறது.

செல்வமே ஸுகத்தைக் கொடுக்கிறதென்ற உள்ளிருக்கும் ஆசையாகிற பிசாசினால் வெகு இறுகத் தழுவப்பட்டு விவேகமற்ற மனஸுடன் மோஹத்தையடைந்தவன் அந்த செல்வத்தையே இடைவிடாமல் பார்த்துக்கொண்டே அதன் ஸமீபத்தில் இருந்து வருகிறான். அப்படியிருந்தும் அந்த பிசாசு இவனுடைய பிராணனை எடுத்துக்கொண்டு விட்டுதான் பிறகு போகிறது. (77)

संपन्नोऽन्धवदेव किंचिदपरं नो वीक्षते चक्षुषा
सद्भिर्वर्जितमार्ग एव चरति प्रोत्साहितो बालिशैः ।
तस्मिन्नेव मुहुः स्खलन् प्रतिपदं गत्वाऽन्धकूपे पत-
त्यस्यान्धत्वनिवर्तकौषधमिदं दारिद्र्यमेवाञ्जनम् ॥ ७८ ॥

ஸம்பந்நோऽந்தவதேவ கிஞ்சிதபரம் நோ வீக்ஷதே சக்ஷுஷா
ஸத்பிர் வர்ஜிதமார்க்க ஏவ சரதி ப்ரோத்ஸாஹிதோ பாலிசை: ।
தஸ்மிந்நேவ முஹு: ஸ்கலன் ப்ரதிபதம் கத்வா-ऽந்தகூபே பதத்
யஸ்யாந்தத்வநிவர்த்தகௌஷதமிதம் தாரித்ர்ய-மேவாஞ்ஜநம் ॥

संपन्नः-பணமுள்ளவன், अन्धवदेव-குருடன்போலவே, किंचित् अपरं-வேறு ஒன்றையும், चक्षुषा-கண்ணால், नो वीक्षते-பார்க்க மாட்டான், बालिशैः-சிறுபிள்ளைத்தனமுள்ள மூடர்களால், प्रोत्साहितः உத்ஸாஹப்படுத்தப்பட்டு, सद्भिः-நல்லோர்களால், वर्जितमार्गे एव-தடுக்கப்பட்டவழியிலேயே, चरति-செல்கிறான், तस्मिन्नेव-அவ்வழியிலேயே, मुहुः-அடிக்கடி, प्रतिपदं-ஒவ்வொரு அடியிலும், स्खलन्-தடுக்கி விழுந்துகொண்டு, गत्वा-சென்று, अन्धकूपे-பாழுங்கிணற்றில், पतति-விழுகிறான், अस्य-இவனுடைய, अन्धत्वनिवर्तकौषधं-குருட்டுத் தனத்தைப்போக்கும் மருந்து, इदं-இந்த दारिद्र्यमेवाञ्जनं ஏழ்மை என்னும் மைதான்.

குருடன் கண்ணுல் ஒன்றையும் பார்க்க முடியாமல் வஞ்சகர்களால் ஏமாற்றப்பட்டு வழிதவறிப்போய் தடுக்கித்தடுக்கி விழுந்தும் அவ்வழியிலேயே சென்று முடிவில் பாழுங்கிணற்றில் விழுந்துவிடுகிறுன். இதுபோல பணம் அகக்கண்ணை மறைத்துவிடுமாதலால் தனிகனும் கர்வத்தால் ஒன்றையும் நல்லதா கெட்டதா என்று கவனித்துப் பார்க்கமாட்டான். சிறுபிள்ளைத்தனமுள்ள துஷ்டர்கள் தோழர்களாக வந்து இவனை உத்ஸாகப்படுத்துவார்கள். இதனுல் ஸாதுக்கள் செல்லும் நல்வழியில் செல்லாமல் அவர்கள் போகாத தீயவழியிலேயே போவான். அதில் அடிக்கடி பல தடவை இடைஞ்சல்கள் ஏற்படும. ஆனுலும் பணச்செருக்கால் அதைப் பொருட்படுத்தாமல் தீயவழியிலே மேலும் மேலும் சென்று நரகத்தில் விழுவான், இவன் பணமெல்லாம் தொலைந்து ஏழ்மை வந்தால்தான் பணகர்வத்தால் வந்த அவிவேகமென்னும் அகக்கண்ணின் குருட்டுத்தனம் நீங்கும்.

लोभः क्रोधश्च डम्भश्च मदो मत्सर एव च ।
वर्धते वित्तसंप्राप्त्या कथं तच्चित्तशोधनम् ॥ ७९ ॥

லோப: க்ரோதச்ச டம்பச்ச மதோ மத்ஸர ஏவ ச ।
வர்த்ததே வித்தஸம்ப்ராப்த்யா கதம் தச்சித்தஶோதநம் ॥

लोभः-பேராசையும், क्रोधश्च-கோபமும், डम्भश्च-டம்பமும், मदः-கர்வமும், मत्सर एव च-அஸூயையும், वित्तसंप्राप्त्या-பணத்தை அடைவதால், वर्धते-வளருகிறது, तत्-அது, कथं-எப்படி, चित्तशोधनं-அந்தக்கரணத்திற்கு பரிசுத்தியைக் கொடுப்பதாக ஆகும். ?

செல்வத்தை அடைவதினுல் லோபம், கோபம், டம்பம், மதம், பொருமை எல்லாம் விருத்தியையே அடைகிறது. பணம் கிடைத்த மாத்திரத்தில் இவைகளும் கூடவே வந்துவிடும். ஆகையால் அந்தப் பணம் எப்படி மனதிற்கு சுத்தியைக்கொடுக்கும்? (79)

अलाभात् द्विगुणं दुःखं वित्तस्य व्ययसंभवे ।
ततोऽपि त्रिगुणं दुःखं दुर्व्यये विदुषामपि ॥ ८० ॥

அலாபாத் த்விகுணம் துக்கம் வித்தஸ்ய வ்யயஸம்பவே ।
ததோऽபி த்ரிகுணம் துக்கம் துர்வ்யயே விதுஷாமபி ॥

**वित्तस्य**-பணம், **अलाभात्** -கிடைக்காமலிருப்பதைக்காட்டிலும், **व्ययसंभवे**-சிலவு ஏற்பட்டால், **द्विगुणं दुःखम्** -இரு மடங்கு துக்கம், **दुर्व्यये**-கெட்ட சிலவு ஏற்பட்டால், **विदुषामपि**-அறிவுள்ளவர்களுக்கும், **ततोऽपि**-அதைக்காட்டிலும், **त्रिगुणं दुःखं**-மூன்று மடங்கு துக்கம் ஏற்படுகிறது.

*செல்வம் கிடைக்காமலிருப்பதைவிட, அது கிடைத்து அதற்கு செலவு ஏற்படும்போது இரண்டு பங்கு துக்கம் ஏற்படும். அந்த செலவும் கெட்டவழியிலிருந்து விட்டால் அறிவாளிகளுக்குக்கூட அதையும்விட மூன்று பங்கு துக்கம் ஏற்படும்.* (80)

**नित्याहितेन वित्तेन भयचिन्तानपायिना ।**
**चित्तस्वास्थ्यं कुतो जन्तोः गृहस्थेनाहिना यथा ॥ ८१ ॥**

*நித்யாஹிதேந வித்தேந பயசிந்தாநபாயிநா ।*
*சித்தஸ்வாஸ்த்யம் குதோ ஜந்தோ: க்ருஹஸ்தேநாஹிநா யதா ॥*

**नित्याहितेन**-எப்பொழுதும் தீமை தருவதும், **भयचिन्तानपायिना**-பீதி, கவலை விலகாததும், **गृहस्थेन अहिना यथा**-வீட்டிற்குள்ளிருக்கும் பாம்பு போன்றதுமான, **वित्तेन**-பணத்தால், **जन्तोः**-மனிதனுக்கு, **चित्तस्वास्थ्यं**-மனதிற்கு தன் நிலையில் இருப்பது, **कुतः**-எவ்வாறு ஏற்படும்.

*பணம் எப்பொழுதும் தீமைபயப்பது. பயமும் கவலையும் அதன் கூடவே விட்டுப்பிரியாமலிருக்கும். பணம் வந்து விட்டால் அதைக்காப்பாற்றுவதில் பலவிதக் கவலைகளும், நம்மைவிட்டுப் போய்விடுமோ என்ற பயமும் கூடவே ஏற்பட்டுவிடும் இந்தப் பணத்தால் மனதிற்கு எப்படி நிம்மதி ஏற்படும்? வீட்டிற்குள் பாம்பு புகுந்து விட்டால் அங்கு நிம்மதியுடன் வஸிக்க முடியுமா? அதைத்துரத்தினால்தான் அங்கு வஸிக்கமுடியும். இதுபோல் பணம் நீங்கினால்தான் மனதிற்கு நிம்மதி* (81)

**कान्तारे विजने वने जनपदे सेतौ गिरौ तौ च वा**
**चोरैर्वापि तथेतरैर्नरवरैः युक्तो वियुक्तोऽपि वा ।**

निःस्वः स्वस्थतया सुखेन वसति ह्याद्रीयमाणो जनैः
क्लिश्नात्येव धनी सदाऽऽकुलमतिः भीतश्च पुत्रादपि ॥

காந்தாரே விஜநே வநே ஜநபதே ஸேதௌ நிரீதௌ ச வா
சோரைர் வாऽபி ததேதரைர் நரவரை: யுக்தோ வியுக்தோऽபி வா ।
நிஸ்ஸ்வ: ஸ்வஸ்த்ததயா ஸுகேந வஸதி ஹ்யாத்ரீயமாணோ ஜநை:
க்லிச்நாத்யேவ தநீ ஸதாऽऽகுலமதி: பீதச்ச புத்ராதபி ॥

**विजने**–ஜனங்களில்லாத, **कान्तारे**–கடுங்கானகத்திலேயோ, **वने**–காட்டிலோ, **जनपदे**–பட்டணத்திலோ, **सेतौ**–அணையிலோ, **निरीतौ च वा**–தொந்தரவு இல்லாத இடத்திலோ, **चोरैर्वापि**–திருடர்களுடனே, **तथा**–அப்படியே, **इतरैः**–மற்ற, **नरवरैः**–சிறந்த மனிதர்களுடனே, **युक्तः**–சேர்ந்திருந்தாலும், **वियुक्तोऽपि वा**–பிரிந்திருந்தாலும், **निस्स्वः**–பணமில்லாதவன், **जनैः**–ஜனங்களால், **आद्रीयमाणः**–ஆதரிக்கப்படுகிறவனுக ஸ்வஸ்த்தனுக, **सुखेन**–ஸுகமாக, **वसति**–வஸிக்கிறுன். **धनी**–பணமுள்ளவன், **पुत्रादपि**–பிள்ளையிடமிருந்துகூட, **भीतः**–பயந்தவனுகவும், **सदा**–எப்பொழுதும், **आकुलमतिश्च**–மனம் கலங்கியவனுகவும், **क्लिश्नात्येव**–துன்பத்தையே அடைகிறுன்.

எவ்வித சொத்துமில்லாதவன் ஜனங்களே இல்லாத கடும் கானகத்திலோ (ஜனஸஞ்சாரமுள்ள) வனத்திலோ ஜனங்களிருக்கும் நகரத்திலோ அணையிலோ, எவ்வித தொந்தரவுமில்லாத இடத்திலோ எந்த இடத்திலிருந்தாலும் கூட திருடர்கள் இருந்தாலும் நல்ல மனிதர்கள் தன்னை விட்டுப்பிரிந்து போய் விட்டாலும் எல்லா ஜனங்களாலும் ஆதரிக்கப்பட்டவனுக ஸுகமாகக்கவலையில்லாதவனுக வாழ்வான். பணக்காரனே வென்ருல் எப்பொழுதும் கலங்கினமனதுடன், தன் புத்திரனிடமிருந்து கூட பயத்தையடைந்தவனுக, கிலேசத்தையே அனுபவிக்கிறுன் பணம் காரணமாக பிள்ளையும் சத்துருவாகி விடுகிறுன். "पुत्रादपि धनभाजां भीतिः" (82)

तस्मादनर्थस्य निदानमर्थः पुमर्थसिद्धिर्न भवत्यनेन ।
ततो वनान्ते निवसन्ति सन्तः संन्यस्य सर्वं प्रतिकूलमर्थम् ॥

தஸ்மாதநர்த்தஸ்ய நிதானமர்த்த:
புமர்த்தஸித்திர் ந பவத்யநேந I
ததோ வநாந்தே நிவஸந்தி ஸந்த:
ஸம்ந்யஸ்ய ஸர்வம் ப்ரதிகூலமர்த்தம் II

तस्मात् -ஆகையால், अर्थः-செல்வம், अनर्थस्य-துன்பத்திற்கு, निदानं-மூலகாரணம். अनेन-இந்தச் செல்வத்தால், पुमर्थसिद्धिः न भवति-தர்மம் முதலான புருஷார்த்தங்கள் ஸித்திப்பதில்லை. ततः-ஆகையால், सन्तः-ஸாதுக்கள், प्रतिकूलं-தீமையைத்தரும், सर्वं अर्थं-எல்லாச் செல்வத்தையும், संन्यस्य-துறந்துவிட்டு, वनान्ते-காட்டின் நடுவில், निवसन्ति-வஸிக்கிறார்கள்.

ஆகையினால் தனம் அனர்த்தத்திற்கே காரணம். அதினால் ஒரு புருஷார்த்தமும் ஸித்திக்காது. அதினால்தான், ஸாதுக்கள் பிரதிகூலமாயிருக்கும் தனத்தையெல்லாம் துறந்து காடுகளின் மத்தியில் போய் வஸிக்கிறார்கள். (83)

(அ) இவ்விதமாக அர்த்தமென்று நினைப்பதெல்லாம் வாஸ்தவத்தில் கெடுதலையே உண்டுபண்ணுவதினால் அதிலுள்ள ஆசையை விட்டு வைராக்ய நிஷ்டனாயிருக்கவேண்டுமென்று 10 சுலோகங்களில் வற்புறுத்தி அந்த வைராக்யம் என்ற விஷயத்தை முடிக்கிறார் :—

श्रद्धाभक्तिमतीं सतीं गुणवतीं पुत्रान् श्रुतान् संमतान्
अक्षय्यं वसुधानुभोगविभवैः श्रीसुन्दरं मन्दिरम् ।
सर्वं नश्वरमित्यवेत्य कवयः श्रुत्युक्तिभिर्युक्तिभिः
संन्यस्यन्त्यपरे तु तत्सुखमिति भ्राम्यन्ति दुःखार्णवे ॥

ச்ரத்தாபக்திமதீம் ஸதீம் குணவதீம் புத்ரான் ச்ருதான் ஸம்மதான்
அக்ஷய்யம் வஸுதாநுபோகவிபவை: ஸ்ரீஸுந்தரம் மந்திரம் I
ஸர்வம் நச்வரமித்யவேத்ய கவய: ச்ருத்யுக்திபிர் யுக்திபி:
ஸம்ந்யஸ்யந்த்யபரே து தத் ஸுகமிதி ப்ராம்யந்தி துக்கார்ணவே II

**श्रद्धाभक्तिमती**-சிரத்தை, பக்தி இவற்றுடன்கூடிய, **गुणवती**-நல்ல குணங்களுள்ள, **सती**-பதிவிரதையான மனைவியையும், **श्रुतान्**-கல்வியறிவுள்ள, **संमतान्**-தன் மனதிற்குப் பிரியமான, **पुत्रान्**-பிள்ளைகளையும், **वसुधानुभोगविभवैः**-பூவுலகில் அனுபவிக்கும் பெருமைகளால், **अक्षय्यं**-குறைவில்லாத, **श्रीसुन्दरं**-ஸம்பத்துக்களுடன் அழகிய **मन्दिरं**-கிருஹத்தையும், **सर्वं**-எல்லாம், **नश्वरं**-அழியும் ஸ்வபாவமுள்ளது, **इति**-என்று, **श्रुत्युक्तिभिः**-வேதவாக்யங்களாலும், **युक्तिभिः**-யுக்திகளாலும், **अवेत्य**-நன்கு அறிந்துகொண்டு, **कवयः**-அறிவாளிகள், **संन्यस्यन्ति**-தியாகம் செய்கின்றனர். **अपरे तु**-மற்றவர்களோவெனில், **तत्**-அதை, **सुखमिति**-ஸுகமென்று (எண்ணி), **दुःखार्णवे**-துன்பக் கடலில், **भ्राम्यन्ति**-உழலுகிறார்கள்.

*சிரத்தை பக்தியுள்ளவளாயும் நல்ல குணமுள்ளவளாயும் ஸாத்வீயுமான பார்யையையும், நல்ல படிப்புள்ளவர்களாயும் மனதிற்கு மிகவும் பிடித்தவர்களாயுமுள்ள புத்திரர்களையும், பூமியில் அனுபவிப்பதற்கு வேண்டிய எல்லா விபவங்களும் குறைவன்னியில் இருப்பதும் ஸம்பத்தினால் மிக அழகாகவிருப்பதுமான மாளிகையையும், எல்லாம் நாசமடையக் கூடியதுதான் என்று வேத வாக்கியங்களினாலும் யுக்திகளினாலும் நன்கு அறிந்து கொண்டு அறிவாளிகள் தியாகம் செய்து விடுகிறார்கள் மற்றவர்களோ அதுவே ஸுகமென்று நினைத்து துக்க ஸமுத்திரத்தில் உழலுகிறார்கள்.*

*பூவுலகில் ஸுகமாக வாழ்வதற்கு வேண்டிய குறைவற்ற எல்லாச்செல்வங்களையும், பதிவிரதையான மனைவியையும், ஸத்புத்திரனையும் அடைந்தும் கூட வைராக்யத்தால் தியாகம் செய்கிறார்களென்றால் மேலேகண்ட பூர்ண விபவமில்லாதவர்கள் தியாகம் செய்யவேண்டுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? உபநிஷத் வாக்யங்களையும் தக்க யுக்திகளையும் நம் அனுபவத்தையும் ஆராய்ந்து பார்த்தால் உலகபோகங்களில் யாருக்கும் ஆசை உண்டாகாது. ஸுகமில்லாததை ஸுகமென்று எண்ணுவதன் மூலம் துன்பத்தையே அடைகின்றனர்* (84)

सुखमिति मलराशौ ये रमन्तेऽत्र गेहे
क्रिमय इव कलत्रक्षेत्रपुत्रानुषक्त्या ।

सुरपद इव तेषां नैव मोक्षप्रसङ्ग-
स्त्वपि तु निरयगर्भावासदुःखप्रवाहः ॥ ८५ ॥

ஸு²கமிதி மலராஶௌ யே ரமந்தேऽத்ர கேஹே
க்ரிமய இவ களத்ரக்ஷேத்ரபுத்ராநுஷக்த்யா ।
ஸு²ரபத இவ தேஷாம் நைவ மோக்ஷப்ரஸங்க-
ஸ்த்வபி து நிரயகர்ப்பாவாஸ துக்கப்ரவாஹ: ॥

मलराशौ-மலக்குவியலில், क्रिमय इव-புழுக்கள்போல, कलत्र-மனைவி, क्षेत्र-வயல், पुत्रानुषक्त्या-பிள்ளைகள் இவர்களிடம் ஆசையால், अत्र गेहे-இந்த வீட்டில், सुरपदे इव-தேவலோகத்தில்போல, सुखमिति-ஸு²கமென்று, ये-எவர்கள், रमन्ते-இன்புறுகிறார்களோ, तेषां-அவர்களுக்கு, नैव मोक्षप्रसङ्गः-மோக்ஷப்பேச்சே கிடையாது. अपितु-ஆனால், निरय-நரகம், गर्भवास-கர்ப்பவாஸம், दुःखप्रवाहः-இவைகளின் துக்கப் பெருக்கு ஏற்படும்.

மலக்குவியலில் புழுக்கள் இன்புறுவது போல, பார்யை, வயல், புத்திரன் இவர்களிடம் பற்றுதல்கொண்டு இந்த வீட்டையே தேவலோகம் போல் நினைத்து ரமிக்கிறவர்களுக்கு மோக்ஷ விஷயமான பேச்சுக்கேயிடமில்லை. அவர்கள் நரகத்திலும் கர்ப்பத்திலும் திரும்பத்திரும்ப வாஸம் செய்வதால் ப்ரவாஹம் போல் மேன்மேலும் தொடர்ந்து துன்பங்கள் பெருகிக்கொண்டே இருக்கும். (85)

येषामाशा निराशा स्यात् दारापत्यधनादिषु ।
तेषां सिध्यति नान्येषां मोक्षाशाभिमुखी गतिः ॥ ८६ ॥

யேஷாமாஶா நிராஶா ஸ்யாத் தாராபத்ய தநாதிஷு ।
தேஷாம் ஸித்யதி நாந்யேஷாம் மோக்ஷாஶாபிமுகீ கதி: ॥

येषां-எவர்களுக்கு, दारापत्यधनादिषु-மனைவி, பிள்ளை, பணம் முதலானவற்றில், निराशा-ஆசையற்றிருப்பதே, आशा स्यात्-விருப்பமாக இருக்குமோ, तेषां-அவர்களுக்கு, मोक्षाशाभिमुखी गतिः-மோக்ஷமிருக்கும் திசையை நோக்கிய போக்கு, सिध्यति-ஸித்திக்கும், अन्येषां-மற்றவர்களுக்கு, न-இல்லை.

மனைவி, பிள்ளை, பணம் முதலியவற்றில் கொஞ்சமும் ஆசை யற்று இருப்பதையே தனது விருப்பமாகக்கொண்டவர்கள் தான் மோக்ஷமிருக்கும் திசையை நோக்கிச்செல்ல முடியும். உலக ஆசையை விட்டவர் தான் மோக்ஷம் செல்லத் தகுதியுள்ளவர். மற்றவர் மோக்ஷமிருக்கும் திசையை எட்டிப்பார்க்கவே முடியாது.

सत्कर्मक्षतपाप्मनां श्रुतिमतां शुद्धात्मनां धीमतां
नित्यानित्यपदार्थशोधनमिमं युक्त्या मुहुः कुर्वताम् ।
तस्मादुत्थमहाविरक्त्यसिमतां मोक्षैककाङ्क्षावतां
धन्यानां सुलभं प्रियादिविषयेष्वाशालताच्छेदनम् ॥

ஸத்கர்மக்ஷதபாப்மநாம் ச்ருதிமதாம் ஶுத்தாத்மநாம் தீமதாம்
நித்யாநித்யபதார்த்தஶோதநமிமம் யுக்த்யா முஹு:
குர்வதாம் ।
தஸ்மாதுத்த மஹாவிரக்த்யஸிமதாம் மோக்ஷைக
காங்க்ஷாவதாம்
தந்யாநாம் ஸுலபம் ப்ரியாதிவிஷயேஷ்வாஶாலதாச்
சேதநம் ॥

**सत्कर्म**-புண்ய கர்மாக்களால், **क्षत**-அழிந்த, **पाप्मनां**-பாப முள்ளவர்களும், **श्रुतिमतां**-கல்வியறிவுள்ளவர்களும், **शुद्धात्मनां**-பரிசுத்த மான மனமுள்ளவர்களும், **धीमतां**-புத்தியுள்ளவர்களும், **मुहुः**-அடிக்கடி **युक्त्या**-யுக்தியினால், **इमं**-இந்த, **नित्यानित्यपदार्थशोधनं**-பதார்த்தங் களில் இது நித்யம், இது அநித்யம் என்று பரிசோதிப்பதை, **कुर्वतां**-செய்கிறவர்களும், **तस्मात्**-அதிலிருந்து, **उत्थ**-உண்டான, **महा-विरक्त्यसिमतां**-தீவ்ர வைராக்யமென்னும் கத்தியுடன் கூடியவர்களும், **मोक्षैककाङ्क्षावतां**-மோக்ஷம் ஒன்றிலேயே ஆவலுடன் கூடியவர்களு மான, **धन्यानां**-பாக்யசாலிகளுக்குத்தான், **प्रियादिविषयेषु**-அன்பிற் குரிய மனைவி முதலான விஷயங்களில், **आशालताच्छेदनं**-ஆசை என்னும் கொடியை அறுப்பது, **सुलभं**-ஸுலபம்.

நித்ய நைமித்திக கர்மாக்களை பலனை இச்சிக்காமல் ஈச்வர அர்பணமாகச் செய்தால் பாபம் விலகும். மனம் பரிசுத்தமாகும். புத்தித்திறமையுடன் பெரியோர்களிடம் சாஸ்திர விஷயங்களைக்

கேட்டுத்தெரிந்து சாஸ்திர பலத்தாலும் யுக்தியாலும் உலகிலுள்ள பதார்த்தங்களில் இது நித்யம் இது அநித்யம் என்பதைப் பிரித்துத் தெரிந்துகொள்வதுடன் இதை எப்போதும் சிந்திக்க வேண்டும் இதன் மூலம் தீவ்ர வைராக்யம் உண்டாகும் மோக்ஷமொன்றிலேயே ஆசைகொண்ட இவர்களே பாக்யசாலிகள். இவர்கள் எந்த எந்தப்பொருளில் இதற்கு முன் மிகுந்த ஆசை கொண்டிருந்தார்களோ, அந்த ஆசை ஸுலபமாக இவர்களுக்கு அடியோடு நீங்கிவிடும் (87)

संसारमृत्योर्बलिनः प्रवेष्टुं द्वाराणि तु त्रीणि महान्ति लोके ।
कान्ता च जिह्वा कनकं च तानि रुणद्धि यस्तस्य भयं न मृत्योः ॥

ஸம்ஸாரம்ருத்யோர் பலிந: ப்ரவேஷ்டும்
த்வாராணி து த்ரீணி மஹாந்தி லோகே I
காந்தா ச ஜிஹ்வா கநகம் ச தாநி
ருணத்தி யஸ்தஸ்ய பயம் ந ம்ருத்யோ: II

**बलिनः**-வலிமையுள்ள, **संसारमृत्योः**-ஸம்ஸாரமென்னும் மிருத்யு, **प्रवेष्टुं**-நுழைவதற்கு, **लोके**-உலகில், **कान्ता च**-மங்கையரும், **जिह्वा**-நாக்கும், **कनकं च**-தங்கமும் (என்ற இந்த), **त्रीणि**-மூன்று, **महान्ति**-பெரிய, **द्वाराणि**-வாசல்கள் (உள்ளன), **यः**-எவன், **तानि**-அவைகளை, **रुणद्धि**-அடைக்கிருனோ, **तस्य**-அவனுக்கு, **मृत्योः**-மிருத்யுவிடமிருந்து, **न भयं**-பயமில்லை.

மிகவும்பலசாலியாயிருக்கிற ஸம்ஸாரம் என்ற மிருத்யு உள்ளே நுழைவதற்கு உலகத்தில் மூன்று பெரிய துவாரங்கள் (வாசல்கள்) இருக்கின்றன, அதாவது, ஸ்திரீ, நாக்கு, தங்கம், என்பவை. இம்மூன்றின் வழியாகத்தான் மிருத்யு மனிதனிடம் உட்புகுகிருன். எவன் இம்மூன்று வாசல்களையும் அடைத்துவிடுகிருனோ அவனுக்குத்தான் மிருத்யுவினிடமிருந்து பயம் கிடையாது. பெண்ணிடமும் பொருளிலும் ஆசை கொண்டவர், நாக்குக்குக் கட்டுப்பட்டவர் இவர்கள் தம் ஆசையை நிறைவேற்ற பல கெட்ட செயல்களைப் புரிவதன் மூலம் பிறவி மரணம் என்னும் ஸம்ஸாரத்திலிருந்து மீள முடியாமல் இதிலேயே உழன்று கொண்டிருக்கின்றனர். இந்த ஆசையை யொழித்தவர் பிறவிக் கடலைத்தாண்டி அழிவற்ற நிலையை அடைகின்றனர். (88)

मुक्तिश्रीनगरस्य दुर्जयतरं द्वारं यदस्त्यादिमं
तस्य द्वे अररे धनं च युवती ताभ्यां पिनद्धं दृढम् ।
कामाख्यार्गलदारुणा बलवता द्वारं तदेतत्त्रयं
धीरो यस्तु भिनत्ति सोऽर्हति सुखं भोक्तुं विमुक्तिश्रियः ॥

*முக்திச்ரீநகரஸ்ய துர்ஜயதரம் த்வாரம் யதஸ்த்யாதிமம்*
*தஸ்ய த்வே அரரே தநம் ச யுவதீ தாப்யாம் பிநத்தம் த்ருடம் ।*
*காமாக்யார்களதாருணா பலவதா த்வாரம் ததேதத் த்ரயம்*
*தீரோ யஸ்து பிநத்தி ஸோऽர்ஹதி ஸுகம் போக்தும் விமுக்திச்ரிய: ॥*

**मुक्तिश्रीनगरस्य**-மோக்ஷலக்ஷ்மியின் நகரத்திற்கு, **दुर्जयतरं**-ஜயிக்கமுடியாததான, **यत्**-எந்த, **आदिमं**-முதலாவது, **द्वारं**-வாசல், **अस्ति**-இருக்கிறதோ, **तस्य**-அதற்கு, **धनं**-செல்வமும், **युवती च**-பெண்ணும் (என்ற), **द्वे अररे**-இரண்டு கதவுகள். **ताभ्यां**-அவைகளால் **पिनद्धं**-மூடப்பட்ட, **द्वारं**-வாசல், **बलवता**-பலமுள்ள, **कामाख्यार्गलदारुणा**-காமம் என்ற பெயருள்ள தாப்பாள் கட்டையால் **दृढं**-உறுதியானது, **तत् एतत् त्रयं**-அந்த இந்த மூன்றையும், **यस्तु धीरः**-எந்த தைரியசாலி, **भिनत्ति**-பிளக்கிருனோ, **सः**-அவன், **विमुक्तिश्रियः**-மோக்ஷலக்ஷ்மியின், **सुखं**-ஸுகத்தை, **भोक्तुं**-அநுபவிப்பதற்கு, **अर्हति**-தகுதியுள்ளவனாகிருன்.

*மோக்ஷலக்ஷ்மியின் நகரத்திற்கு மிகவும் சிரமப்பட்டு ஜயிக்க வேண்டியதாய் முதலில் எந்த வாசல் இருக்கிறதோ, அதற்கு செல்வம், ஸ்திரீ, என்று இரண்டு கதவுகள். அவைகளால் மூடப்பட்ட வாசல் காமம் என்கிற பலமான தாப்பாள் கட்டையால் திடமாக உள்ளது. ஆகையால் இந்த மூன்றையும் எந்த தீரபுருஷன் உடைக்கிருனோ, அவன்தான் மோக்ஷலக்ஷ்மியின் ஸுகத்தை அனுபவிக்கமுடியும். தாரேஷணை, வித்தேஷணை என்ற பெண்ணாசை பணத்தாசை இரண்டையும் முற்றிலும் துறந்தவன் தான் மோக்ஷானந்தத்தை அடையமுடியும்.* (89)

**आरूढस्य विवेकाश्वं तीव्रवैराग्यखड्गिनः ।**
**तितिक्षावर्मयुक्तस्य प्रतियोगी न दृश्यते ॥ ९० ॥**

*ஆரூடஸ்ய விவேகாச்வம் தீவ்ரவைராக்ய கட்கிந: I*
*திதிக்ஷாவர்மயுக்தஸ்ய ப்ரதியோகீ ந த்ருச்யதே ॥*

**विवेकाश्वं**-விவேகம் என்னும் குதிரையில், **आरूढस्य**-ஏறியவனும், **तीव्रवैराग्यखड्गिनः**-பலமான வைராக்யமென்னும் கத்தியுடையவனும், **तितिक्षावर्मयुक्तस्य**-பொறுமை என்னும் கவசத்தோடு கூடினவனுமான புருஷனுக்கு, **प्रतियोगी**-எதிரி, **न दृश्यते**-காணப்படுவதில்லை.

*விவேகமாகிற குதிரையில் ஏறிக்கொண்டு, தீவிர வைராக்யமாகிற வாள் உள்ளவனாய், பொறுமை என்ற கவசத்தையுடையவனாக, இருப்பவனுக்கு எதிராளி காணமுடியாது. விவேகம், வைராக்யம், பொறுமை இம்மூன்றும் மனதில் உறுதியாயிருந்தால் உலகவிஷயங்களால் அவன் சலிக்கமாட்டான்.* (90)

**विवेकजां तीव्रविरक्तिमेव मुक्तेर्निदानं निगदन्ति सन्तः ।**
**तस्माद्विवेकी विरतिं मुमुक्षुः संपादयेत्तां प्रथमं प्रयत्नात् ॥ ९१ ॥**

*விவேகஜாம் தீவ்ரவிரக்திமேவ*
*முக்தேர் நிதானம் நிகதந்தி ஸந்த: I*
*தஸ்மாத் விவேகீ விரதிம் முமுக்ஷு:*
*ஸம்பாதயேத் தாம் ப்ரதமம் ப்ரயத்நாத் ॥*

**विवेकजां**-விவேகத்தினால் உண்டாகிற, **तीव्रविरक्तिमेव**-தீவ்ரமான வைராக்யதைத்தான், **मुक्तेः**-முக்திக்கு, **निदानं**-மூலகாரணமாக, **सन्तः**-பெரியோர்கள், **निगदन्ति**-சொல்கிறார்கள். **तस्मात्** ஆகையால், **मुमुक्षुः**-மோக்ஷமடைவதில் விருப்பமுள்ளவன், **प्रथमं**-முதலில், **विवेकी**-விவேகத்துடன்கூடியவனாகி, **प्रयत्नात्**-முயற்சியால், **तां**-அந்த, **विरतिं**-வைராக்யத்தை, **संपादयेत्**-ஸம்பாதித்துக்கொள்ளவேண்டும்.

*முதலில் சுருதிகளாலும் யுக்திகளாலும் பதார்த்தங்களை நன்கு ஆராய்ந்து ப்ரஹ்மம் ஒன்றே நித்யமானது ஸத்யப்பொருள்,*

மற்றவையெல்லாம் அநித்யம், தீமைபயப்பது என்று நன்கு பிரித்துத் தெரிந்துகொள்வது என்ற விவேகம் ஏற்பட்டு அதன் மூலம் உண்டாகும் தீவ்ர வைராக்யம் தான் முக்திக்கு ஸாதனமாகும் விவேகமில்லாமல் வேறுகாரணங்களால் ஏற்படும் வைராக்யம் நிலைத்திருக்காது. மற்றோர் சமயம் வைராக்யம் மறைந்து ஆசை ஏற்பட்டுவிடக்கூடும். ஆதலால் மோக்ஷத்தை அடையவிரும்புபவன் முதலில் விவேகத்தையடைந்து பிறகு அதன் மூலம் முயற்சியுடன் வைராக்யத்தை ஸம்பாதிக்க வேண்டும். (91)

पुमानजातनिर्वेदो देहबन्धं जिहासितुम् ।
न हि शक्नोति निर्वेदो बन्धभेदो महानसौ ॥ ९२ ॥

புமாநஜாதநிர்வேதோ தேஹபந்தம் ஜிஹாஸிதும் ।
நஹி ஶக்நோதி நிர்வேதோ பந்தபேதோ மஹாநஸௌ ॥

**अजातनिर्वेदः**–வைராக்யம் ஏற்படாத, **पुमान्**-மனிதன், **देहबन्धं**-சரீரமாகிற கட்டை, **जिहासितुं**-விடுவதற்கு, **न हि शक्नोति**–சக்தியுள்ளவனாகமாட்டான் **असौ**-இந்த **निर्वेदः**–வைராக்யம், **महान्**–பெரிய, **बन्धभेदः**–கட்டைத் தொலைக்கும் ஸாதனம்.

சரீரத்துடன் ஆத்மா கட்டுப்பட்டு எல்லாத்துன்பங்களையும் அனுபவிக்கிறது வைராக்ய மில்லாதவனுக்கு சரீரபந்தம் விலகாது ஆகவே சரீரபந்தம் விலக வைராக்யம் தான் முக்யமான ஸாதனம். (92)

वैराग्यरहिता एव यमालय इवालये ।
क्लिश्यन्ति त्रिविधैस्तापैर्मोहिता अपि पण्डिताः ॥ ९३ ॥

வைராக்யரஹிதா ஏவ யமாலய இவாலயே ।
க்லிஶ்யந்தி த்ரிவிதைஸ்தாபை: மோஹிதா அபி பண்டிதா: ॥

**पण्डिता अपि**–படித்தவர்களாயிருந்தும், **वैराग्यरहिता एव**–வைராக்யமில்லாதவர்கள்தான், **मोहिताः** – மோஹமடைந்தவர்களாகி, **यमालये इव**–யம லோகத்தில்போல, **आलये**-(தனது) வீட்டில், **त्रिविधैः** மூன்றுவிதமான, **तापैः**–தாபங்களால், **क्लिश्यन्ति**– துன்புறுகிறார்கள்.

படித்த போதிலும் வைராக்யம் ஏற்படாவிட்டால் அவர்கள் தான் உலகவிஷயங்களில் மயங்கி விட்டில் பற்றுக்கொண்டு அதன் மூலம் நரகத்தில் போல ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்னும் மூவித தாபங்களால் வருந்துகிறார்கள். (93)

(அ) நான்கு ஸாதனங்களில் விவேகம் வைராக்யம் என்ற இரண்டின் லக்ஷணத்தையும் அவசியத்தன்மையையும் விவரித்து விட்டு இனி மூன்றாவது ஸாதனமான சமாதிஷட்கஸம்பத்தி என்பதில் அடங்கியிருக்கும் ஆறு அம்சங்கள் எவை என்று முதலில் சொல்லிவிட்டு அவைகள் ஒவ்வொன்றையும் விஸ்தாரமாக எடுத்துச் சொல்கிறார் :—

शमो दमस्तितिक्षोपरतिः श्रद्धा ततः परम् ।
समाधानमिति प्रोक्तं षडेवैते शमादयः ॥ ९४ ॥

ஶமோ தமஸ்திதிக்ஷோபரதி: ச்ரத்தா தத: பரம் ।
ஸமாதானம் இதி ப்ரோக்தம் ஷடேவைதே ஶமாதய: ॥

**शमः**–சாந்தி, **दमः**–தமம், **तितिक्षा**–பொறுமை, **उपरतिः**–உபரதி **श्रद्धा**–சிரத்தை, **ततः परं**–அதன்பின், **समाधानं**–ஸமாதானம், **इति प्रोक्तं**–என்று சொல்லப்பட்டுள்ளது. **एते**–இந்த, **षडेव**–ஆறுதான், **शमादयः**–சமம் முதலியவை.

1. சமம், 2. தமம், 3. திதிக்ஷா, 4 உபரதி, 5. சிரத்தை 6. ஸமாதானம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆறு தான் சமம் முதலியவை. (94)

एकवृत्त्यैव मनसः स्वलक्ष्ये नियतस्थितिः ।
शम इत्युच्यते सद्भिः शमलक्षणवेदिभिः ॥ ९५ ॥

ஏகவ்ருத்த்யைவ மநஸ: ஸ்வலக்ஷ்யே நியதஸ்திதி: ।
ஶம இத்யுச்யதே ஸத்பி: ஶமலக்ஷணவேதிபி: ॥

**एकवृत्त्यैव**–ஒரே விருத்தியுடனேயே, **स्वलक्ष्ये**–தனது லக்ஷ்யத்தில், **मनसः**–மனதின், **नियतस्थितिः**–கட்டுப்பட்ட ஸ்திதி, **शम इति**–சமம் என்று, **शमलक्षणवेदिभिः**–சமத்தின் லக்ஷணமறிந்த, **सद्भिः**–மஹான்களால், **उच्यते**–சொல்லப்படுகிறது.

*ஒரே விருத்தியுடன் தனது லக்ஷ்யத்தில் மனம் அடங்கியிருப்பது சமம் என்று சமத்தின் லக்ஷணத்தையறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகிறது. (95)*

**उत्तमो मध्यमश्चैव जघन्य इति च त्रिधा ।**
**निरूपितो विपश्चिद्भिः तत्तल्लक्षणवेदिभिः ॥ ९६ ॥**

*உத்தமோ மத்யமச்சைவ ஜகந்ய இதி ச த்ரிதா ।*
*நிரூபிதோ விபச்சித்பிஸ் தத்தல்லக்ஷண வேதிபி: ॥*

**उत्तमः**-உத்தமம், **मध्यमश्चैव**-மத்யமம், **जघन्यः**-அதமம், **इति च**-என்றும், **त्रिधा**-மூன்று விதமாக, **तत्तल्लक्षणवेदिभिः**-அததன் லக்ஷணங்களை அறிந்த, **विपश्चिद्भिः**-அறிவாளிகளால் (சமமானது), **निरूपितः**-விளக்கப்பட்டிருக்கிறது.

*இது உத்தமம், மத்யமம், அதமம் என்று மூன்றுவிதமாக அததன் லக்ஷணத்தையறிந்த பண்டிதர்களால் நிருபிக்கப்பட்டிருக்கிறது. (96)*

**स्वविकारं परित्यज्य वस्तुमात्रतया स्थितिः ।**
**मनसः सोत्तमा शान्तिर्ब्रह्मनिर्वाणलक्षणा ॥ ९७ ॥**

*ஸ்வவிகாரம் பரித்யஜ்ய வஸ்துமாத்ரதயா ஸ்திதி: ।*
*மநஸ: ஸோத்தமா ஶாந்திர் ப்ரஹ்மநிர்வாணலக்ஷணா ॥*

**मनसः**-மனது, **स्वविकारं**-தனது விகாரத்தை (விருத்தியாக பரிணமிப்பதை), **परित्यज्य**-விட்டுவிட்டு, **वस्तुमात्रतया**-ப்ரஹ்ம வஸ்துவாகமட்டுமே, **स्थितिः**-இருப்பது (யாதோ), **सा**-அது, **ब्रह्मनिर्वाणलक्षणा**-ப்ரஹ்ம நிர்வாணத்தைக் குறிக்கும், **उत्तमा शान्तिः**-உத்தமமான சாந்தியாகும்.

*மனஸ் தான் மாறுதல் அடைவதை விட்டு விட்டு அறியப்படும் வஸ்துவான பிரஹ்மமாகவே இருந்து விடுவது என்பது பிரஹ்மானந்தத்தைக் குறிக்கும் உத்தமமான சாந்தி. (97)*

**प्रत्यक्प्रत्ययसंतानप्रवाहकरणं धियः ।**
**यदेषा मध्यमा शान्तिः शुद्धसत्त्वैकलक्षणा ॥ ९८ ॥**

*ப்ரத்யக் ப்ரத்யய ஸந்தாநப்ரவாஹ கரணம் திய: ।*
*யதேஷா மத்யமா சாந்தி: சுத்தஸத்வைகலக்ஷணா ॥*

**धिय:**–மனதிற்கு, **प्रत्यक्प्रत्यय**–ஆத்ம விஷயமான ஞானத்தை, **संतानप्रवाहकरणं**–பிரவாஹம் போல் துடர்ச்சியாகச் செய்வது, **यत्**–யாதொன்று உண்டோ, **एषा**–இது, **शुद्धसत्त्वैकलक्षणा**–கலப்பில்லாத ஸத்வகுணம் மட்டும் உள்ளதைக்குறிக்கும், **मध्यमा शान्तिः**–மத்யமமான சாந்தி.

*அந்தராத்ம விஷயமான ஞானத்துடர்ச்சியை இடைவிடாமல் பிரவாஹம் போல் மனஸில் செய்வது மத்யமமான சாந்தி இது சுத்தமான ஸத்வகுணத்தைக் குறிக்கும். (98)*

**विषयव्यापृतिं त्यक्त्वा श्रवणैकमनस्स्थितिः ।**
**मनसश्चेतरा शान्तिर्मिश्रसत्त्वैकलक्षणा ॥ ९९ ॥**

*விஷய வ்யாப்ருதிம் த்யக்த்வா ச்ரவணைகமநஸ்ஸ்திதி: ।*
*மநஸச்சேதரா சாந்தி: மிச்ரஸத்வைகலக்ஷணா ॥*

**विषयव्यापृतिं**–விஷயங்களில் செல்வதை, **त्यक्त्वा**–விட்டுவிட்டு, **श्रवणैकमनःस्थितिः**–ச்ரவணம் ஒன்றிலேயே மனஸ் இருப்பது, **मिश्रसत्त्वैकलक्षणा**–கலப்புள்ள ஸத்வகுணத்தைக் குறிக்கின்ற, **मनसः**–மனதின், **इतरा शान्तिः**–மற்றொரு (அதமமான) சாந்தி.

*விஷயங்களில் செல்வதை விட்டு விட்டு, தத்வத்தைக் கேட்டறிவது ஒன்றில் மாத்திரம் மனஸ் இருப்பது அதமமான சாந்தி இது மற்ற குணங்கள் கலந்த ஸத்வ குணத்தைக் குறிக்கும்.*

*[தன் லக்ஷ்யத்திலேயே மனம் அடங்கியிருப்பது சாந்தி என்று பொதுவாகக் கூறப்பட்டது ஆனாலும் அப்யாஸத்தை யனுஸரித்து இதை மூன்று விதமாகப் பிரிக்கிறார். மனதில் விருத்தியே ஏற்படாமல் பிரஹ்மவஸ்துவாகவே மனம் ஆகி விடுவதுதான் உத்தமமான சாந்தி நிர்விகல்ப ஸமாதியில் இந் நிலை ஏற்படும் இது ப்ரஹ்மநிர்வாணமென்ற முக்தி நிலையைக் குறிக்கும் மனதில் ரஜஸ்தமோ குணக்கலப்பில்லாமல் சுத்த ஸத்வ குணமே நிறைந்திருந்தால் அப்பொழுது மனதில் அநாத்ம விருத்திகள் ஒன்றும் ஏற்படாமல் ஆத்மவ்ருத்தி ஒன்றே பிர வாஹம் போல் தொடர்ந்து வந்துகொண்டிருக்கும் ஸவிகல்ப*

ஸமாதியில் இந்நிலை ஏற்படும். இது மத்யமமான சாந்தி உலக விஷயங்களில் மனதைச் செலுத்தாமல் எப்பொழுதும் வேதாந்த சிரவணத்திலேயே மனம் ஈடுபட்டிருப்பது அதமமான சாந்தியாகும் இந்நிலையில் மற்ற குணங்கள் கலந்திருந்த போதிலும் ஸத்வகுணம் மேலோங்கியிருக்கும். சிரவணத்தில் ஈடுபடாமல் உலகவிஷயங்களில் மனதைச் செலுத்துபவர்களுக்கு சாந்தியே கிடையாது.] (99)

प्राच्योदीच्याङ्गसद्भावे शमः सिध्यति नान्यथा ।
तीव्रा विरक्तिः प्राच्याङ्गमुदीच्याङ्गं दमादयः ॥ १०० ॥

ப்ராச்யோதீச்யாங்கஸத்பாவே ஶம: ஸித்யதி நாந்யதா ।
தீவ்ரா விரக்தி: ப்ராச்யாங்கம் உதீச்யாங்கம் தமாதய: ॥

प्राच्योदीच्याङ्गसद्भावे-பூர்வாங்கமும் உத்தராங்கமும் இருந்தால், शमः-சாந்தி, सिध्यति-ஸித்திக்கும், अन्यथा-இல்லாவிடில், न-ஸித்திக்காது. तीव्रा विरक्तिः-தீவிரமான வைராக்யம், प्राच्याङ्गं-பூர்வாங்கம், दमादयः-தமம் முதலியவை, उदीच्याङ्गं-உத்தராங்கம்.

முன் அங்கம் பின் அங்கம் இவை இருந்தால் தான் சமம் ஸித்திக்கும் அவையில்லையானல் ஸித்திக்காது. தீவிரமான வைராக்யம் சமத்திற்கு பூர்வாங்கம் தமம் முதலானதுகள் உத்தராங்கம். (100)

(அ) சாந்தி ஏற்படுவதற்குள்ள ஸாதனங்களை விவரிப்பதற்கு முன்னதாக யாருக்கு சாந்தி ஏற்படாது என்பதை சொல்கிருர். இந்த குறைகளை நிவிருத்தி செய்து கொண்டால்தான், அந்த ஸாதனங்கள் பிரயோஜனப்படுமென்று கருத்து:—

कामः क्रोधश्च लोभश्च मदो मोहश्च मत्सरः ।
न जिताः षडिमे येन तस्य शान्तिर्न सिध्यति ॥ १०१ ॥

காம: க்ரோதச்ச லோபச்ச மதோ மோஹச்ச மத்ஸர: ।
ந ஜிதா: ஷடிமே யேந தஸ்ய ஶாந்திர் ந ஸித்யதி ॥

कामः-காமமும், क्रोधश्च-கோபமும், लोभश्च-பேராசையும், मदः-கர்வமும், मोहश्च-மோஹமும், मत्सरः-அஸூயையும், इमे षट्-இந்த

ஆறும், **येन**–எவனால், **न जिताः**–ஜயிக்கப்படவில்லையோ, **तस्य**–அவனுக்கு **शान्तिः**–சாந்தி, **न सिध्यति**–ஸித்திக்காது.

*காமம், கோபம், பேராசை, கர்வம், மோஹம், அஸூயை ஆகிய இந்த ஆறும் எவனால் ஜயிக்கப்படவில்லையோ அவனுக்கு சாந்தி ஸித்திக்காது.* (101)

**शब्दादिविषयेभ्यो यो विषवन्न निवर्तते ।**
**तीव्रमोक्षेच्छया भिक्षोस्तस्य शान्तिर्न सिध्यति ॥ १०२ ॥**

*ஶப்தாதி விஷயேப்யோ யோ விஷவத் ந நிவர்த்ததே ।*
*தீவ்ரமோக்ஷேச்சயா பிக்ஷோஸ்தஸ்ய ஶாந்திர்ந ஸித்யதி ॥*

**तीव्रमोक्षेच्छया**–முக்தியில் தீவ்ரமான விருப்பத்தால், **विषवत्**–விஷத்திலிருந்துபோல், **शब्दादिविषयेभ्यः**–சப்தம் முதலான விஷயங்களிலிருந்து, **यः**–எவன், **न निवर्तते**–விலகிச்செல்லவில்லையோ, **तस्य भिक्षोः**–அந்த ஸந்யாஸிக்கு, **शान्तिः**–சாந்தி, **न सिध्यति**–ஸித்திக்காது.

*மோக்ஷம் அடைவது ஒன்றிலேயே தீவ்ரமான விருப்பம் கொண்டு வேறு ஒன்றிலும் ஆசைகொள்ளாமல் விஷத்தைக் கண்டு பயந்து தூரத்தில் விலகிச்செல்வதுபோல் சப்தாதி விஷயங்களை விட்டு விலகிச்செல்பவனுக்குத்தான் சாந்தி கிடைக்கும் சப்தாதி விஷயங்களை நோக்கிச் செல்பவன் ஸந்யாஸியாயிருந்தாலும் சாந்திபெறமாட்டான்.* (102)

**येन नाराधितो देवो यस्य नो गुर्वनुग्रहः ।**
**न वश्यं हृदयं यस्य तस्य शान्तिर्न सिध्यति ॥ १०३ ॥**

*யேந நாராதிதோ தேவோ யஸ்ய நோ குர்வனுக்ரஹ: ।*
*ந வச்யம் ஹ்ருதயம் யஸ்ய தஸ்ய ஶாந்திர் ந ஸித்யதி ॥*

**येन**–எவனால், **देवः**–ஈசுவரன், **न आराधितः**–பூஜிக்கப்படவில்லையோ, **यस्य**–எவனுக்கு, **नो गुर्वनुग्रहः**–குருவின் அருள் இல்லையோ **यस्य**–எவனுடைய, **हृदयं**–மனது, **न वश्यं**–ஸ்வாதீனமாக இல்லையோ, **तस्य**–அவனுக்கு, **शान्तिः**–சாந்தி, **न सिध्यति**–ஸித்திக்காது.

*எவனால் ஈசுவரன் ஆராதிக்கப்படவில்லையோ, எவனுக்கு குருவின் அனுக்கிரஹம் இல்லையோ, எவனுடைய மனஸ் வசமாக*

*வில்லையோ, அவனுக்கு சாந்தி ஸித்திக்காது குரு கிருபையும் ஈசுவர கிருபையும் பெற்று அதன்மூலம் மனம் வசமானவர்களுக்குத்தான் சாந்தி ஏற்படும்.* **(103)**

**मनःप्रसादसिद्ध्यर्थं साधनं श्रूयतां बुधैः ।**
**मनःप्रसादो यत्सत्त्वे यदभावे न सिध्यति ॥ १०४ ॥**

*மந: ப்ரஸாத ஸித்த்யர்த்தம் ஸாதநம் ச்ருயதாம் புதை: ।*
*மந: ப்ரஸாதோ யத்ஸத்வே யதபாவே ந ஸித்த்யதி ॥*

**यत्सत्त्वे**–ஏது இருந்தால், **मनःप्रसादः**–மனதின் தெளிவு ஏற்படுமோ **यदभावे**–ஏது இல்லாவிட்டால், **न सिध्यति**–ஏற்படாதோ, (அவ்விதமான) **साधनं**–ஸாதனமானது, **मनःप्रसादसिद्ध्यर्थं**–மனதின் தெளிவு ஏற்படுவதற்காக, **बुधैः**–அறிவாளிகளால், **श्रूयताम्**–கேட்கப்படட்டும்.

*ஏது இருந்தால் மனதிற்குத் தெளிவு ஏற்படுமோ, ஏது இல்லையானல் ஏற்படாதோ, அந்த, மனத்தெளிவு ஏற்படுவதற்காக உள்ள ஸாதனத்தை அறிவாளிகள் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும்.* **(104)**

*(அ) அந்த ஸாதனம் 18 விதமாயிருக்கிறதென்று சொல்லிவிட்டு, ஒவ்வொன்றின் லக்ஷணத்தையும் தனித்தனியே விளக்குகிருர் :—*

**ब्रह्मचर्यं अहिंसा च दया भूतेष्ववक्रता ।**
**विषयेष्वतिवैतृष्ण्यं शौचं दम्भविवर्जनम् ॥ १०५ ॥**

**सत्यं निर्ममता स्थैर्यं अभिमानविवर्जनम् ।**
**ईश्वर ध्यानपरता ब्रह्मविद्भिः सह स्थितिः ॥ १०६ ॥**

**ज्ञानशास्त्रैकपरता समता सुखदुःखयोः ।**
**मानानासक्तिः एकान्तशीलता च मुमुक्षुता ॥ १०७ ॥**

**यस्यैतद्विद्यते सर्वं तस्य चित्तं प्रसीदति ।**
**न त्वेतद्धर्मशून्यस्य प्रकारान्तरकोटिभिः ॥ १०८ ॥**

ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச தயா பூதேஷ்வவக்ரதா ।
விஷயேஷ்வதி வைத்ருஷ்ண்யம் ஶௌசம் தம்ப
விவர்ஜனம் ॥

ஸத்யம் நிர்மமதா ஸ்தைர்யம் அபிமாந விவர்ஜநம் ।
ஈச்வரத்யாநபரதா ப்ரஹ்மவித்பி: ஸஹ ஸ்திதி: ॥

ஞாந ஶாஸ்த்ரைக பரதா ஸமதா ஸுகதுக்கயோ: ।
மாநாநாஸக்திரேகாந்த சீலதா ச முமுக்ஷுதா ॥

யஸ்யைதத் வித்யதே ஸர்வம் தஸ்ய சித்தம் ப்ரஸீததி ।
ந த்வேதத்தர்மஶூந்யஸ்ய ப்ரகாராந்தரகோடிபி: ॥

**ब्रह्मचर्यं**–ப்ரஹ்மசர்யம், **अहिंसा च**–அஹிம்ஸை, **भूतेषु**–பிராணிகளிடம், **दया**–தயை, **अवक्रता**–நேர்மை. **विषयेषु**–போகவிஷயங்களில், **अतिवैतृष्ण्यं**–மேலான வைராக்யம், **शौचं**–சுத்தி, **दम्भविवर्जनं**–டம்பத்தை விட்டுவிடுதல், **सत्यं**–உண்மை, **निर्ममता**–கர்மமற்றிருத்தல், **स्थैर्यं**–ஸ்திரத்தன்மை, **अभिमानविवर्जनं**–அபிமானத்தை விடுதல், **ईश्वरध्यानपरता**–ஈசுவர த்யானத்தில் ஈடுபடுவது, **ब्रह्मविद्भिः सह**–ப்ரஹ்ம ஞானிகளுடன் கூட, **स्थितिः**–இருத்தல், **ज्ञानशास्त्रैकपरता**–ஞான சாஸ்திரம் ஒன்றிலேயே ஈடுபடுவது, **सुखदुःखयोः**–இன்பம் துன்பம் இரண்டிலும், **समता**–ஸமமாயிருத்தல், **मानानासक्तिः**–தன்னை கௌரவிப்பதில் ஈடுபடாதிருத்தல், **एकान्तशीलता**–தனிமையில் இருக்கப் பழகுதல், **मुमुक्षुता च**–மோக்ஷமடைவதில் விருப்பம், **एतत् सर्वं**–இது எல்லாம், **यस्य**–எவனுக்கு, **विद्यते**–இருக்கிறதோ, **तस्य**–அவனுடைய, **चित्तं**–மனம், **प्रसीदति**–தெளிவடைகிறது. **एतद्धर्मशून्यस्य**–இந்த தர்மங்களில்லாதவனுக்கு, **प्रकारान्तरकोटिभिः**–இவைகளைத் தவிற வேறு கோடிக்கணக்கான முறைகளாலும், **न**–(மனத்தெளிவு) ஏற்படாது.

(1) பிரஹ்மசர்யம், (2) அஹிம்ஸை, (3) ஸகலபிராணிகளிடத்திலும் தயை, (4) அவக்ரதா (கோணலில்லாமை) (5) விஷயங்களில் நன்கு ஆசையற்றிருத்தல், (6) சௌசம், (7) தம்பத்தை தவிர்ப்பது, (8) ஸத்யம், (9) மமதையற்றிருத்தல், (10) ஸ்திரமாயிருத்தல், (11) அபிமானத்தைத் தவிர்ப்பது, (12) ஈசுவரனை தியானம் செய்வதிலேயே ஈடுபடுவது, (13) பிரஹ்மவித்துக்களுடன் கூடவே இருப்பது, (14) ஞான சாஸ்திரமொன்றிலேயே

ஈடுபடுவது, (15) ஸுக துக்கங்களில் ஸமமாயிருப்பது, (16) பஹுமானத்தில் ஆஸக்தியில்லாமலிருப்பது, (17) தனித்திருந்து பழக்கம், (18) மோக்ஷத்தில் ஆவலுடன் இருத்தல். எவருக்கு இது எல்லாம் இருக்கிறதோ, அவருடைய சித்தம் தெளிவடையும். இந்த அம்சங்கள் இல்லாதவருக்கு, கோடிக்கணக்காக வேறு எந்த பிரகாரமாய்ச் செய்து பார்த்தாலும், சித்தம் தெளிவடையாது. (105-108)

स्मरणं दर्शनं स्त्रीणां गुणकर्मानुकीर्तनम् ।
समीचीनत्वधीस्तासु प्रीतिः संभाषणं मिथः ॥ १०९ ॥

सहवासश्च संसर्गोऽष्टधा मैथुनं विदुः ।
एतद्विलक्षणं ब्रह्मचर्यं चित्तप्रसादकम् ॥ ११० ॥

ஸ்மரணம் தர்ஶநம் ஸ்த்ரீணும் குணகர்மாநு கீர்த்தனம் ।
ஸமீசீநத்வதீஸ்தாஸு ப்ரீதி: ஸம்பாஷணம் மித: ॥

ஸஹவாஸச்ச ஸம்ஸர்க்கோऽஷ்டதா மைதுநம் விது: ।
ஏதத் விலக்ஷணம் ப்ரஹ்மசர்யம் சித்தப்ரஸாதகம் ॥

**स्त्रीणां**-பெண்களை, **स्मरणं**-மனதில் நினைப்பது, **दर्शनं**-கண்களால் பார்ப்பது, **गुणकर्मानुकीर्तनं**-குணங்களையும் செய்கைகளையும் வாயால் சொல்வது, **तासु**-அவர்களைப்பற்றி, **समीचीनत्वधीः**-சிறந்தவர் என்ற மனப்பான்மை, **प्रीतिः**-அவர்களிடம் அன்பு, **मिथःसंभाषणं**-தனிமையில் அவர்களுடன் பேசுவது, **सहवासः**-சேர்ந்து வஸிப்பது, **संसर्गः**-சேர்க்கை (இவ்வாறு), **अष्टधा**-எட்டுவிதமாக, **मैथुनं**-மைதுனத்தை, **विदुः**-அறிந்துள்ளார்கள். **एतद्विलक्षणं**-இந்த எட்டிற்கும் எதிரிடையான **ब्रह्मचर्यं**-ப்ரஹ்மசர்யம், **चित्तप्रसादकम्**-மனதிற்குத் தெளிவை உண்டுபண்ணும்.

ஸ்திரீகளைப்பற்றி நினைப்பது 1, அவர்களைப்பார்ப்பது 2, அவர்களுடைய குணங்களையோ செய்கைகளையோ எடுத்துச் சொல்வது 3, அவர்களைப்பற்றி நன்ருயிருக்கிருர்களென்ற எண்ணம் 4, அவர்களிடத்தில் பிரீதிவைப்பது 5, அவர்களுடன் தனிமையில் ஸம்பாஷிப்பது 6, அவர்களுடன் கூடவே இருப்பது

7, சேர்க்கை 8, ஆக இவ்வெட்டுவிதமாக மைதுனம் (ஸ்திரீ புமான்களின் ஸம்பந்தம்) இருப்பதாக அறிந்திருக்கிறார்கள். இவ்வெட்டுக்கும் நேர் எதிரிடையாக இருப்பதே சித்தத்தைத் தெளிவுபடுத்தக்கூடிய ப்ரஹ்மசர்யம் என்பது. (109-110)

अहिंसा वाङ्मनःकायैः प्राणिमात्राप्रपीडनम् ॥ १११ ॥

அஹிம்ஸா வாங்மந: காயை: ப்ராணிமாத்ராப்ரபீடநம் ॥

**वाङ्मनःकायैः**-வாக்கு, மனம், உடல் இந்த மூன்று கரணங்களாலும், **प्राणिमात्राप्रपीडनं**-ஒரு பிராணியையும் துன்புறுத்தாமல் இருப்பது, **अहिंसा**-அஹிம்சையாகும்.

வாக்கு, மனஸ், சரீரம், இவைகளைக்கொண்டு எந்த பிராணிக்கும் துன்பமுண்டாக்காமலிருப்பது அஹிம்ஸையாகும்.

स्वात्मवत् सर्वभूतेषु कायेन मनसा गिरा ।
अनुकम्पा दया सैव प्रोक्ता वेदान्तवेदिभिः ॥ ११२ ॥

ஸ்வாத்மவத் ஸர்வபூதேஷு காயேந மநஸா கிரா ।
அநுகம்பா தயா ஸைவ ப்ரோக்தா வேதாந்த வேதிபி: ॥

**स्वात्मवत्**-தன்னிடத்தில்போல், **सर्वभूतेषु**-எல்லா பிராணிகளிடமும், **कायेन**-உடலினாலும், **मनसा**-மனதாலும், **गिरा**-வாக்காலும், **अनुकम्पा**-இரக்கம்கொள்வது (எதுவோ), **सैव**-அதுவே, **दया**-தயையாக, **वेदान्तवेदिभिः**-உபநிஷத்தை அறிந்தவர்களால், **प्रोक्ता**-சொல்லப்பட்டிருக்கிறது.

தன்னைப்போலவே எல்லா பிராணிகளிடத்திலும் சரீரத்தினாலும் மனஸினாலும் வாக்கினாலும் இரக்கம்கொள்வதுதான் தயை என்று வேதாந்தம் அறிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. (112)

करणत्रितयेष्वेकरूपताऽवक्रता मता ॥ ११३ ॥

கரணத்ரிதயேஷ்வேகரூபதாऽவக்ரதா மதா ॥

**करणत्रितयेषु**-சரீரம், வாக்கு, மனம் என்ற முக்கரணங்களிலும், **एकरूपता**-ஒரேமாதிரியாயிருப்பது, **अवक्रता**-கோணலில்லாமை (நேர்மை) என்று, **मता**-எண்ணப்பட்டுள்ளது.

ஐகரூப்யமாகிற மூன்று கரணங்களிலும் ஒரே தன்மையுடனிருப்பது அவக்ரதை (கோணல் இன்மை, ஆர்ஜவம்) என்று கருதப்படுகிறது. (113)

ब्रह्मादिस्थावरान्तेषु वैराग्यं विषयेष्वनु ।
यथैव काकविष्ठायां वैराग्यं तद्धि निर्मलम् ॥ ११४ ॥

ப்ரஹ்மாதி ஸ்தாவராந்தேஷு வைராக்யம்
விஷயேஷ்வனு ।
யதைவ காகவிஷ்டாயாம் வைராக்யம் தத்தி நிர்மலம் ॥

यथैव काकविष्ठायां—காக்கைகளின் மலத்தில்போலவே, ब्रह्मादिस्थावरान्तेषु-ப்ரஹ்மா முதல் ஸ்தாவரம் வரையுள்ள, विषयेषु—விஷயங்களில், अनु वैराग्यं-வெறுப்புத் தொடர்ந்திருப்பது (எதுவோ), तद्धि—அதுதான், निर्मलं-சுத்தமான, वैराग्यं—வைராக்யமாகும்.

ப்ரஹ்மா முதல் ஸ்தாவரம் வரை எல்லா விஷயங்களிலும், காக்கையின் விஷ்டையில் போலவே, வெறுப்புக்கொள்வது எதுவோ, அது தான் தோஷமற்ற வைராக்யம். (114)

बाह्यं आभ्यन्तरं चेति द्विविधं शौचं उच्यते ।
मृज्जलाभ्यां कृतं शौचं बाह्यं शारीरकं स्मृतम् ॥ ११५ ॥
अज्ञानदूरीकरणं मानसं शौचं आन्तरम् ।
अन्तःशौचे स्थिते सम्यक् बाह्यं नावश्यकं नृणाम् ॥ ११६ ॥

பாஹ்யமாப்யந்தரம் சேதி த்விவிதம் சௌசமுச்யதே ।
ம்ருஜ்ஜலாப்யாம் க்ருதம் சௌசம் பாஹ்யம் சாரீரகம்
ஸ்ம்ருதம் ॥
அஜ்ஞாந தூரீகரணம் மாநஸம் சௌசமாந்தரம் ।
அந்தச்சௌசே ஸ்திதே ஸம்யக் பாஹ்யம் நாவச்யகம்
ந்ருணாம் ॥

शौचं-சௌசமானது, बाह्यं-வெளிப்பட்டது, आभ्यन्तरं चेति-உள்பட்டது என்று, द्विविधं-இரண்டுவிதமாக, उच्यते—சொல்லப்படுகிறது: मृज्जलाभ्यां-மண்ணாலும் தீர்த்தத்தாலும், कृतं-செய்யப்

பட்ட, **शारीरकं**-சரீரத்தை ஒட்டியதான, **शौचं**-சௌசமானது, **बाह्यं**-பாஹ்யம் (வெளிப்படையானது) என்று **स्मृतं**-எண்ணப்பட்டுள்ளது.

**अज्ञानदूरीकरणं**-அக்ஞானத்தை விலக்குவது, **मानसं**-மனதை யொட்டியதான, **आन्तरं शौचं**-உள்சௌசமாகும். **सम्यक्**-நன்றாக, **अन्तः शौचे**-உள்சௌசம், **स्थिते**-இருந்தால், **नृणां**-மனிதர்களுக்கு, **बाह्यं**-வெளிசுத்தம், **न आवश्यकं**-கட்டாயமில்லை.

*சௌசம் (சுத்தி) என்பது வெளிப்படையானது, உள்ளிருப்பது, என்று இருவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மண்ணினாலும் ஜலத்தினாலும் சரீர ஸம்பந்தமாகச் செய்யப்படுவது வெளிப்படை சௌசம் என்று எண்ணப்படுகிறது. அறிவின்மையையே தூரவிலக்கி விடுவது மனஸ் ஸம்பந்தமான உள்சௌசம். உள்சௌசம் நன்கு இருந்து விட்டால் மனிதர்களுக்கு வெளிப்படை சௌசம் அவசியமில்லை.* (115-116)

**ध्यानपूजादिकं लोके द्रष्टर्येव करोति यः ।**
**पारमार्थिकधीहीनः स दम्भाचार उच्यते ।**
**पुंसः तथाऽनाचरणं अदम्भित्वं विदुर्बुधाः ॥ ११७ ॥**

*த்யாந பூஜாதிகம் லோகே த்ரஷ்டர்யேவ கரோதி யः ।*
*பாரமார்த்திகதீஹீநः ஸ தம்பாசார உச்யதே ।*
*பும்ஸஸ்ததாऽநாசரணம் அதம்பித்வம் விதுர்புதா: ॥*

**लोके**-உலகில், **यः**-எவன், **पारमार्थिकधीहीनः**-உண்மைக் கருத்து இல்லாமல், **द्रष्टरि एव**-பார்க்கிறவர் இருக்கும்பொழுது மட்டுமே, **ध्यानपूजादिकं**-தியானம் பூஜை முதலியவற்றை, **करोति**-செய்கிறானோ, **सः**-அவன், **दम्भाचारः**-டம்பாசாரி என்று, **उच्यते**-சொல்லப்படுகிறான். **तथा**-அப்படி, **अनाचरणं** - நடக்காமலிருப்பது, **पुंसः** - மனிதனுக்கு, **अदम्भित्वं**-டம்பமில்லாத்தன்மை (என்று), **बुधाः**-வித்வான்கள், **विदुः**-அறிகிறார்கள்.

*எவனொருவன் வேறு பார்க்கிறவரிருக்கும்போது மட்டுமே உலகத்தில் தியானம் பூஜை முதலானவைகளைச் செய்கிறவனாய், வாஸ்தவமாய் அதில் நோக்கமில்லாமலிருக்கிறானோ, அவன் டம்பமான ஆசரணையுள்ளவன் என்று சொல்லப்படுகிறான்.*

ஒரு புருஷன் அவ்விதமாக நடந்துகொள்ளாமலிருப்பதை "டம்ப மற்றிருத்தல்" என்று அறிவாளிகள் கருதுகிறார்கள். (117)

यत् स्वेन दृष्टं सम्यक् च श्रुतं तस्यैव भाषणं ।
सत्यं इत्युच्यते ब्रह्म सत्यमित्यपि भाषणम् ॥ ११८ ॥

யத் ஸ்வேந த்ருஷ்டம் ஸம்யக்ச ச்ருதம் தஸ்யைவ பாஷணம் ।
ஸத்யமித்யுச்யதே ப்ரஹ்ம ஸத்யமித்யபி பாஷணம் ॥

**स्वेन**-தன்னால், **यत्**-எது, **सम्यक्**-நன்றாக, **दृष्टं**-பார்க்கப்பட்டதோ **श्रुतं च**-கேட்கப்பட்டதோ, **तस्यैव**-அதையே, **भाषणं**-பேசுவது, **सत्यमिति**-ஸத்யமென்று, **उच्यते**-சொல்லப்படுகிறது. **ब्रह्म सत्यमिति**-ப்ரஹ்மம் ஸத்யம என்று, **भाषणमपि**-சொல்வதும் (ஸதயமாகும்).

பிராந்தியில்லாமல் நன்றாக தான் கேரில் பார்த்ததையும் நம்பிக்கையுள்ள, உண்மைபேசும் நண்பன் மூலமாக கேள்விப் பட்டதையும் அப்படியே சொல்வது ஸத்யமாகும் வாஸ்தவத்தில் ப்ரஹ்மம் ஒன்று தான் ஸத்யம் மற்றவை எல்லாம் பொய். (118)

देहादिषु स्वकीयत्वदृढबुद्धिविसर्जनम् ।
निर्ममत्वं स्मृतं येन कैवल्यं लभते बुधः ॥ ११९ ॥

தேஹாதிஷு ஸ்வகீயத்வ த்ருடபுத்தி விஸர்ஜனம் ।
நிர்மமத்வம் ஸ்ம்ருதம் யேந கைவல்யம் லபதே புத: ॥

**देहादिषु**-சரீரம் முதலியவற்றில், **स्वकीयत्व**-தன்னுடையது என்ற, **दृढ**-உறுதியாயுள்ள, **बुद्धिविसर्जनं**-எண்ணத்தை விட்டுவிடுவது, **निर्ममत्वं**-நிர்மமதவம் எனறு, **स्मृतं**-கருதப்பட்டுளளது, **येन**-எதனால் **बुधः**-வித்வான், **कैवल्यं**-மோக்ஷத்தை, **लभते**-அடைகிறானே.

தேகம் முதலியவைகளில் தன்னுடையது என்ற திடமான எண்ணத்தை நன்கு விட்டுவிடுவது மமதையின்மை என கருதப் படுகிறது. இதனால் அறிவாளி மோக்ஷத்தை அடைகிறான் (119)

गुरुवेदान्तवचनैः निश्चितार्थे दृढस्थितिः ।
तदेकवृत्त्या तत् स्थैर्यं नैश्चल्यं न तु वर्ष्मणः ॥ १२० ॥

குருவேதாந்தவசனை: நிச்சிதார்த்தே த்ருடஸ்திதி: ।
தத்தேகவ்ருத்த்யா தத் ஸ்தைர்யம் நைச்சல்யம் ந து
வர்ஷ்மண: ॥

**गुरुवेदान्तवचनैः**-ஆசார்யருடையவும் உபநிஷத்துக்களுடையவும் வாக்கியங்களால், **निश्चितार्थे**-தீர்மானமாகத் தெரிந்துகொள்ளப்பட்ட விஷயத்தில், **तदेकवृत्त्या**-அந்த ஒரே மனோவிருத்தியுடன், **दृढस्थितिः**-உறுதியாக நிலைத்திருப்பது (எதுவோ), **तत्**-அது, **स्थैर्यं**-ஸ்தைர்யமாம் **वर्ष्मणः**-சரீரத்தின், **नैश्चल्यं**-அசைவற்றிருக்கும் தன்மை, **न तु**-ஸ்தைர்யமாகாது.

*குருவினுடையவும் உபநிஷத்துக்களினுடையவும் வாக்கியங்களினால் நிச்சயம் செய்யப்பட்டிருக்கிற விஷயத்தில் அது ஒன்றிலேயே ஈடுபட்ட மனோவிருத்தியுடன் திடமாக நிலைத்திருப்பது ஸ்தைர்யம். சரீரம் அசைவற்றிருப்பது இங்கு ஸ்தைர்யமல்ல.* (120)

**विद्यैश्वर्यतपोरूपकुलवर्णाश्रमादिभिः ।**
**संजाताहंकृतित्यागस्त्वभिमानविसर्जनम् ॥ १२१ ॥**

வித்யைச்வர்ய தபோ ரூப குல வர்ணாச்ரமாதிபி: ।
ஸஞ்ஜாதாஹங்க்ருதி த்யாக ஸ்த்வபிமாந விஸர்ஜனம் ॥

**विद्यैश्वर्य**-கல்வி, செல்வம், **तपोरूप**-தவம், அழகு, **कुल**-வம்சம், **वर्णाश्रमादिभिः**-வர்ணம், ஆச்ரமம் முதலியவைகளால், **संजाताहंकृतित्यागः**-ஏற்பட்டுள்ள அஹங்காரத்தை விட்டுவிடுவது. **अभिमानविसर्जनम्**-அபிமான த்யாகமாகும்.

*வித்யையினாலும், செல்வத்தினாலும், தபஸினாலும், ரூபத்தினாலும், குலத்தினாலும், ஜாதியினாலும், ஆசிரமத்தினாலும், மற்றும் காரணங்களினால் ஏற்படும் நான் மேலானவன் என்கிற எண்ணத்தை விடுவதே அபிமானத்தை விடுவதாகும்.* (121)

**त्रिभिश्च करणैः सम्यक् हित्वा वैषयिकीं क्रियाम् ।**
**स्वात्मैकचिन्तनं यत्तत् ईश्वरध्यानमीरितम् ॥ १२२ ॥**

த்ரிபிச்ச கரணை: ஸம்யக் ஹித்வா வைஷயிகீம் க்ரியாம் ।
ஸ்வாத்மைக சிந்தனம் யத் தத் ஈச்வரத்யானமீரிதம் ॥

**त्रिभिः करणैश्च**—சரீரம், வாக்கு, மனம் என்ற மூன்று கரணங்களாலும், **वैषयिकीं क्रियां**-உலக விஷயங்களைப்பற்றிய காரியத்தை, **सम्यक्**-நன்றாக, **हित्वा**-விட்டுவிட்டு, **स्वात्मैकचिन्तनं**-தனது ஆத்ம வஸ்து ஒன்றையே மனதால் சிந்திப்பது, **यत्**-எதுவோ, **तत्**—அது, **ईश्वरध्यानं**—ஈசுவர த்யானமாக, **ईरितं**—சொல்லப்பட்டுள்ளது.

*மூன்று வித கரணங்களாலும் செய்யப்படும் எவ்வித விஷயமான கார்யத்தையும் நன்கு விட்டு விட்டு, தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஒன்றைப்பற்றியே சிந்திப்பது எதுவோ, அது ஈசுவர தியானம் என்று சொல்லப்படுகிறது.* (122)

छायेव सर्वदा वासो ब्रह्मविद्भिः सह स्थितिः ॥ १२३ ॥

*சாயேவ ஸர்வதா வாஸோ ப்ரஹ்மவித்பி: ஸஹ ஸ்திதி: ॥*

**छायेव**—நிழல்போல், **सर्वदा वासः**—எப்பொழுதும் கூடவஸிப்பது, **ब्रह्मविद्भिः सह स्थितिः**-ப்ரஹ்ம ஞானிகளுடன் கூட இருப்பதாகும்.

*நிழல் போலவே எப்பொழுதும் பிரஹ்ம ஞானிகளுடன் வஸித்து வருவது அவர்களுடன் கூடவிருத்தலாகும்.* (123)

यद्यदुक्तं ज्ञानशास्त्रे श्रवणादिकं एषु यः ।
निरतः कर्मधीहीनः ज्ञाननिष्ठः स एव हि ॥ १२४ ॥

*யத்யதுக்தம் ஞாநசாஸ்த்ரே ச்ரவணாதிகமேஷு ய: ।*
*நிரத: கர்மதீஹீந: ஞாநநிஷ்ட: ஸ ஏவ ஹி ॥*

**कर्मधीहीनः**—கர்மாவில் புத்தியை விட்டுவிட்டவனாய், **ज्ञानशास्त्रे**-வேதாந்த சாஸ்திரத்தில், **श्रवणादिकं**-சிரவணம் முதலான, **यत् यत्**-எது எது **उक्तं**—சொல்லப்பட்டுள்ளதோ, **एषु**—இவைகளில், **यः**—எவன், **निरतः**-ஈடுபட்டவனோ, **स एव हि**-அவன்தான், **ज्ञाननिष्ठः**-ஞாநநிஷ்டன்.

*ஞான சாஸ்திரத்தில் சிரவணம் முதலிய எது எதெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவைகளிலேயே ஈடுபட்டவனாக, கர்மாவிலுள்ள எண்ணத்தையே விட்டவனாக, எவன் இருக்கிறானோ, அவனே ஞானநிஷ்டனாவான்.* (124)

धनकान्ताज्वरादीनां प्राप्तकाले सुखादिभिः ।
विकारहीनतैव स्यात् सुखदुःखसमानता ॥ १२५ ॥

J-xxii-11

*தநகாந்தா ஜ்வராதீனும் ப்ராப்தகாலே ஸுகாதிபி: ।*
*விகாரஹீநதைவ ஸ்யாத் ஸுகதுக்க ஸமாநதா ॥*

**धनकान्ताज्वरादीनां**-பணம், பெண், ஜ்வரம் முதலியவை, **प्राप्त-काले**-வந்த சமயத்தில், **सुखादिभिः**-ஸுகம் முதலியவைகளால், **विकारहीनतैव**-(மனதில்) மாறுதல் ஏற்படாமல் இருக்கும் தன்மைதான் **सुखदुःखसमानता स्यात्**-ஸுகதுக்கங்களில் ஸமமாயிருக்கும் தன்மையாகும்.

*ஸுகத்திற்குக் காரணமான செல்வம், ஸ்திரீ, துக்கத்திற்குக் காரணமான ஜ்வரம் முதலியவை வந்த சமயத்திலும் அவைகளால் ஏற்படும் ஸுக துக்கங்களால் மனதில் எவ்வித மாறுபாடும் இல்லாமலிருப்பதுதான் ஸுக துக்கங்களில் ஸமானமாயிருக்கும் தன்மையாகும், (125)*

श्रेष्ठं पूज्यं विदित्वा मां मानयन्तु जना भुवि ।
इत्यासक्त्या विहीनत्वं मानानासक्तिरुच्यते ॥ १२६ ॥

*ச்ரேஷ்டம் பூஜ்யம் விதித்வா மாம் மாநயந்து ஜநா புவி ।*
*இத்யாஸக்த்யா விஹீநத்வம் மாநாநாஸக்திருச்யதே ॥*

**भुवि**-பூவுலகில், **मां**-என்னை, **श्रेष्ठं**-சிறந்தவனுகவும், **पूज्यं**-பூஜிக்கத்தக்கவனுகவும், **विदित्वा**-தெரிந்துகொண்டு, **जनाः**-ஜனங்கள், **मानयन्तु**-கௌரவிக்கட்டும், **इति**-என்ற, **आसक्त्या विहीनत्वं**-விருப்பமில்லாதிருப்பது, **मानानासक्तिः**-மாநாநாஸக்தி என்று, **उच्यते**-சொல்லப்படுகிறது.

*நான் பெரியவன், பூஜிக்கத்தகுந்தவன் என்பதைத் தெரிந்து கொண்டு உலகத்தில் ஜனங்கள் என்னை பகுமானிக்கவேண்டும் என்கிற எண்ணமில்லாமலிருப்பது பகுமானத்தில் பற்றின்மை எனப்படுகிறது. (126)*

सच्चिन्तनस्य संबाधो विघ्नोऽयं निर्जने ततः ।
स्थेयं इत्येक एवास्ति चेत् सैवैकान्तशीलता ॥ १२७ ॥

*ஸச்சிந்தனஸ்ய ஸம்பாதோ விக்னோऽயம் நிர்ஜநே தத: ।*
*ஸ்தேயமித்யேக ஏவாஸ்தி சேத் ஸைவைகாந்த ஶீலதா ॥*

**अयं**–இந்த, **संबाधः**–ஜனக்கூட்டம், **सच्चिन्तनस्य**–ஸத்ரூபமான ப்ரஹ்மத்தைப்பற்றி சிந்தனை செய்வதற்கு, **विघ्नः**-இடைஞ்சல், **ततः**–ஆகையால், **निर्जने**–ஜனங்களில்லாத இடத்தில், **स्थेयं इति**–இருக்க வேண்டுமென்று, **एक एव**–ஒருவனாகவே, **अस्ति चेत्**–இருப்பானேயாகில் **सैव**–அதுவே, **एकान्तशीलता**–தனிமையில் இருக்கும் ஸ்வபாவம்.

*நல்ல விஷயத்தை (ப்ரஹ்மத்தைப்பற்றி) சிந்தனை செய்வதற்கு இந்த ஜனக்கூட்டம் இடைஞ்சலாயிருக்கிறது, ஆகையால் ஜனங்களில்லாத இடத்தில் இருக்கவேண்டும், என்று ஒருவன் தனித்து இருப்பானேயானல் அதுவே ஏகாந்த சீலத்தன்மை.* (127)

**संसारबन्धनिर्मुक्तिः कदा झटिति मे भवेत् ।**
**इति या सुदृढा बुद्धिः ईरिता सा मुमुक्षुता ॥ १२८ ॥**

*ஸம்ஸாரபந்த நிர்முக்தி: கதா ஜடிதி மே பவேத் ।*
*இதி யா ஸுத்ருடா புத்தி: ஈரிதா ஸா முமுக்ஷுதா ॥*

**मे**–எனக்கு, **झटिति**–விரைவில், **संसारबन्धनिर्मुक्तिः**–ஸம்ஸாரமென்னும் கட்டிலிருந்து விடுதலை, **कदा**–எப்பொழுது, **भवेत्**–ஏற்படும், **इति**–என்ற, **सुदृढा**–மிகவும் உறுதியான, **बुद्धिः**–புத்தி, **या**–யாதொன்று உண்டோ, **सा**–அது, **मुमुक्षुता**–முமுக்ஷுத்வமாக, **ईरिता**–சொல்லப்பட்டிருக்கிறது.

*பிறவி மரண ரூபமான ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து விடுதலை எனக்கு சீக்கிரமாக எப்பொழுது ஏற்படும் என்ற மிக உறுதியான எண்ணம் மோக்ஷத்தில் இச்சை என்பது.* (128)

*(அ) இவ்விதமாக சித்தம் தெளிவடைய பதினெட்டு ஸாதனங்களைச் சொல்லிவிட்டு சமாதி ஷட்கத்தில் அடங்கிய இரண்டாவதான தமம் என்பதின் லக்ஷணத்தைக் கூறுகிறுர் :—*

**ब्रह्मचर्यादिभिः धर्मैः बुद्धेः दोषनिवृत्तये ।**
**दण्डनं दम इत्याहुः दमशब्दार्थकोविदाः ॥ १२९ ॥**

*ப்ரஹ்மசர்யாதிபிர் தர்மைர் புத்தேர் தோஷநிவ்ருத்தயே ।*
*தண்டனம் தம இத்யாஹுர் தமஶப்தார்த்த கோவிதா: ॥*

**बुद्धेः**-மனதின், **दोषनिवृत्तये**-தோஷங்கள் விலகுவதற்காக, **ब्रह्मचर्यादिभिः धर्मैः**-ப்ரஹ்மசர்யம் முதலான தர்மங்களால், **दण्डनं**-சிக்ஷிப்பது, **दम इति**-தமம் என்று, **दमशब्दार्थकोविदाः**-தமம் என்ற சொல்லின் பொருளை நன்கு அறிந்தவர்கள், **आहुः**-சொல்கிறார்கள்.

*109வது சுலோகம் முதல் 128வது சுலோகம் முடிய விளக்கிக் கூறப்பட்ட ப்ரஹ்மசர்யம் முதல் முமுக்ஷுத்வம் வரையுள்ள 18 ஸாதனங்களால் மனதை அதன் இஷ்டப்படி நடக்கவிடாமல் சிக்ஷிப்பது தமமாகும். இதனால் மனதிலுள்ள தோஷங்கள் விலகிவிடும்.* *(129)*

*(அ) தமத்தை மற்றொரு விதமாகக் கூறுகிறார் —*

**तत्तद्वृत्तिनिरोधेन बाह्येन्द्रियविनिग्रहः ।**
**योगिनो दम इत्याहुः मनसः शान्तिसाधनम् ॥ १३० ॥**

*தத்தத் வ்ருத்தி நிரோதேன பாஹ்யேந்த்ரிய விநிக்ரஹ: ।*
*யோகிநோ தம இத்யாஹு: மநஸ: ஶாந்தி ஸாதநம் ॥*

**तत्तद्वृत्तिनिरोधेन**-அதனதன் வியாபாரங்களைத் தடுப்பதனால், **बाह्येन्द्रियविनिग्रहः**-வெளி இந்திரியங்களையடக்குவது, **मनसः**-மனதின் **शान्तिसाधनं**-அடக்கத்திற்கு ஸாதனமான, **दमः**-தமம், **इति**-என்று, **योगिनः**-யோகிகள், **आहुः**-சொல்கிறார்கள்.

*கண், காது, மூக்கு, நாக்கு, த்வக்கு என்னும் ஐந்து வெளி இந்திரியங்களின் காரியங்களான பார்ப்பது, கேட்பது, முகர்வது, சுவைப்பது, தொடுவது என்னுமிவைகள் ஏற்படாமலிருக்கும்படி தடுப்பதன் மூலம் அந்த வெளி இந்திரியங்களை அடக்குவது தான் தமமாகும். வெளி இந்திரியங்களை யடக்குவது மனம் அடங்குவதற்கு உபாயமாகும் என்று யோகிகள் கூறுகின்றனர்.* *(130)*

*(அ) இந்திரியங்களை அடக்குவது மனஸின் சாந்திக்கு எப்படி உதவுகிறதென்பதை விளக்குகிறார்:—*

**इन्द्रियेष्विन्द्रियार्थेषु प्रवृत्तेषु यदृच्छया ।**
**अनुधावति तान्येव मनो वायुमिवानलः ॥ १३१ ॥**

*இந்த்ரியேஷ்விந்த்ரியார்த்தேஷு ப்ரவ்ருத்தேஷு யத்ருச்சயா ।*
*அநுதாவதி தாந்யேவ மநோ வாயுமிவாநல: ॥*

**इन्द्रियेषु**–இந்த்ரியங்கள், **इन्द्रियार्थेषु**–இந்திரிய விஷயங்களிடம், **यदृच्छया**–யதேச்சையாக, **प्रवृत्तेषु**–செல்லும்பொழுது, **वायुं**–காற்றை ஒட்டி, **अनल इव**–நெருப்புப்பரவுவதுபோல், **मनः**–மனம், **तान्येव अनुधावति**–அவைகளை அனுஸரித்தே செல்கிறது.

*காற்று எப்பக்கம் அடிக்கிறதோ அந்தப்பக்கம் தான் நெருப்பும் பரவும் அதுபோல் கண், காது, மூக்கு நாக்கு, த்வக்கு என்னும் வெளி இந்திரியங்கள் முறையே ரூபம், சப்தம், கந்தம், ரஸம், ஸ்பர்சம் என்னும் அத்தன் விஷயங்களை நோக்கிச் செல்லும் பொழுது அந்த இந்திரியங்களைப் பின்தொடர்ந்து மனமும் ஓடிச்செல்கிறது.* **(131)**

**इन्द्रियेषु निरुद्धेषु त्यक्त्वा वेगं मनः स्वयम् ।**
**सत्त्वभावमुपादत्ते प्रसादस्तेन जायते ।**
**प्रसन्ने सति चित्तेऽस्य मुक्तिः सिद्ध्यति नान्यथा ॥ १३२ ॥**

*இந்த்ரியேஷு நிருத்தேஷு த்யக்த்வா வேகம் மந: ஸ்வயம் ।*
*ஸத்வபாவமுபாதத்தே ப்ரஸாதஸ்தேந ஜாயதே ।*
*ப்ரஸந்நே ஸதி சித்தே஽ஸ்ய முக்தி: ஸித்யதி நாந்யதா ॥*

**इन्द्रियेषु**–இந்திரியங்கள், **निरुद्धेषु**–தடுக்கப்பட்டபொழுது, **मनः**–மனம், **स्वयं**–தானாகவே, **वेगं**–வேகத்தை, **त्यक्त्वा**–விட்டு, **सत्त्वभावं**–ஸத்வ குணஸ்வபாவத்தை, **उपादत्ते**–ஏற்றுக்கொள்கிறது, **तेन**–அதனால், **प्रसादः**–(மனதிற்கு) தெளிவு, **जायते**–உண்டாகிறது, **चित्ते**–மனம், **प्रसन्ने सति**–பிரஸன்னமாயிருக்கும்பொழுது, **अस्य**–இவனுக்கு, **मुक्तिः**–முக்தி, **सिध्यति**–ஏற்படுகிறது. **अन्यथा**–இல்லாவிடில், **न**–ஏற்படுவதில்லை.

*இந்திரியங்களின் வழியாகத்தான் மனம் வெளி விஷயங்களை நோக்கி வேகமாகச் செல்கிறது இந்திரியங்களை அதன் விஷயங்களை நோக்கிச் செல்வதைத் தடுத்து விட்டால் இந்திரியங்கள்*

வெளியே போகாதபோது மனமும் வெளியே போகமுடியாமல் தடைபட்டு வேகம் குறைந்து உள்ளேயே இருந்துவிடுகிறது. அப்பொழுது ஸத்வ குணம் மேலோங்கி மனம் ப்ரஸன்னமாகிறது. மனம் ப்ரஸன்னமாயிருப்பவருக்குத்தான் முக்தி கிடைக்கும். மனம் ப்ரஸன்னமாகாவிட்டால் முக்தி கிடைக்காது. (132)

मनःप्रसादस्य निदानमेव
निरोधनं यत् सकलेन्द्रियाणाम् ।
बाह्येन्द्रिये साधु निरुध्यमाने
बाह्यार्थभोगो मनसो वियुज्यते ॥ १३३ ॥

மந:ப்ரஸாதஸ்ய நிதாநமேவ
நிரோதனம் யத் ஸகலேந்த்ரியாணாம் ।
பாஹ்யேந்த்ரியே ஸாது நிருத்யமாநே
பாஹ்யார்த்தபோகோ மநஸோ வியுஜ்யதே ॥

सकलेन्द्रियाणां-எல்லா இந்திரியங்களையும், यत् निरोधनं-தடுப்பது என்பது யாதொன்று உண்டோ, (तत्) एव-அதுதான், मनःप्रसादस्य-சித்த பிரஸாதத்திற்கு, निदानं-மூலகாரணம், बाह्येन्द्रिये-வெளி இந்திரியம், साधु-நன்றாக, निरुध्यमाने-தடுக்கப்படும்பொழுது, मनसः-மனதிலிருந்து, बाह्यार्थभोगः-வெளிவிஷயங்களின் அனுபவம், वियुज्यते-பிரிந்து விலகிப்போய்விடுகிறது.

எல்லாவித இந்திரியங்களையும் அடக்குவது தான் மனத் தெளிவிற்கு மூல காரணமாகும். வெளி இந்திரியங்கள் நன்கு அடக்கப்பட்டு விட்டதேயானால், வெளியிலுள்ள பதார்த்தங்களை அனுபவிப்பது என்பதும் மனஸிற்கு இல்லாமல் போய்விடும்.

तेन स्वदौष्ट्यं परिमुच्य चित्तं
शनैः शनैः शान्तिमुपाददाति ।
चित्तस्य बाह्यार्थविमोक्षमेव
मोक्षं विदुर्मोक्षणलक्षणज्ञाः ॥ १३४ ॥

தேந ஸ்வதௌஷ்ட்யம் பரிமுச்ய சித்தம்
ஶனை; ஶனை; ஶாந்தி முபாததாதி ।

*சித்தஸ்ய பாஹ்யார்த்த விமோக்ஷமேவ*
*மோக்ஷம் விதுர் மோக்ஷணலக்ஷணக்ஞா: ll*

**तेन**–அதனுல், **चित्तं**-மனம், **स्वदौष्ट्यं**-தனது துஷ்டத்தனத்தை, **परिमुच्य**-விட்டுவிட்டு, **शनैः शनैः**-மெள்ள மெள்ள, **शान्ति**-சாந்தியை, **उपाददाति**-பெறுகிறது, **चित्तस्य**-மனதிற்கு, **बाह्यार्थविमोक्षमेव**-வெளி விஷயங்களிலிருந்து விடுதலை ஏற்படுவதையே, **मोक्षं**-மோக்ஷமாக, **मोक्षणलक्षणज्ञाः**-மோக்ஷத்தின் லக்ஷணமறிந்தவர்கள், **विदुः**-அறிகிருர்கள்.

*அதனுல் (வெளிப்பதார்த்த போகத்திலிருந்து விலகுவதினுல்) மனஸானது தன்னுடைய துஷ்டத்தனத்தை (தன் இஷ்டப்படி எங்கும் செல்வதை) விட்டு விட்டு, மெள்ள மெள்ள சாந்தியை அடையும். மனஸிற்கு வெளிப்பதார்த்தங்களிலிருந்து ஏற்படும் விடுதலேயே மோக்ஷம் என்று மோக்ஷத்தின் லக்ஷணத்தை அறிந்தவர்கள் எண்ணுகிருர்கள். வெளிவிஷயங்களின் அனுபவம் மனதிற்கு இல்லாதபடி செய்துவிட்டால் ஆத்மானுபவமாகிற மோக்ஷம் ஸுலபமாகக் கிடைத்து விடுமென்று கருத்து.* **(134)**

**दमं विना साधु मनःप्रसाद-**
**हेतुं न विद्मः सुकरं मुमुक्षोः ।**
**दमेन चित्तं निजदोषजातं**
**विसृज्य शान्ति समुपैति शीघ्रम् ॥ १३५ ॥**

*தமம் விநா ஸாது மந:ப்ரஸாத-*
*ஹேதும் ந வித்ம: ஸுகரம் முமுக்ஷோ: l*
*தமேந சித்தம் நிஜதோஷஜாதம்*
*விஸ்ருஜ்ய சாந்திம் ஸமுபைதி சீக்ரம் ll*

**मुमुक्षोः**–மோக்ஷமடைவதில் தீவ்ர விருப்பமுள்ளவனுக்கு, **दमं विना**-தமத்தைத்தவிற (வேறு), **साधु**-நல்ல, **सुकरं**-ஸுலபமாக அனுஷ்டிக்கக்கூடிய, **मनःप्रसादहेतुं**-சித்த ப்ரஸாதத்திற்கு உபாயத்தை **न विद्मः**-அறியவில்லை, **चित्तं**-மனம், **दमेन**-தமத்தால், **निजदोषजातं**-தன்னிடமுள்ள எல்லா தோஷங்களையும், **विसृज्य**-விட்டுவிட்டு, **शीघ्रं**-விரைவில், **शान्ति**-சாந்தியை, **समुपैति**-அடைகிறது,

மோக்ஷத்தில் தீவ்ர இச்சையுள்ளவருக்கு மனத்தெளிவுக்கு ஸாதனமாக தமத்தைத்தவிர நல்லதாயும் ஸுலபமாக அனுஷ்டிக்கக் கூடியதுமாயுள்ள வேறு ஸாதனம் இருப்பதாகத் தெரியவில்லை வெளி இந்திரியங்களை அடக்குவதால் மனதிலுள்ள தோஷங்களெல்லாம் அடியோடு நீங்கிவிடுகிறது. அதனால் சீக்கிரமாக மனம் சாந்தியை அடைகிறது. (135)

प्राणायामाद्भवति मनसो निश्चलत्वं प्रसादो
यस्याप्यस्य प्रतिनियतदिग्देशकालाद्यवेक्ष्य ।
सम्यग्दृष्ट्या क्वचिदपि तथा नो दमो हन्यते तत्
कुर्याद्धीमान् दमं अनलसः चित्तशान्त्यै प्रयत्नात् ॥

ப்ராணாயாமாத் பவதி மநஸோ நிச்சலத்வம் ப்ரஸாதோ
யஸ்யாப்யஸ்ய ப்ரதிநியததிக்தேசகாலாத்யவேக்ஷ்ய 1
ஸம்யக்த்ருஷ்ட்யா க்வசிதபி ததா நோ தமோ
ஹந்யதே தத்
குர்யாத் தீமான் தமமநலஸ: சித்தசாந்த்யை ப்ரயத்நாத்॥

**यस्यापि**-எவனுக்காவது, **प्राणायामात्**-பிராணாயாமத்தால் (பிராணனின் கார்யததை அடக்குவதால்), **मनसः**-மனதிற்கு, **निश्चलत्वं**-அசைவற்றதன்மையும், **प्रसादः** - தெளிவும், **प्रतिनियत-दिग्देशकालादि अपेक्ष्य**-குறிப்பிட்ட திசை, தேசம், காலம் முதலியவற்றை எதிர்பார்த்து, **भवति**-ஏற்படுகிறது. **क्वचित्**-ஒரு சமயம், **अस्य**-இவனுக்கு, **सम्यग्दृष्ट्या**-விவேகஞானததால் (ஏற்படுகிறது), **तथापि**-அப்படியிருந்தபோதிலும், **दमः**-தமம், **नो हन्यते**-அடிபடாது, **तत्**-ஆகையால், **धीमान्**-புத்திசாலி, **अनलसः**-சோம்பல் இல்லாதவனாய், **चित्तशान्त्यै**-மனதில் சாந்தி ஏற்படுவதற்காக, **प्रयत्नात्**-முயற்சியுடன், **दमं**-இந்திரிய நிக்ரஹத்தை, **कुर्यात्**-செய்யவேண்டும்.

உலகில் யாராவது ஒருவருக்கு பிராணாயாமத்தால் மனதின் சாஞ்சல்யம் நீங்கி தெளிவு ஏற்படலாம் ஆனால் தேசம், காலம் முதலியவை அனுகூலமாயிருந்தால் தான் பிராணாயாமம் செய்வது பலனைத்தரும் உலக வஸ்துக்களைப்பற்றிய விவேகத்தால் சாந்தி உண்டாகலாம் இதுவும் சிரமஸாத்யம் தான். இவைகளால்

தமத்தின் உபயோகத்தை குறைத்துக் கூறமுடியாது. அவற்றை விட தமம் தான் ஸுலபமான உபாயம் ஆதலால் சித்த சாந்தியை விரும்பினால் புத்திமானயிருப்பவன் சோம்பலை விட்டு விசேஷ முயற்சி எடுத்துக்கொண்டு தமத்தையே (வெளி இந்திரியங்களை அடக்குவதையே) அப்யாஸம் செய்யவேண்டும்.

[அச்சுப் புஸ்தகங்களில் 2வது பாதத்தில் यद्यप्यस्य என்று தான் காணப்படுகிறது. 'यद्यप्यस्य' என்று சுத்த பாடம் இருக்கலாமோ என்று தோன்றுகிறது] (136)

सर्वेन्द्रियाणां गतिनिग्रहेण
भोग्येषु दोषाद्यवमर्शनेन ।
ईशप्रसादाच्च गुरोः प्रसादात्
शान्तिं समायात्यचिरेण चित्तम् ॥ १३७ ॥

ஸர்வேந்த்ரியாணும் கதிநிக்ரஹேண
போக்யேஷு தோஷாத்யவமர்ஶநேந ।
ஈஶப்ரஸாதாச்ச குரோ: ப்ரஸாதாத்
ஶாந்திம் ஸமாயாத்யசிரேண சித்தம் ॥

सर्वेन्द्रियाणां-எல்லா இந்திரியங்களுடையவும், गतिनिग्रहेण-போக்கைத் தடுப்பதாலும், भोग्येषु-அனுபவிக்கும் விஷயங்களில், दोषाद्यवमर्शनेन-தோஷம் முதலியவற்றை சிந்திப்பதாலும், ईशप्रसादाच्च-ஈசுவரானுக்ரஹத்தாலும், गुरोः प्रसादात् -குருவின் அருளாலும், चित्तं-மனது, अचिरेण-விரைவில, शान्तिं-சாந்தியை, समायाति-அடைகிறது.

எல்லா இந்திரியங்களுடைய வியாபாரங்களை நிக்கிரஹம் செய்வதினாலும், போக்யமான விஷயங்களிலுள்ள தோஷம் முதலானதுகளை அலசிப்பார்ப்பதினாலும், ஈசுவரனுடைய பிரஸாதத்தினாலும், குருவினுடைய பிரஸாதத்தினாலும், மனஸ் தாமதமன்னியில், சாந்தியை நன்கு அடையும்.

தமத்தினால் மனசாந்தியேற்படுமென்று சொன்னதினால் முன் சொன்ன பதார்த்த சோதனமோ, ஈசுவரன் குரு இவர்களின் அனுக்ரஹமோ தேவையில்லை யென்று நினைத்துவிடக் கூடாதென்று ஞாபகப்படுத்துகிறார். (137)

(அ) சமாதி ஷட்கத்தில் சேர்ந்த மூன்ருவது அம்சமான திதிக்ஷை என்பதைப்பற்றி 14 சுலோகங்களில் எடுத்துச் சொல்கிருர். வழக்கம்போல் முதலில் அதன் லக்ஷணம், பிறகு ஸாதனம், அதன் பிறகு அதன் பிரயோஜனம், அவசியத்தன்மை இவை காட்டப்படுகின்றன :—

आध्यात्मिकादि यद्दुःखं प्राप्तं प्रारब्धवेगतः ।
अचिन्तया तत्सहनं तितिक्षेति निगद्यते ॥ १३८ ॥

ஆத்யாத்மிகாதி யத் துக்கம் ப்ராப்தம் ப்ராரப்தவேகத: ।
அசிந்தயா தத்ஸஹநம் திதிக்ஷேதி நிகத்யதே ॥

**आध्यात्मिकादि**–ஆத்யாத்மிகம் முதலான, **यत् दुःखं**–எந்த துக்கம், **प्रारब्धवेगतः**-பிராரப்தகர்மாவின் வேகத்தால், **प्राप्तं**-வருகிறதோ, **अचिन्तया**–கவலையில்லாமல், **तत्सहनं**–அதைப்பொறுத்துக்கொள்வது, **तितिक्षा इति**–திதிக்ஷை என்று, **निगद्यते**-சொலலப்படுகிறது.

முற்பிறவிகளில் நாம் செய்த பாபகர்ம பலனுக ஆத்யாத்மிகம் முதலான எந்த துக்கம் வந்தாலும் அதைப்பற்றிச் சிறிதும் கவலையன்னியில் ஸஹித்துக்கொள்வது திதிக்ஷை என்று சொல்லப் படுகிறது.

சரீரத்திலேயே ஜரை, வியாதி முதலிய காரணங்களால் ஏற்படும் துக்கம் ஆத்யாத்மிகம் எனப்படும், மற்ற மனிதர் பசு கொசு முதலான பிராணிகளால் ஏற்படும் துக்கம் ஆதிபௌதிகம் எனப்படும். மழை வெய்யில் முதலான தைவிகமான காரணங்களால் ஏற்படும் துக்கம் ஆதிதைவிகம் எனப்படும். இவையெல்லாம், நாம் முன் செய்த பாபங்களின் பலனுகவே யேற்படுவதால் இப்பொழுது அவைகளைத் தடுப்பது வீண் பிரயத்தினம். அவை ஏற்பட்டு விட்டனவே யென்றும், அவைகளை எப்படிப் போக்கடிப்பது என்றும், மற்றும் விதமாயும் கவலைக்கு இடம் கொடுக்காமல் பொறுமையுடன் ஸஹித்துக்கொள்வதே திதிக்ஷையாகும். (138)

रक्षा तितिक्षासदृशी मुमुक्षोः
न विद्यतेऽसौ पविना न भिद्यते ।
यामेव धृत्वा कवचीव विद्वान्
सर्वान् तृणीकृत्य जयन्ति मायाम् ॥ १३९ ॥

ரக்ஷா திதிக்ஷாஸத்ருஶீ முமுக்ஷோ:
ந வித்யதேऽஸௌ பவினா ந பித்யதே।
யாமேவ த்ருத்வா கவசீவ விக்னான்
ஸர்வான் த்ருணீக்ருத்ய ஜயந்தி மாயாம்॥

**मुमुक्षोः**-மோக்ஷமடைவதில் விருப்பமுள்ளவனுக்கு, **तितिक्षा-सदृशी**-பொறுமையைப் போன்றதான, **रक्षा**-ரக்ஷை. **न विद्यते**-இல்லை **असौ**-இது, **पविना**-வஜ்ரத்தினுல், **न भिद्यते**-பிளக்கப்படாது **यामेव**-எந்த பொறுமையையே, **धृत्वा** - கைக்கொண்டு, **कवचीव** - கவசமுள்ளவன் போல, **सर्वान् विघ्नान्**-எல்லா இடைஞ்சல்களையும், **तृणी-कृत्य**-அலக்ஷ்யம் செய்து, **मायां**-மாயையை, **जयन्ति**-வெல்கிருர்களோ.

மோக்ஷத்தில் இச்சையுள்ளவருக்கு திதிக்ஷைக்கு ஸமானமான காப்புக்கிடையாது, வஜ்ராயுதத்திலுைம் (இடியினலும்) இது பிளவுபடாது. கவசம்போல் இதையே தரித்துக்கொண்டுதான் ஸகலவித இடையூறுகளையும் திருணமாக மதித்து மாயையை ஜயிக்கிருர்கள். பொறுமையைக்கைக்கொண்டவர்கள் எது வந்தாலும் மனம் கலங்காமல் தைர்யமாக இருப்பார்கள். (139)

(அ) இந்தப் பொறுமை என்பது மோக்ஷத்தில் இச்சை உள்ளவர்களுக்கு மாத்திரம் தான் தேவையென்பதில்லை. உலக வாழ்க்கையில் ஈடுபட்டவர்களுக்கும் ஏதாவது பிரயோஜனத்தை உத்தேசித்து, எந்த பிரவிருத்தி செய்தாலும் அதிலும் பொறுமை அவசியம் வேண்டும் என்பதை எடுத்துக்காட்டுகிருர் :—

क्षमावतामेव हि योगसिद्धिः
स्वाराज्यलक्ष्मीसुखभोगसिद्धिः ।
क्षमाविहीना निपतन्ति विघ्नैः
वातैर्हताः पर्णचया इव द्रुमात् ॥ १४० ॥

க்ஷமாவதாமேவ ஹி யோகஸித்தி:
ஸ்வாராஜ்யலக்ஷ்மீ ஸுகபோகஸித்தி:।
க்ஷமாவிஹீனா நிபதந்தி விக்னை:
வாதைர் ஹதா: பர்ணசயா இவ த்ருமாத்॥

**क्षमावतामेव** – பொறுமையுள்ளவர்களுக்குத்தான், **योगसिद्धिः**– யோகம் ஸித்திக்கும். **स्वाराज्यलक्ष्मी**-ஸ்வாராஜ்யலக்ஷ்மியின், **सुखभोगसिद्धिः**–ஸுகானுபவம் கிடைக்கும், **वातैः**–காற்றுக்களால், **हताः**–அடிபட்டு, **द्रुमात्** – மரத்திலிருந்து, **पर्णचयाः इव** – இலைக்கூட்டங்கள் (விழுவது) போல், **क्षमाविहीनाः**–பொறுமையில்லாதவர்கள், **विघ्नैः**–இடையூறுகளால், **निपतन्ति**–கீழேவிழுந்து விடுகின்றனர்.

*பொறுமையுள்ளவர்களுக்குத்தான் யோகம் (அஷ்டாங்க யோகம்) ஸித்திக்கும் அவர்கள் தான் ஸ்வாராஜ்யலக்ஷ்மி (தனக்குத்தானே அரசனாயிருக்கும் தன்மையான ஸம்பத்து)யின் ஆனந்தத்தை அனுபவிக்க முடியும் பொறுமையில்லாதவர்கள் இடையூறுகளால் தடுக்கப்பட்டு காற்றுக்களால் அடிபட்டு மரத்திலிருந்து இலைக்குவியல் விழுவது போல, கீழே விழுந்து விடுகிறார்கள். சிரேயஸ்ஸையடைவதில்லை.* **(140)**

**तितिक्षया तपो दानं यज्ञः तीर्थं व्रतं श्रुतम् ।**
**भूतिः स्वर्गोऽपवर्गश्च प्राप्यते तत्तदर्थिभिः ॥ १४१ ॥**

*திதிக்ஷயா தபோ தானம் யஜ்ஞஸ் தீர்த்தம் வ்ரதம் ச்ருதம்।*
*பூதி: ஸ்வர்கோऽபவர்கச்ச ப்ராப்யதே தத்ததர்த்திபி: ॥*

**तितिक्षया**–பொறுமையால், **तपः**–தவம், **दानं**–தானம், **यज्ञः**–யாகம், **तीर्थं**–தீர்த்தம், **व्रतं**-வ்ரதம், **श्रुतं**-கல்வி, **भूतिः**–ஐசுவர்யம், **स्वर्गः**–ஸ்வர்க்கம், **अपवर्गश्च**–மோக்ஷம் (இவற்றில்), **तत्तदर्थिभिः**–அததை விரும்புபவர்களால் (அதது), **प्राप्यते**–அடையப்படுகிறது.

*தபஸ்ஸோ, தானமோ, யக்ஞயாகாதிகளோ, தீர்த்தாடனமோ, விரதானுஷ்டானமோ, வித்யாப்பியாஸமோ, செல்வமோ, ஸ்வர்க்கமோ, மோக்ஷமோ, இவற்றில் யார் யாருக்கு எது எது தேவையோ, அது அது கிடைப்பதற்கு பொறுமை கட்டாயம் வேண்டும் பொறுமை இல்லாவிடில் இவற்றில் ஒன்றும் கிடைக்காது.* **(141)**

**ब्रह्मचर्यं अहिंसा च साधूनां अप्यगर्हणम् ।**
**पराक्षेपादिसहनं तितिक्षोरेव सिध्यति ॥ १४२ ॥**

*ப்ரஹ்மசர்யம் அஹிம்ஸா ச ஸாதூநாமப்யகர்ஹணம் ।*
*பராக்ஷேபாதிஸஹனம் திதிக்ஷோரேவ ஸித்யதி ॥*

**ब्रह्मचर्य**-ப்ராஹ்மசர்யம், **अहिंसा च**-பிறரை ஹிம்ஸியாமலிருத்தல் **साधूनामगर्हणमपि**-ஸாதுக்களை நிந்தியாதிருத்தல், **पराक्षेपादिसहन**-பிறரின் நிந்தனை முதலியவற்றைத் தாங்கிக்கொள்வது (இவையெல்லாம்) **तितिक्षोरेव**-பொறுமையுள்ளவனுக்குத்தான், **सिध्यति**-ஸித்திக்கும்.

*பிரஹ்மசர்ய அனுஷ்டானம், அஹிம்ஸை, ஸாதுக்களை தூஷிக்காமலிருப்பது, பிறரால் ஏற்படும் தூஷணைகளை ஸஹிப்பது, இவையெல்லால் திதிக்ஷையுள்ளவனுக்குத்தான் ஸித்திக்கும்.* **(142)**

**साधनेष्वपि सर्वेषु तितिक्षोत्तमसाधनम् ।**
**यत्र विघ्नाः पलायन्ते दैविका अपि भौतिकाः ॥ १४३ ॥**

*ஸாதநேஷ்வபி ஸர்வேஷு திதிக்ஷாத்தம ஸாதநம் ।*
*யத்ர விக்நா: பலாயந்தே தைவிகா அபி பௌதிகா: ॥*

**सर्वेष्वपि साधनेषु**-எல்லா ஸாதனங்களுக்குள்ளும், **तितिक्षा**-பொறுமை, **उत्तमसाधनं**-மிகவும் சிறந்த ஸாதனம், **यत्र**-எந்தப் பொறுமை இருந்தால், **दैविकाः**-ஆதிதைவிகமாயும், **भौतिकाः**-ஆதி பௌதிகமாயும் உள்ள, **विघ्ना अपि**-விக்னங்கள் கூட, **पलायन्ते**-ஓடி விடுகின்றன.

*எல்லா ஸாதனங்களிலும் கூட திதிக்ஷையே மேலான ஸாதனம். ஏனென்றால் அது இருந்தால், தைவிகமோ பௌதிகமோ எல்லா விக்னங்களும் கூட நீங்கி விடுகின்றன.*

**तितिक्षोरेव विघ्नेभ्यस्त्वनिवर्तितचेतसः ।**
**सिध्यन्ति सिद्धयः सर्वा अणिमाद्याः समृद्धयः ॥ १४४ ॥**

*திதிக்ஷோரேவ விக்நேப்யஸ்த்வநிவர்த்திதசேதஸ: ।*
*ஸித்யந்தி ஸித்தய: ஸர்வா அணிமாத்யா: ஸம்ருத்தய: ॥*

**विघ्नेभ्यः**-இடையூறுகளால், **अनिवर्तितचेतसः**-திருப்பப்படாத மனமுள்ள, **तितिक्षोरेव**-பொறுமைசாலிக்குத்தான், **अणिमाद्यः**-அணிமா

முதலான, **सर्वाः सिद्धयः**-எல்லா ஸித்திகளாகிற, **समृद्धयः**-ஐசுவர்யங்கள், **सिद्ध्यन्ति**-கிடைக்கின்றன.

*பொறுமையுள்ளவன் எவ்வளவு இடையூறு வந்தபோதிலும் சிறிதும் கலங்காமல் தான் ஆரம்பித்த காரியத்திலிருந்து மனதைத் திருப்பமாட்டான். ஆனதால் நன்கு அப்யாஸம் செய்வதன் மூலம் அணிமா ஸித்தி முதலான அஷ்டைசுவர்யங்களும் அவனுக்குக்கிடைத்துவிடும்.* *(144)*

**तस्मान्मुमुक्षोरधिका तितिक्षा**
**संपादनीयेप्सितकार्यसिद्ध्यै ।**
**तीव्रा मुमुक्षा च महत्युपेक्षा**
**चोभे तितिक्षासहकारिकारणम् ॥ १४५ ॥**

*தஸ்மான் முமுக்ஷோரதிகா திதிக்ஷா*
*ஸம்பாதநீயேப்ஸிதகார்யஸித்த்யை ।*
*தீவ்ரா முமுக்ஷா ச மஹத்யுபேக்ஷா*
*சோபே திதிக்ஷாஸஹகாரிகாரணம் ॥*

**तस्मात्**-ஆகையால், **मुमुक्षोः**-மோக்ஷமடைய விருப்பமுள்ளவனுக்கு, **ईप्सितकार्यसिद्ध्यै**-தன்னால் விரும்பப்பட்ட காரியம் கைகூடுவதற்கு, **अधिका तितिक्षा**-அதிகமான பொறுமை, **संपादनीया**-ஸம்பாதிக்கத்தக்கது, **तीव्रा**-தீவ்ரமான, **मुमुक्षा च**-மோக்ஷமடைவதில் விருப்பமும், **महती उपेक्षा च**-பலமான உபேக்ஷையும், **उभे**-இரண்டும், **तितिक्षासहकारिकारणं** - பொறுமைக்குக் கூட இருந்து உதவும் காரணமாகும்,

*ஆகவே உலக விஷயங்களில் எல்லாக்காரியங்களும் நிறைவேறுவதற்கே பொறுமை அவச்யமாக இருக்குமானால் மஹாபலமான மோக்ஷம் கிடைப்பதற்குப் பொறுமை வேண்டுமென்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ! மோக்ஷத்தில் விருப்பம் கொண்டவனுக்குத் தான் கோரியது நிறைவேற வேண்டுமானால் பொறுமை அதிகமாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் இடையூறுகளை விலக்கமுடியும் முக்தியடைவதில் தீவ்ரமான விருப்பமும், உலகவிஷயங்களில் அதிகமான*

உபேக்ஷயும் (வைராக்யமும்) இருந்தால்தான் பொறுமை பலனைத் தரும். ஆகையால் இவ்விரண்டும் பொறுமைக்கு ஸஹகாரி காரணங்கள் (கூட இருந்து உதவும் காரணங்கள்) ஆகும். (145)

तत्तत्कालसमागतामयततेः शान्त्यै प्रवृत्तो यदि
स्यात् तत्तत्परिहारकौषधरतः तच्चिन्तने तत्परः ।
तद्भिक्षुः श्रवणादिधर्मरहितो भूत्वा मृतश्चेत् तदा
किं सिद्धं फलं आप्नुयादुभयथा भ्रष्टो भवेत् स्वार्थतः ॥

தத்தத்காலஸமாகதாமயததே: ஶாந்த்யை
ப்ரவ்ருத்தோ யதி
ஸ்யாத் தத்தத்பரிஹாரகௌஷதரத: தச்சிந்தநே தத்பர: ।
தத்பிக்ஷு: ச்ரவணாதிதர்மரஹிதோ பூத்வா ம்ருதச்சேத்
ததா
கிம் ஸித்தம் பலமாப்னுயாதுபயதா ப்ரஷ்டோ பவேத்
ஸ்வார்த்தத: ॥

**तत्तत्काल**–அந்தந்தக்காலத்தில், **समागतामयततेः**–வந்த வியாதிகளின் வரிசை, **शान्त्यै**–நீங்குவதற்கு, **प्रवृत्तः**–முனைந்தவனாக, **तत्तत्परिहारकौषधरतः**–அந்தந்த வியாதியைப்போக்குகின்ற மருந்துகளில் கவனம் கொண்டு, **तच्चिन्तने**–அந்தவியாதிகளையும் மருந்துகளையும் ஆலோசிப்பதில். **तत्परः**–ஈடுபட்டவனாக, **यदि स्यात्**–இருப்பானேயாகில், **तद्भिक्षुः**–அந்த ஸந்யாஸி, **श्रवणादि धर्मरहितः**–ச்ரவணம் முதலான தர்மங்கள் இல்லாதவனாக, **भूत्वा**–ஆகி, **मृतश्चेत्**–இறந்து போவானேயாகில், **तदा**–அப்பொழுது, **सिद्धं**–ஸித்தமாக, **किं फलं**–என்ன பலனை, **आप्नुयात्**–அடைவான் ? **उभयथा**–இரண்டு விதத்திலும் **स्वार्थतः**–தனது பிரயோஜனத்திலிருந்து, **भ्रष्टो भवेत्**–நழுவிவிடுவான்.

மோக்ஷத்தை அடையவேணுமென்ற நோக்கத்துடன் ஸந்யாஸாச்ரமத்தை ஸ்வீகரித்துக்கொண்டவன் பொறுமையைக் கைக்கொள்ளாவிடில் மோக்ஷத்தையடையாததோடு கீழ் நிலையையும் அடைந்துவிடுவான் என்பதை விளக்கிக் காட்டுகிறார். அந்தந்தக் காலதர்மத்தையொட்டி சரீரத்தில் பற்பல வியாதிகள் யாருக்கும் வரக்கூடும். ஸந்யாஸியாயிருப்பவன் அதை கொஞ்சமேனும் லக்ஷ்யம் செய்யாமல் தைர்யத்துடன் ஸஹித்துக்கொண்டு

ச்ரவணாதி ஸாதனங்களைக் குறைவில்லாமல் செய்து வந்தால்தான் முக்தி வழி செல்லமுடியும். இப்படியில்லாமல் வியாதி வந்த வுடனே அதைப்போக்க விரும்பி அந்தந்த வியாதிக்குத்தக்க மருந்தைத் தேடிக்கொண்டு சிரவணாதிகளை விட்டுவிட்டு எப்பொழுதும் வியாதியைப்பற்றியும் அதைப்போக்கும் மருந்தைப் பற்றியும் சிந்தித்துக்கொண்டே இருப்பானாகில் இப்படியே ஆயுள் முழுவதும் கழிந்து இறப்பானேயாகில் இவன் என்ன பலனை அடைய முடியும். எல்லாவற்றையும் துறந்து ஸன்யாஸியாகி விட்டபடியால் இம்மையிலும் ஸுகமில்லை. சிரவணாதிகளை யனுஷ்டிக்காததால் முக்தியுமில்லை. உபயப்ரஷ்டனான இவனது ஜன்மா வீணாகிவிடுகிறது. "துக்கத்தைப்போக்கும் உபாயத்தைக் கைக்கொள்ளாமலும் கவலைப்படாமலும் புலம்பாமலும் ஸஹித்துக் கொள்வது திதிக்ஷை" என்று விவேகசூடாமணியில் (ச. 25) கூறியுள்ளார். (146)

योगमभ्यस्यतो भिक्षोः योगात् चलितचेतसः ।
प्राप्य पुण्यकृतां लोकान् इत्यादि प्राह केशवः ॥ १४७ ॥

नतु कृत्वैव संन्यासं तूष्णीमेव मृतस्य हि ।
पुण्यलोकगतिं ब्रूते भगवान् न्यासमात्रतः ॥ १४८ ॥

नच संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ।
इत्यनुष्ठेयसंत्यागात् सिद्ध्यभावमुवाच च ॥ १४९ ॥

யோகமப்யஸ்யதோ பிக்ஷோ: யோகாத் சலிதசேதஸ: I
ப்ராப்ய புண்யக்ருதாம் லோகான் இத்யாதி ப்ராஹ
கேஶவ: ॥

நது க்ருத்வைவ ஸந்யாஸம் தூஷ்ணீமேவ ம்ருதஸ்ய ஹி I
புண்யலோககதிம் ப்ரூதே பகவான் ந்யாஸ மாத்ரத: ॥

ந ச ஸந்யஸனாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி I
இத்யனுஷ்டேயஸந்த்யாகாத் ஸித்த்யபாவமுவாச ஹ ॥

**योगं**-ஞானயோகத்தை, **अभ्यस्यतः**-அப்யஸிக்கிறவனும், **योगात्**-யோகத்திலிருந்து, **चलितचेतसः**-நழுவிய மனமுள்ளவனுமான, **भिक्षोः**-யதிக்கு, '**पुण्यकृतां**-புண்யம் செய்தவர்களின், **लोकान्**-உலகங்களை,

**प्राप्य**–அடைந்து' **इत्यादि**–என்பது முதலாக **केशवः**-கிருஷ்ணன், **प्राह**-சொன்னார்.

**संन्यासं कृत्वैव**–ஸன்யாஸத்தை மட்டும் செய்துகொண்டு, **तूष्णीमेव**–பேசாமலேயே (அப்யாஸம் செய்யாமலேயே), **मृतस्य**–இறந்தவனுக்கு, **न्यासमात्रतः**-ஸந்யாஸத்தினால் மட்டும், **पुण्यलोकगतिं**-புண்யலோகம் அடைவதை, **भगवान्** – கிருஷ்ணன், **न तु ब्रूते**–சொல்லவேயில்லை.

**संन्यसनादेव**–ஸந்யாஸத்தினால் மட்டும், **सिद्धिं** – ஸித்தியை, **न च समधिगच्छति**-அடையமாட்டான், **इति**-என்று, **अनुष्ठेयसंत्यागात्**-செய்யவேண்டிய கடமையை விட்டுவிடுவதால், **सिद्ध्यभावं च**–ஸித்தி ஏற்படாததையும், **उवाच**-சொன்னார்.

*கீதை 6வது அத்யாயத்தில் யோகப்ரஷ்டனுக்கு என்ன கதி என்று அர்ஜுனன் கேட்கிறான். இதற்கு பகவான் "நல்லகாரியம் செய்பவர்கள் ஒருக்காலும் கீழ் நிலையை அடையமாட்டார்கள். யோகப்ரஷ்டனும் புண்யம் செய்தவர்களின் லோகங்களையடைந்து அங்கு ஸுகத்தை அனுபவித்துவிட்டு தார்மிகர்களான ஸ்ரீமான்களின் வம்சத்திலோ, தரித்திரர்களான யோகிகளின் வம்சத்திலோ பிறந்து மேலும் பிரயத்னம் செய்து ஞானமடைகின்றான்" என்று பதில் கூறுகிறார். இங்கு யோகப்ரஷ்டன் என்பது ஸந்யாஸம்பெற்று ஞானஸாதனங்களையனுஷ்டித்துவரும்பொழுது கர்மவசமாக அந்த்யகாலம் ஸமீபிக்கவே ஞானயோகத்தில் மனதைச் செலுத்தமுடியாமல் இறந்தவனைத்தான் குறிக்கும். ஆகவே பொறுமையுடன் துக்கங்களை ஸஹித்துக்கொண்டு ஸாதனங்களை அனுஷ்டித்துவருகையில் இறந்துபோன யோகப்ரஷ்டனுக்குத்தான் புண்யலோககதியைச் சொன்னாரே தவிர ஸந்யாஸம்பெற்று ஞானயோகத்தையனுஷ்டிக்காமல் துக்கங்களால் மனம் தாக்கப்பட்டு இறக்கின்றவனுக்கு ஸந்யாஸத்தால் மட்டும் புண்யலோகம் கிடைக்குமென்று பகவான் சொல்லவேயில்லை. மேலும் 3வது அத்யாயத்தில் ஸந்யாஸத்தினால் மட்டும் அதாவது கர்மாக்களை விடுவதால் மட்டும் ஸித்தியையடையமாட்டான் என்று கூறுவதன்மூலம் செய்யவேண்டிய காரியங்களை விட்டுவிடுவதால் ஸித்திபெறமாட்டான் என்பதையும் ஸ்பஷ்டமாகக் காட்டுகிறார்.* (147–149)

तस्मात् तितिक्षया सोढ्वा तत्तद्दुःखमुपागतम् ।
कुर्यात् शक्त्यनुरूपेण श्रवणादि शनैः शनैः ॥ १५० ॥

*தஸ்மாத் திதிக்ஷயா ஸோட்வா தத்தத் துக்கமுபாகதம் ।*
*குர்யாத் ஶக்த்யனுரூபேண ச்ரவணாதி ஶனை: ஶனை: ॥*

**तस्मात्** - ஆகையால், **उपागतं**-நேர்ந்த, **तत्तत् दुःखं**-அந்தந்த துக்கத்தை, **तितिक्षया** – பொறுமையால், **सोढ्वा**-ஸஹித்துக்கொண்டு, **शक्त्यनुरूपेण**-தன் சக்திக்குத் தக்கபடி, **शनैः शनैः**-கொஞ்சம் கொஞ்சமாக, **श्रवणादि**-சிரவணம் முதலியவற்றை, **कुर्यात्**-செய்யவேண்டும்.

*ஆகையால் எந்த துக்கம் நேர்ந்தாலும் அதை பொறுமையினல் ஸஹித்துக்கொண்டு, தன் சக்திக்குத்தக்கவாறு சிரவணம் முதலானதுகளை மெள்ள மெள்ள செய்துவரவேண்டும். துக்கம் வந்த சமயத்தில் ஸதா அதைப்பற்றியே நினைத்துக்கொண்டு சிரவணுதிகளை விட்டுவிடக்கூடாது.* **(150)**

प्रयोजनं तितिक्षायाः साधितायाः प्रयत्नतः ।
प्राप्तदुःखासहिष्णुत्वे न किंचिदपि दृश्यते ॥ १५१ ॥

*ப்ரயோஜநம் திதிக்ஷாயா: ஸாதிதாயா: ப்ரயத்நத: ।*
*ப்ராப்தது:க்காஸஹிஷ்ணுத்வே ந கிஞ்சிதபி த்ருச்யதே ॥*

**प्राप्तदुःखासहिष्णुत्वे**-தனக்கு நேரிட்ட துக்கங்களை ஸஹித்துக் கொள்ளாவிட்டால், **प्रयत्नतः**-மிகுந்த முயற்சியுடன், **साधितायाः**-ஸம்பாதித்த, **तितिक्षायाः**-பொறுமைக்கு, **किंचिदपि प्रयोजनं**-ஒரு பிரயோஜனமும், **न दृश्यते**-காணப்படாது.

*மிகுந்த முயற்சி எடுத்துக்கொண்டு சிரமப்பட்டு பொறுமையை ஸம்பாதித்துக்கொண்ட ஒருவன் தனக்கு துக்கம் நேரும்போது அதைத் தாங்கிக்கொள்ளவில்லையானல் அவனிடமுள்ள பொறுமைக்கு என்ன பயன்? ஒன்றுமில்லை அந்தப் பொறுமையால் அவனுக்கு பிரயோஜனமொன்றுமில்லை.* **(151)**

*(அ) சமாதி ஷட்கத்தில் திதிக்ஷையை நன்கு விளக்கிவிட்டு நான்காவதான உபரதி என்பது ஸன்யாஸமேயாகுமென்பதால் அதன் தன்மையை 210வது சுலோகம் முடிய 59 சுலோகங்களால் விஸ்தாரமாக விவரிக்கிருர் :—*

साधनत्वेन दृष्टानां सर्वेषामपि कर्मणाम् ।
विधिना यः परित्यागः स संन्यासः सतां मतः ॥ १५२ ॥

ஸாதநத்வேந த்ருஷ்டாநாம் ஸர்வேஷாமபி கர்மணும் ।
விதிநா ய: பரித்யாக: ஸ ஸந்யாஸ: ஸதாம் மத: ॥

**साधनत्वेन** – உபாயமாக, **दृष्टानां** – காணப்பட்ட, **सर्वेषामपि कर्मणां**–எல்லாகர்மாக்களையும், **विधिना**–முறைப்படி, **यः परित्यागः**–விடுவது என்பது எதுவோ, **सः**–அது, **संन्यासः**–ஸந்யாஸமாக, **सतां मतः**–பெரியோர்களால் கருதப்பட்டுள்ளது.

*அந்தந்த பலன்களையடைவதற்கு உபாயமாக வேதங்களில் உபதேசிக்கப்பட்ட எல்லா கர்மங்களையும் சாஸ்திர முறைப்படி விட்டுவிடுவதுதான் ஸந்யாஸமாகும். (152)*

उपरमयति कर्माणीत्युपरतिशब्देन कथ्यते न्यासः ।
न्यासेन हि सर्वेषां श्रुत्या प्रोक्तो विकर्मणां त्यागः ॥ १५३ ॥

உபரமயதி கர்மாணீத்யுபரதி ஶப்தேந கத்யதே ந்யாஸ: ।
ந்யாஸேந ஹி ஸர்வேஷாம் ச்ருத்யா ப்ரோக்தோ
விகர்மணும் த்யாக: ॥

**कर्माणि**–கர்மாக்களை, **उपरमयति**–செய்யவொட்டாமல் நிறுத்தி விடுகிறது, **इति**–என்ற காரணத்தால், **उपरतिशब्देन**–உபரதி என்ற சொல்லால். **न्यासः**–ஸந்யாஸம், **कथ्यते**–சொல்லப்படுகிறது. **न्यासेन**–ஸந்யாஸத்தால், **सर्वेषां**–எல்லா, **विकर्मणां**–கெட்ட கர்மாக்களையும், **त्यागः**–விடுவது, **श्रुत्या**–சுருதியினுல், **प्रोक्तो हि**–சொல்லப்பட்டுள்ளது அல்லவா !

*கர்மாக்களை நிறுத்திவிடுகிறது (கர்மாக்களின் உபரதியை செய்கிறது) என்ற காரணத்தினுல் ஸன்யாஸமே உபரதி என்ற வார்த்தையினுல் சொல்லப்படுகிறது. கர்மாக்களை விடுவது ஸங்யாஸம். கர்மாக்களைச் செய்யாமல் நிறுத்துவது உபரதி ஆகவே உபரதி ந்யாஸம் என்ற இரண்டு சொற்களும் ஒரே பொருளைக் கூறுகின்றன ஸங்யாஸம் மூலம்தான் எல்லாவித கர்மாக்களையும் விடும்படி வேதம் உபதேசிக்கிறது. பொதுவாக விகர்மா என்ற சொல் சாஸ்திரங்களில் தடுக்கப்பட்ட செய்யத்*

தகாத கெட்ட கர்மாவைக் குறிக்கும். முமுக்ஷுவுக்கு எல்லா கர்மாக்களுமே இடைஞ்சலானபடியால் இந்த சுலோகத்தில் 'விகர்மா' என்ற சொல் எல்லா கர்மாக்களையும் குறிக்கிறது.

(அ) கர்மாவினால் நித்யமான மோக்ஷத்தை ஒருக்காலும் அடைய முடியாது என்பதை விரிவாக விளக்கி அதன் மூலம் கர்மாக்களை விடுவது என்னும் உபரதியை ஸாதனமாகக் காட்டுகிறார் :—

कर्मणा साध्यमानस्यानित्यत्वं श्रूयते यतः ।
कर्मणाऽनेन किं नित्यफलेप्सोः परमार्थिनः ॥ १५४ ॥

கர்மணா ஸாத்யமாநஸ்யாநித்யத்வம் ச்ரூயதே யத: ।
கர்மணாऽநேந கிம் நித்யபலேப்ஸோ: பரமார்த்திந: ॥

**यतः**—எதனால், **कर्मणा**—கிரியையால், **साध्यमानस्य**—ஏற்படும் காரியத்திற்கு, **अनित्यत्वं**—அழியும் தன்மை, **श्रूयते**—அறியப்படுகிறதோ (அதனால்), **अनेन कर्मणा**—இந்த கர்மாவினால், **नित्यफलेप्सोः** சாச்வதமான பலனை அடையவிரும்பும், **परमार्थिनः**—உயர்ந்த பொருளில் நோக்கம்கொண்டவனுக்கு **किम्**—என்ன பிரயோஜனம் ?

கர்மாவினால் ஏற்படுவதெல்லாம் அநித்யம் (அழிவுள்ளது) என்று தெரிவதால், நித்யமான (அழிவற்ற) பலனை அடையவிரும்பி மேலான தத்வத்தை அபேக்ஷிக்கிறவனுக்கு இந்த கர்மாவினால் என்ன பிரயோஜனம்? (154)

(அ) கர்மாவினால் ஸாதிக்கப்படுவதெல்லாம் அநித்யம்தான் என்பதை பிரத்யக்ஷம். அனுமானம், வேதம் என்ற மூன்று பிரமாணங்களினாலும் தீர்மானிக்கலாம் என்பதை தெளிவுபடுத்த, முதலில் பிரத்யக்ஷத்தை எடுத்துக்கொண்டு கர்மாவினால் ஸாதிக்கப்படுவது எவ்விதமாகவெல்லாம் இருக்கலாமென்ற விஷயத்தை எடுத்துக்காட்டுகிறார். இதுவே யுக்திபிரமாணமாகவுமாகும் :—

उत्पाद्यं आप्यं संस्कार्यं विकार्यं परिगण्यते ।
चतुर्विधं कर्मसाध्यं फलं नान्यदितः परम् ॥ १५५ ॥

உத்பாத்யமாப்யம் ஸம்ஸ்கார்யம் விகார்யம் பரிகண்யதே ।
சதுர்விதம் கர்மஸாத்யம் பலம் நாந்யதித: பரம் ॥

**कर्मसाध्यं**-கர்மாவால் ஏற்படும், **फलं**-பலன், **उत्पाद्यं**-உண்டு பண்ணப்படுவது, **आप्यं**-அடையப்படுவது, **संस्कार्यं**-சுத்தப்படுவது, **विकार्यं**-மாறுபடுவது (என்று), **चतुर्विधं**-நான்குவிதமாக, **परिगण्यते**-எண்ணப்படுகிறது. **इतः परं**-இந்த நான்கைத்தவிற, **अन्यत्**-வேறு **न**-கிடையாது.

கர்மாவினால் ஸாதிக்கக்கூடிய பலன் உத்பத்தி செய்யப்படுவது 1. அடையப்படுவது 2, ஸம்ஸ்காரம் செய்யப்படுவது 3, மாறுதலையடைவது 4, என்று நான்கு விதமாக கணக்கிடப்பட்டிருக்கிறது. இவைகளைத்தவிர வேறுவிதம் கிடையாது.

குயவனின் க்ரியையால் மண்ணிலிருந்து உண்டாகும் குடம் உத்பாத்யம் நடப்பதால் அடையப்படும் கிராமம் ஆப்யம். ப்ரோக்ஷணத்தால் சுத்தியாகும் பதார்த்தம் அல்லது அழுக்கு நீங்கி நிர்மலமாகும் கண்ணாடி ஸம்ஸ்கார்யம். உரைகுத்துவதால் பால் தயிராக ஆவது விகாரம். (155)

**नैतदन्यतमं ब्रह्म कदा भवितुमर्हति ।**
**स्वतः सिद्धं सर्वदाऽऽप्तं शुद्धं निर्मलं अक्रियम् ॥ १५६ ॥**

*நைததந்யதமம் ப்ரஹ்ம கதா பவிதுமர்ஹதி ।*
*ஸ்வத: ஸித்தம் ஸர்வதாऽऽப்தம் ஶுத்தம் நிர்மலமக்ரியம் ॥*

**स्वतःसिद्धं**-தானாக எப்பொழுதும் இருப்பதும், **सर्वदा**-எப்பொழுதும் **आप्तं**-அடையப்பட்டிருப்பதும், **शुद्धं**-பரிசுத்தமானதும், **निर्मलं**-அழுக்கற்றதும் **अक्रियं**-விகாரமில்லாததுமான, **ब्रह्म**-ப்ரஹ்மம், **एतदन्यतमं**-இந்த நான்கில் ஒன்றாக, **कदा**-எப்பொழுதுமே, **भवितुं न अर्हति**-ஆகத்தக்கதல்ல.

ப்ரஹ்மமானது இந்த நான்கு விதங்களில் ஏதேனுமொன்றாக ஒரு பொழுதும் இருக்கமுடியாது. தானாகவே நித்ய ஸித்தமானதினால் உத்பாத்யமில்லை எப்பொழுதும் அடையப்பட்டதாகவேயிருப்பதினால் அடையப்படவேண்டியதில்லை எப்பொழுதும் சுத்தமாகவும் தோஷமற்றதாகவும் இருப்பதால் ஸம்ஸ்கார்யமல்ல எவ்வித கிரியாசம்பந்தமுமில்லாததினால் மாறுதலையடைவதும் கிடையாது. (156)

(அ) இவ்வொவ்வொரு அம்சத்தையும் தனித்தனியே விளக்கிக் காட்டுகிறார்:—

**न चास्य कश्चिज्जनितेत्यागमेन निषिध्यते ।**
**कारणं ब्रह्मणस्तस्मात् ब्रह्म नोत्पाद्यमिष्यते ॥ १५७ ॥**

*நசாஸ்ய கச்சித் ஜநிதேத்யாகமேந நிஷித்யதே ।*
*காரணம் ப்ரஹ்மணஸ்தஸ்மாத் ப்ரஹ்ம நோத்பாத்ய*
*மிஷ்யதே ॥*

**अस्य जनिता**–இதை உண்டுபண்ணுபவர், **कश्चित्**–ஒருவரும், **न च**–இல்லை, **इति**–என்று, **आगमेन**–வேதத்தால், **ब्रह्मणः**–பிரஹ்மத்தின் **कारणं**–காரணம், **निषिध्यते**–மறுக்கப்படுகிறது. **तस्मात्**–ஆகையால், **ब्रह्म**–ப்ரஹ்மம், **उत्पाद्यं**–உண்டுபண்ணப்படும் வஸ்துவாக, **न दृष्यते**–கருதப்படுகிறதில்லை.

*“இவரை உண்டுபண்ணினவர் யாரும் கிடையாது” என்ற வேதவாக்யத்தால் பிரஹ்மத்திற்குக் காரணம் மறுக்கப்படுகிறது. எதற்குக்காரணமே கிடையாதோ அது எப்படி உத்பாத்யமாக, உண்டு பண்ணப்படும் பொருளாக இருக்க முடியும்? ஆகையால் பிரஹ்மம் உத்பாத்யம் அல்ல.* *(157)*

**आप्त्राप्ययोस्तु भेदश्चेत् आप्त्रा चाप्यमवाप्यते ।**
**आप्तृस्वरूपमेवैतत् ब्रह्म नाप्यं कदाचन ॥ १५८ ॥**

*ஆப்த்ராப்யயோஸ்து பேதச்சேத் ஆப்த்ரா சாப்ய*
*மவாப்யதே ।*
*ஆப்த்ருஸ்வரூபமேவைதத் ப்ரஹ்ம நாப்யம் கதாசந ॥*

**आप्त्राप्ययोः**–அடைகிறவனுக்கும் அடையப்படுவதற்கும், **भेदः**–வேற்றுமை, **चेत्**–இருக்குமானுல், **आप्त्रा**–அடைகிறவனுல், **आप्यं**–அடையத்தக்கவஸ்து, **अवाप्यते**–அடையப்படுகிறது. **आप्तृस्वरूपमेव**–அடைகிறவனின் ஸ்வரூபமாகவே இருக்கும், **एतत् ब्रह्म**–இந்த பிரஹ்மம் **कदाचन**–ஒருபொழுதும், **न आप्यं**–அடையத்தக்கதல்ல.

*அடைகிறவன், அடையப்படுவது, இவ்விரண்டிற்கும் வேற்றுமையிருந்தால் தான் அடைகிறவனுல் அடையத்தக்க பொருள் அடையப்படும். இந்த பிரஹ்மம் அடைகிறவனுடைய ஸ்வருபமே தவிற வேறல்ல. ஒரே வஸ்து அடைகிறவனுகவும்*

அடையப்படுவதாகவும் எப்படி இருக்கக்கூடும்? ஆகையால் ப்ரஹ்மம் ஆப்யம் (அடையப்படும் வஸ்து) அல்ல. (158)

मलिनस्यैव संस्कारो दर्पणादेरिहेष्यते ।
व्योमवन्नित्यशुद्धस्य ब्रह्मणो नैव संस्क्रिया ॥ १५९ ॥

மலிநஸ்யைவ ஸம்ஸ்காரோ தர்பணாதேரிஹேஷ்யதே ।
வ்யோமவத் நித்யசுத்தஸ்ய ப்ரஹ்மணோ நைவ
ஸம்ஸ்க்ரியா ॥

**दर्पणादेः**-கண்ணாடி முதலான, **मलिनस्यैव**-அழுக்கடைந்த பொருளுக்குத்தான், **इह**-இங்கு, **संस्कारः**-ஸம்ஸ்காரம், **इष्यते**-வேண்டப்படுகிறது. **व्योमवत्**-ஆகாயம்போல், **नित्यशुद्धस्य**-எப்பொழுதும் சுத்தமாயிருக்கின்ற, **ब्रह्मणः**-பிரஹ்மத்திற்கு, **संस्क्रिया**-ஸம்ஸ்காரம், **नैव**-தேவையில்லை.

கண்ணாடி முதலிய அழுக்குள்ள பொருளுக்குத்தான் உலகில் ஸம்ஸ்காரம் தேவைப்படுகிறது. ஆகாசம் போல் எப்பொழுதும் சுத்தமாயிருக்கிற பிரஹ்மத்திற்கு ஸம்ஸ்காரமே பொருந்தாது.

केन दुष्टेन युज्येत वस्तु निर्मलं अक्रियम् ।
यद्योगादागतं दोषं संस्कारो विनिवर्तयेत् ॥ १६० ॥

கேந துஷ்டேந யுஜ்யேத வஸ்து நிர்மலமக்ரியம் ।
யத்யோகாதாகதம் தோஷம் ஸம்ஸ்காரோ
விநிவர்தயேத் ॥

**यद्योगात्**-எதன் சேர்க்கையால், **आगतं**-வந்த, **दोषं**-தோஷத்தை, **संस्कारः**-ஸம்ஸ்காரமானது, **विनिवर्तयेत्**-போக்குமோ (அப்படிப்பட்ட) **केन**-எந்த, **दुष्टेन**-தோஷத்துடன்கூடிய பொருளோடு, **निर्मलं**-தோஷமற்றதும், **अक्रियं**-மாறுதலற்றதுமான, **वस्तु**-ப்ரஹ்மம், **युज्येत**-சேர்ந்துகொள்ளும்.

அழுக்கேறின கண்ணாடியை நன்றாகத் துடைத்து அழுக்கை நீக்கி சுத்தப்படுத்துகிறோம் இதுபோலவே தோஷமுள்ள பொருளுடன் சேர்ந்து அதனால் ஒரு பொருளில் தோஷம் ஏற்பட்டிருந்தால் ஸம்ஸ்காரத்தால் அந்த தோஷத்தை விலக்கக் கூடும். புதிதாக ஏற்பட்ட தோஷத்தை நீக்குவதுதான்

ஸம்ஸ்காரத்தின் பயன். ப்ரஹ்மமோ எவ்வித தோஷமுமற்றது. எவ்வித கிரியையும் அற்ற ப்ரஹ்மம் ஒன்றுடனும் சேராது ஆகவே ப்ரஹ்மம் இயற்கையாகவும் தோஷமற்றது செயற்கையாகவும் தோஷமற்றது. ஆதலால் ஸம்ஸ்காரத்தால் நீக்கவேண்டிய தோஷம் சிறிதுமில்லாததால் ப்ரஹ்மம் எப்படி ஸம்ஸ்கார்ய மாகும்? (160)

(அ) தோஷத்தை விலக்குவது குணத்தை ஏற்றுவது என்று ஸம்ஸ்காரம் இருவிதமாகும் இதில் முதலாவதான ஸம்ஸ்காரம் ப்ரஹ்மத்தில் இல்லை என்பதைச் சொல்லிவிட்டு இரண்டாவதான ஸம்ஸ்காரமும் கிடையாதென்பதைக் கூறுகிறார்:—

निर्गुणस्य गुणाधानं अपि नैवोपपद्यते ।
केवलो निर्गुणश्चेति नैर्गुण्यं श्रूयते यतः ॥ १६१ ॥

நிர்குணஸ்ய குணாதானமபி நைவோபபத்யதே ।
கேவலோ நிர்குணச்சேதி நைர்குண்யம் ச்ரூயதே யத: ॥

**केवलः**–தான்மட்டுமே தனியாக உள்ளது, **निर्गुणश्च**–குணமற்றதும் கூட, **इति**–என்று, **नैर्गुण्यं**–குணங்களேயற்ற தன்மை, **यतः**–எதனால், **श्रूयते**–அறியப்படுகிறதோ (அதனால்), **निर्गुणस्य**–குணமற்ற ப்ரஹ்மத்திற்கு, **गुणाधानमपि**–குணத்தை ஏற்றுவதும், **नैव उपपद्यते**–பொருந்தவே மாட்டாது.

"தனித்தது குணமற்றது" என்று வேதத்தினால் பிரஹ்மத்தின் குணமற்ற தன்மை அறியப்படுவதினால் குணத்தை ஏற்றுவது என்ற விதமான ஸம்ஸ்காரமும் குணமற்ற பிரஹ்மத்தினிடத்தில் கொஞ்சமேனும் பொருந்தாது. (161)

सावयवस्य क्षीरादेः वस्तुनः परिणामिनः ।
येन केन विकारित्वं स्यात् नो निष्कर्मवस्तुनः ॥ १६२ ॥

ஸாவயவஸ்ய க்ஷீராதே: வஸ்துந: பரிணாமிந: ।
யேந கேந விகாரித்வம் ஸ்யாத் நோ நிஷ்கர்ம வஸ்துந: ॥

**सावयवस्य**–அவயவங்களுடன்கூடிய, **परिणामिनः**–மாறுதல் அடையும், **क्षीरादेः**–பால் முதலிய **वस्तुनः**–பொருளிற்கு, **येन केन**–ஏதாவது பிரகாரத்தால், **विकारित्वं**-விகாரத்துடன் கூடியிருக்கும் தன்மை

**स्यात्**—ஏற்படும், **निष्कर्मवस्तुनः**—எவ்வித கிரியையுமற்ற ப்ரஹ்ம வஸ்துவிற்கு, **नो**—விகாரம் ஏற்படாது.

*அவயவங்களோடு கூடின்தாயும் மாறுதலையடையக்கூடியதாயு முள்ள பால் முதலான வஸ்துவிற்குத்தான் எதினுலாவது (எந்தக் காரணத்தினுலாவது) மாறுதல் ஏற்படக்கூடும். எவ்வித கிரியையு மற்ற வஸ்துவான பிரஹ்மத்திற்கு விகாரம் ஏற்படாது.* **(162)**

**निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम् ।**
**इत्येव वस्तुनस्तत्त्वं श्रुतियुक्तिव्यवस्थितम् ॥ १६३ ॥**

*நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம் ।*
*இத்யேவ வஸ்துநஸ் தத்வம் ச்ருதியுக்திவ்யவஸ்திதம் ॥*

**निष्कलं**—அம்சங்களற்றது, **निष्क्रियं**—கிரியைகளற்றது. **शान्तं**—சாந்தமானது, **निरवद्यं**—தோஷமற்றது. **निरञ्जनं**—அழுக்கற்றது, **इत्येव**—என்ற விதமாகத்தான், **वस्तुनः**—ப்ரஹ்ம வஸ்துவின், **तत्त्वं**—ஸ்வரூபம், **श्रुतियुक्तिव्यवस्थितं**—உபநிஷத்துக்களாலும் யுக்திகளாலும் உறுதிப் படுத்தப்பட்டிருக்கிறது.

*அம்சங்களற்றது, கிரியையற்றது, சாந்தமானது, தோஷ மற்றது, அழுக்கற்றது, என்றபடியே பிரஹ்ம வஸ்துவின் வாஸ்தவ நிலை வேததிலும் யுக்தியிலும் தீர்மானம் செய்யப்பட்டிருக் கிறது.* **(163)**

**तस्मात् न कर्मसाध्यत्वं ब्रह्मणोऽस्ति कुतश्चन ।**
**कर्मसाध्यं त्वनित्यं हि ब्रह्म नित्यं सनातनम् ॥ १६४ ॥**

*தஸ்மாத் ந கர்மஸாத்யத்வம் ப்ரஹ்மணோऽஸ்தி குதச்சந ।*
*கர்மஸாத்யம் த்வநித்யம் ஹி ப்ரஹ்ம நித்யம் ஸநாதநம் ॥*

**तस्मात्**—ஆகையால், **ब्रह्मणः**—ப்ரஹ்மத்திற்கு, **कर्मसाध्यत्वं**—கர்மா வினுல் ஏற்படும் தன்மை, **कुतश्चन**-எவ்விதத்தாலும், **नास्ति**—கிடையாது **कर्मसाध्यं तु**-கிரியையால் ஏற்படும் வஸ்துவோவெனில், **अनित्यं**—அநித்ய மாக இருக்கும், **सनातनं**—எப்பொழுதும் உள்ள, **ब्रह्म**-ப்ரஹ்மம், **नित्यं हि**—நித்யமல்லவா !

ஆகையால் எந்தக்காரணத்தினுலும் பிரஹ்மத்திற்கு கர்மாவினுல் ஸாதிக்கப்படும் தன்மை கிடையாது. மேலும், கர்மாவினுல் ஸாதிக்கப்படுவதெல்லாம் அநித்யம் என்பது பிரஸித்தம், பிரஹ்மமோ நித்யம், எப்பொழுதுமுள்ளது. (164)

(அ) கர்மஸாத்யமெல்லாம் அநித்யமென்ற காரணத்தினுலேயே, நித்யமான பிரஹ்மத்தையடைய உத்தேசிப்பவன் ஸகலவித கர்மாக்களையும் அவைகளுக்கு வேண்டிய ஸாதனங்களையும் பரித்யாகம் செய்யவேண்டியதுதான் நியாயமென்பதை ஸ்ரீமத் ஆசார்யார் வற்புறுத்தி, ஸன்யாஸத்தின் அவசியத் தன்மையை எடுத்துக் காட்டுகிருர்:—

देहादिः क्षीयते लोको यथैवं कर्मणा चितः ।
तथैवामुष्मिको लोकः संचितः पुण्यकर्मणा ॥ १६५ ॥

தேஹாதி: க்ஷீயதே லோகோ யதைவம் கர்மணு சித: ।
ததைவாமுஷ்மிகோ லோக: ஸஞ்சித: புண்யகர்மணு ॥

एवं–இவ்விதம், यथा–எப்படி, कर्मणा–கர்மாவினுல், चितः–சம்பாதிக்கப்பட்ட, देहादिः लोकः–தேஹம் முதலான போக்ய வஸ்து, क्षीयते–நாசமடைகிறதோ, तथैव–அப்படியே, पुण्यकर्मणा–புண்ய கர்மாவினுல், संचितः–சம்பாதிக்கப்பட்ட, आमुष्मिको लोकः–மேலுலகத்திலுள்ள போகவஸ்துவும் (அழியக்கூடியதுதான்).

முன்கர்மாவினுல் இவ்வுலகில் ஸம்பாதிக்கப்பட்ட தேகம் முதலான போகவஸ்து அழிந்துபோவதை நேரில் காண்கிறேம். இது போலவே புண்யகர்மாவினுல் பரலோகத்தில் கிடைக்கும் போக வஸ்துவும் அழிந்து போகும் தன்மையுள்ளது என்பதை தீர்மானித்துக்கொள்ளலாம். (165)

कृतकत्वं अनित्यत्वे हेतुः जागर्ति सर्वदा ।
तस्मात् अनित्ये स्वर्गादौ पण्डितः को नु मुह्यति ॥ १६६ ॥

க்ருதகத்வமநித்யத்வே ஹேதுர் ஜாகர்த்தி ஸர்வதா ।
தஸ்மாதநித்யே ஸ்வர்காதௌ பண்டித: கோ நு முஹ்யதி ॥

**अनित्यत्वे**-அநித்யமாயிருக்கும் தன்மைக்கு, **हेतुः**-காரணமான, **कृतकत्वं**-செய்யப்படும் தன்மை, **सर्वदा**-எப்பொழுதும், **जागर्ति**-மறையாமல் பிரகாசமாயிருக்கிறது. **तस्मात्**-ஆகையால், **अनित्ये**-அழிந்து போகும், **स्वर्गादौ**-ஸ்வர்க்கம் முதலியவற்றில், **पण्डितः**-படித்தவனுன, **को नु**-எவன் தான், **मुह्यति**-மயக்கம் (ஆசை)கொள்வான் ?

*செய்யப்படும் தன்மை யென்பது அநித்யமாயிருக்கும் தன்மைக்கு காரணமென்பது ஸர்வ ப்ரஸித்தமானது செய்யப்படும் பொருள் அநித்தியமாகத்தான் இருக்கும் ஸ்வர்க்கம் முதலியவற்றில் உள்ள உண்டாகும் தன்மையை யாரும் மறைக்க முடியாது ஆகையால் புண்யகர்மாக்களாலேற்படுகிற அநித்யமான ஸ்வர்க்கம் முதலானவற்றில் பண்டிதனுயிருக்கும் எவன் தான் மோஹத்தை யடைவான். ஆசைவைப்பான்?* **(166)**

*(அ) ப்ரஹ்மம் நித்யமென்பதை எல்லோரும் ஒப்புக்கொண்டேயாகவேண்டும் என்று கூறுகிறுர் :—*

**जगद्धेतोस्तु नित्यत्वं सर्वेषामपि संमतम् ।**
**जगद्धेतुत्वमस्यैव वावदीति श्रुतिर्मुहुः ॥ १६७ ॥**

*ஜகத்தேதோஸ்து நித்யத்வம் ஸர்வேஷாமபி ஸம்மதம் ।*
*ஜகத்தேதுத்வமஸ்யைவ வாவதீதி ச்ருதிர் முஹு: ॥*

**जगद्धेतोस्तु**-உலகம் முழுவதற்கும் ஆதிகாரணமான பொருளுக்கோவெனில், **नित्यत्वं**-நித்யமாயிருக்கும் தன்மை, **सर्वेषामपि**-எல்லோருக்கும், **संमतं**-ஸம்மதமானது, **श्रुतिः**-வேதமானது, **अस्यैव**-இந்த பிரஹ்மத்திற்கே, **जगद्धेतुत्वं**-ஜகத்காரணத்தன்மையை, **मुहुः**-அடிக்கடி **वावदीति**-நன்றாகச் சொல்கிறது.

*ஜகத்திற்கு காரணமாயுள்ள வஸ்து எதுவோ அது மற்றொரு காரண பொருளால் செய்யப்படாததால் நித்யம் என்பது எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது ஜகத்திற்குக் காரணம் ப்ரஹ்மம்தான் என்று வேதம் அடிக்கடி திருப்பித் திருப்பிச் சொல்கிறது. ஆதலால் பிரஹ்மம் நித்யம் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளவேண்டும்.* **(167)**

**ऐतदात्म्यमिदं सर्वं तत्सत्यं इति च श्रुतिः ।**
**अस्यैव नित्यतां ब्रूते जगद्धेतोः सतः स्फुटम् ॥ १६८ ॥**

*ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத் ஸத்யமிதி ச ச்ருதி: ।*
*அஸ்யைவ நித்யதாம் ப்ரூதே ஜகத்தேதோ: ஸத: ஸ்புடம் ॥*

**इदं सर्वं**—இது எல்லாம், **ऐतदात्म्यं**—அந்த ஸத்காரண ஸ்வரூபமே **तत्** அது, **सत्यं**—ஸத்யமானது (நித்யமானது), **इति च**—என்றும், **श्रुतिः**—உபநிஷத்து, **जगद्धेतोः**—ஜகத்காரணமான, **अस्यैव सतः**—இந்த ஸத் பொருளுக்கே, **नित्यतां**—அழியாத்தன்மையை, **स्फुटं**—தெளிவாக, **ब्रूते**—கூறுகிறது.

*சாந்தோக்ய உபநிஷத்தில் "ஆதியில் ஸத்வஸ்து ஒன்றே இருந்தது. அதிலிருந்து இந்த பிரபஞ்சம் முழுவதும் உண்டாயிற்று" என்று கூறிவிட்டு முடிவில் "இந்த பிரபஞ்சமெல்லாம் காரணமான ஸத்ரூபம்தான். அதைத்தவிர உண்மையில் வேறல்ல. அந்த ஸத்வஸ்துதான் பரமார்த்தமானது" என்று ஜகத்காரணமான ஸத்பொருள் ஒன்றே நித்யம் என்பதை தெளிவாகக் கூறுகிறது. முக்காலங்களிலும் மாறாமல் மறையாமல் ஏகரூபமாக இருப்பது என்பதுதான் ஸத்யம் என்ற சொல்லின் பொருள். ஆதலால் ஜகதகாரணமான ஸத்வஸ்து ஸத்யம் என்று கூறுவுதாலேயே அது நித்யம் என்பதும் கிடைக்கிறது.* (168)

**न कर्मणा न प्रजया धनेनेति स्वयं श्रुतिः ।**
**कर्मणो मोक्षहेतुत्वं साक्षादेव निषेधति ॥ १६९ ॥**

*ந கர்மணா ந ப்ரஜயா தநேநேதி ஸ்வயம் ச்ருதி: ।*
*கர்மணோ மோக்ஷஹேதுத்வம் ஸாக்ஷாதேவ நிஷேததி ॥*

**कर्मणा**—கர்மாவினால், **न**—ஏற்படாது, **प्रजया**—ஸந்ததியினால், **न**—ஏற்படாது, **धनेन**—செல்வத்தினால் (ஏற்படாது), **इति**—என்று, **श्रुतिः**—வேதமானது, **स्वयं**—தானாகவே, **कर्मणः**—கர்மாவிற்கு, **मोक्षहेतुत्वं**—மோக்ஷத்திற்குக் காரணமாகும் தன்மையை, **साक्षादेव**—நேரிடையாகவே **निषेधति**—மறுத்துக்கூறுகிறது.

கர்மாவினுல் ஏற்படாது, பிரஜையினுல் ஏற்படாது, செல்வத்தினுல் ஏற்படாது, என்று வேதம் தானே நேரிலேயே கர்மாவிற்கு, மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மையை மறுத்துக் கூறுகிறது. (169)

प्रत्यग्ब्रह्मविचारपूर्वं उभयोरेकत्वबोधाद्विना
कैवल्यं पुरुषस्य सिध्यति परब्रह्मात्मतालक्षणम् ।
न स्नानैरपि कीर्तनैरपि जपैर्नो कृच्छ्रचान्द्रायणैः
नो वाऽध्वरयज्ञदाननिगमैर्नो मन्त्रतन्त्रैरपि ॥ १७० ॥

ப்ரத்யக் ப்ரஹ்ம விசார பூர்வமுபயோ ரேகத்வபோதாத் விநா
கைவல்யம் புருஷஸ்ய ஸித்யதி பரப்ரஹ்மாத்மதா லக்ஷணம் ।
ந ஸ்நாநைரபி கீர்த்தநைரபி ஜபைர் நோ க்ருச்ச்ர சாந்த்ராயணை:
நோ வாऽப்யத்வரயஜ்ஞதாந நிகமைர் நோ மந்த்ரதந்த்ரைரபி ॥

प्रत्यग्ब्रह्मविचारपूर्वं-ஜீவஸ்வரூபத்தையும் ப்ரஹ்மஸ்வரூபத்தையும் முதலில் விசாரித்து, उभयोः-இரண்டிற்கும், एकत्वबोधात् विना-ஒருமையை அறிந்துகொள்ளாமல், पुरुषस्य-மனிதனுக்கு, परब्रह्मात्मता-लक्षणं-பரப்ரஹ்மமாகவே இருப்பது ரூபமான, कैवल्यं-மோக்ஷம், स्नानैरपि-ஸ்நானங்களாலும், कीर्तनैरपि-நாமகீர்த்தனங்களாலும், जपैः-ஜபங்களாலும், न सिध्यति-ஸித்திக்காது, कृच्छ्रचान्द्रायणैः-கிருச்ச்ரம், சாந்த்ராயணம் என்னும் விரதங்களாலும், नो-ஸித்திக்காது, अध्वर-யாகம், यज्ञ-யஜ்ஞம், दान-தானம், निगमैः-வேதம் இவைகளாலும், नो वा-கிடைக்காது, मन्त्रतन्त्रैरपि-மந்திரங்களாலும் தந்திரங்களாலும், नो-கிடைக்காது.

பரப்பிரஹ்மஸ்வரூபமாயிருக்கும் தன்மை என்னும் கைவல்யம் என்பது புருஷனுக்கு தன்னுள்ளுள்ள ஆத்மாவைப்பற்றியும் பிரஹ்மத்தைப்பற்றியும் நன்கு விசாரித்து அவ்விரண்டிற்கும் உள்ள ஒருமையை அறிவதால்தான் ஏற்படும். இந்த ஞானத்தைத்தவிற வேறு ஸ்நாநங்களினுலோ கீர்த்தனங்களினுலோ

ஏற்படாது. ஜபங்கள் செய்வதினுலோ கிருச்சிரம் சாந்திராயணம் என்னும் விரதங்களை அனுஷ்டிப்பதினுலோ, ஏற்படாது. யாகங்கள் யக்ஞங்கள் தானங்கள் செய்வதினுலோ வேதாத்யயனங்களினுலோ ஏற்படாது. மந்திரங்களையோ தந்திரங்களையோ அனுஷ்டிப்பதினுலேயும் ஏற்படாது- (170)

ज्ञानादेव तु कैवल्यं इति श्रुत्या निगद्यते ।
ज्ञानस्य मुक्तिहेतुत्वं अन्यव्यावृत्तिपूर्वकम् ॥ १७१ ॥

ஞாநாதேவ து கைவல்யமிதி ச்ருத்யா நிகத்யதே ।
ஞாநஸ்ய முக்திஹேதுத்வம் அந்யவ்யாவ்ருத்தி பூர்வகம் ॥

**ज्ञानादेव तु कैवल्यं**-ஞானத்தால்தான் மோக்ஷம், **इति**-என்று, **श्रुत्या**-சுருதியால் **अन्यव्यावृत्तिपूर्वकं**-மற்றதை விலக்குவதன் முகமாக **ज्ञानस्य**-ஞானத்திற்கு, **मुक्तिहेतुत्वं**-மோக்ஷத்திற்குக் காரணமாகும் தன்மை, **निगद्यते**-சொல்லப்படுகிறது.

"ஞானத்தால்தான் கைவல்யம்" என்று சுருதியானது 'ஏவ' காரத்தால் கைவல்யத்திற்கு ஞானம் தவிற வேறு ஸாதனம் கிடையாது என்று காட்டி கைவல்யத்திற்கு ஞானமே ஸாதனம் என்று கூறுகிறது. (171)

विवेकिनो विरक्तस्य ब्रह्मनित्यत्ववेदिनः ।
तद्भावेच्छोरनित्यार्थे तत्सामग्र्ये कुतो रतिः ॥ १७२ ॥

விவேகிநோ விரக்தஸ்ய ப்ரஹ்மநித்யத்வவேதிந: ।
தத்பாவேச்சோரநித்யார்த்தே தத்ஸாமக்ர்யே குதோ ரதி: ॥

**विवेकिनः**-விவேகத்துடன் கூடியவனும், **विरक्तस्य**-வைராக்கியமுள்ளவனும், **ब्रह्मनित्यत्ववेदिनः**-ப்ரஹ்மத்தின் நித்யத்தன்மையை அறிந்தவனும், **तद्भावेच्छोः**-அந்த ப்ரஹ்மபாவத்தை அடைவதில் விருப்பமுள்ளவனுமான புருஷனுக்கு, **अनित्यार्थे**-அநித்யமான பலனிலும் **तत्सामग्र्ये च**-அதன் ஸாதனத்திலும், **कुतः**-எவ்வாறு, **रतिः**-ருசி ஏற்படும் ?

விவேகத்துடன் கூடினவனாய், வைராக்யமுள்ளவனாய், பிரஹ்மம் ஒன்றே நித்யமென்பதை அறிந்தவனாயிருந்து, அந்த பிரஹ்மமாக ஆகவேண்டுமென்ற விருப்பமுள்ளவனுக்கு, அநித்யமான பலனிலும் அதன் ஸாதனத்திலும் எப்படி ருசி ஏற்படும்?

तस्मात् अनित्ये स्वर्गादौ साधनत्वेन चोदितम् ।
नित्यं नैमित्तिकं चापि सर्वं कर्म ससाधनम् ।
मुमुक्षुणा परित्याज्यं ब्रह्मभावमभीप्सुना ॥ १७३ ॥

தஸ்மாதநித்யே ஸ்வர்காதௌ ஸாதநத்வேந சோதிதம் ।
நித்யம் நைமித்திகம் சாபி ஸர்வம் கர்ம ஸஸாதநம் ।
முமுக்ஷுணா பரித்யாஜ்யம் ப்ரஹ்மபாவமபீப்ஸுநா ॥

**तस्मात्**–ஆகையால், **अनित्ये**–அநித்யமான, **स्वर्गादौ**–ஸ்வர்க்கம் முதலியவற்றில், **साधनत्वेन**–ஸாதனமாக, **चोदितं**–விதிக்கப்பட்ட, **नित्यं**–நித்யகர்மாவையும், **नैमित्तिकं**–நைமித்திக கர்மாவையும், **सर्वं चापि कर्म**–எல்லா கர்மாவையும், **ससाधनं**–ஸாதனத்துடன் கூட, **ब्रह्मभावं**–ப்ரஹ்மபாவத்தை, **अभीप्सुना**–அடையவிரும்பும், **मुमुक्षुणा**–முமுக்ஷுவால், **परित्याज्यं**–த்யாகம செய்யத்தக்கது.

ஆகையால் மோக்ஷத்தில் இச்சைகொண்டு பிரஹ்ம பாவத்தையடைய விரும்பும் மனிதனால் அநித்யமான ஸ்வர்க்கம் முதலானதற்கு ஸாதனமாக விதிக்கப்பட்டிருக்கும் நித்யம் நைமித்திகம் உள்பட எல்லா கர்மாக்களும் அவைகளின் ஸாதனங்களுடன் சேர்த்து பரித்யாகம் செய்யவேண்டியவைதான், கர்மாவைச் செய்யாமலிருப்பது கர்மத்யாகமாகும் கர்மாவுக்கு ஸாதனமாக உள்ள திரவ்யம் முதலானவற்றை சேகரிக்கக் கூடாது- தன்னிடமுள்ளதை த்யாகம் செய்துவிடவேண்டும். ஆனால் கிருஹஸ்தன் காம்ய கர்மாக்களை விட்டாலும் நித்ய நைமித்திக கர்மாக்களை விடக்கூடாது. அதனால் பிரத்யவாயம் வரும். முமுக்ஷுவுக்கு பலனில் விருப்பமில்லாவிட்டாலும் பாபங்கள் நீங்கி சித்தசுத்திபெற நித்ய நைமித்திக கர்மாக்களை அனுஷ்டித்தேயாகவேண்டும். ஆகையால் விவேகம், வைராக்யம் சமாதி, முமுக்ஷுத்வம் என்னும் ஸாதனங்களைப் பெற்றபின் ஸந்யாஸத்தை ஸ்வீகரித்துக்கொண்டு விதிபூர்வமாக கர்மாக்களை

த்தியர்கம் செய்யவேண்டுமெனக் கூறுகிருர். ஸந்யாஸிக்குக் கர்மாவைச் செய்வதில் அதிகாரம் கிடையாது. (173)

(அ) மோக்ஷத்திற்கு ஞானம்தான் ஸாதனம், கர்மா ஸாதனம் ஆகாது, என்று ஸித்தாந்தமிருக்கையில் அத்வைதிகளிலேயே சிலர் கர்மா, ஞானம் இரண்டும் சேர்ந்து மோக்ஷத்திற்கு ஸாதனமாக இருக்கட்டுமேயென்று நினைக்கிருர்கள். அவ்விதம் எண்ணுவது சரியல்லவென்பதை 205வது சுலோகம்வரை நன்கு விளக்கிக் காட்டுகிருர். முதல் மூன்று சுலோகங்களால் அவர்களின் அபிப்பிராயத்தைக் கூறுகிருர் :—

**मुमुक्षोरपि कर्मास्तु श्रवणं चापि साधनम् ।**
**हस्तवत् द्वयमेतस्य स्वकार्यं साधयिष्यति ॥ १७४ ॥**

முமுக்ஷோரபி கர்மாஸ்து ச்ரவணம் சாபி ஸாதநம் I
ஹஸ்தவத் த்வயமேதஸ்ய ஸ்வகார்யம் ஸாதயிஷ்யதி ॥

**मुमुक्षोरपि**-முமுக்ஷுவுக்கும், **कर्म**-கர்மாவும், **श्रवणं चापि**-சிரவணமும், **साधनं**-ஸாதனமாக, **अस्तु**-இருக்கட்டும். **एतस्य**-இவனுக்கு, **द्वयं**-கர்மா, ஞானம் இரண்டும் (சேர்ந்து), **हस्तवत्**-கை போல், **स्वकार्यं**-தன் காரியத்தை, **साधयिष्यति**-ஸாதித்துக்கொடுக்கும்.

மோக்ஷத்தில் ஆசையுள்ளவனுக்குக் கர்மாவும் ஸாதனமாக இருக்கட்டும், சிரவணமும் ஸாதனமாயிருக்கட்டும். இரண்டு கைகளும் சேர்ந்து உபகாரம் செய்வதுபோல் இவ்விரண்டும் சேர்ந்து இவனுக்கு தன் கார்யத்தை ஸாதித்துக் கொடுக்கும்.

**यथा विजृम्भते दीपो ऋजूकरणकर्मणा ।**
**तथा श्रवणजो बोधः पुंसो विहितकर्मणा ॥ १७५ ॥**

யதா விஜ்ரும்பதே தீபோ ருஜூகரண கர்மணா II
ததா ச்ரவணஜோ போத: பும்ஸோ விஹித கர்மணா ॥

**यथा**-எவ்வாறு, **ऋजूकरणकर्मणा**-திரியைத் தூண்டுவது என்ற காரியத்தால், **दीपः**-தீபமானது, **विजृम्भते**-நன்கு ஒளியுடன் விளங்குகிறதோ, **तथा**-அவ்வாறு, **पुंसः**-மனிதனுக்கு, **श्रवणजः**-சிரவணத்தால்

உண்டாகும், बोधः–ஞானம், विहितकर्मणा–விதிக்கப்பட்ட கர்மாவினால் (நன்கு பிரகாசிக்கிறது).

(அல்லது) எவ்விதம் தீபமானது தூண்டிவிடுகிறதாகிய கர்மாவினால் நன்ருக எரிகிறதோ அப்படியே சிரவணத்தினால் மனிதனுக்கு ஏற்படும் ஞானம் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கும் கர்மாவினால் நன்கு விளங்கும். சிரவணத்தால் ஞானம் ஏற்பட்டாலும் அது நன்கு பிரகாசித்து பலனைக் கொடுப்பது கர்மயோகத்தால் தான் என்று கருத்து. (175)

अतः सापेक्षितं ज्ञानं अथवापि समुच्चितम् ।
मोक्षस्य साधनं इति वदन्ति ब्रह्मवादिनः ॥ १७६ ॥

அத: ஸாபேக்ஷிதம் ஞாநம் அதவாபி ஸமுச்சிதம் ।
மோக்ஷஸ்ய ஸாதனமிதி வதந்தி ப்ரஹ்ம வாதிந: ॥

अतः–ஆகையால், सापेक्षितं–கர்மாவின் அபேக்ஷையுடன் கூடியதாகவோ, अथवापि–அல்லது, समुच्चितं–கர்மாவுடன் சேர்ந்துள்ளதாகவோ இருக்கும், ज्ञानं–ஞானமானது, मोक्षस्य–மோக்ஷத்திற்கு, साधनं–ஸாதனம், इति–என்று, ब्रह्मवादिनः–ப்ரஹ்மத்தைப்பற்றிப் பேசுகிறவர்கள், वदन्ति–சொல்கிருர்கள்.

ஆகையால் கர்மாவை அபேக்ஷிக்கும் ஞானமோ அல்லது இரண்டும் சேர்ந்தோ மோக்ஷத்திற்கு ஸாதனம். என்று பிரஹ்மத்தைப்பற்றி பேசுபவர்கள் சிலர் சொல்கிருர்கள். பிரஹ்மத்தைப்பற்றி நன்கு அறிந்தவர்கள் இவ்விதம் சொல்ல மாட்டார்கள் என்று தாத்பர்யம்

இங்கு ஞானகர்ம ஸமுச்சயம், கர்மாவை அபேக்ஷித்த ஞானம் என்ற இரண்டு பக்ஷத்தையும் கூறியிருக்கிருர். 174வது சுலோகத்தில் ஹஸ்த திருஷ்டாந்தத்தால் ஞானகர்ம ஸமுச்சயம் கூறப்பட்டது. இடதுகை, வலதுகை இரண்டும் ஸமநிலையில் இருந்து காரியத்தைச் செய்வது போல் ஞானமும் கர்மாவும் ஸமமாய் இருந்து மோக்ஷஸாதனமாகிறது இந்த பக்ஷத்தில் இரண்டும் ப்ரதானம்தான் 175வது சுலோகத்தில் 2வது பக்ஷம் கூறப்பட்டது இதில் ஞானம் ப்ரதானமாகவும் கர்மா அப்ரதானமாகவும் ஆகிறது. தீபத்தால் தான் இருள் நீங்குகிறது. ஆனாலும் அது

சுடர்விட்டு எரிந்து நன்கு பிரகாசித்தால் தான் இருள் முழுவதும் நீங்கி பொருள் நன்கு தெரியவரும் சுடர்விட்டு எரிய தூண்டுதல் அவசியமாகிறது. அதுபோலவே சிரவணத்தால் ஏற்படும் ஞானம் விஹிதமான கர்மாக்களைச் செய்வதால்தான் நன்கு பிரகாசித்து மோக்ஷத்தைத் தருகிறது. ஆகவே ஞானம் மோக்ஷத்தைத்தர கர்மாக்களின் உதவிவேண்டும் என்பது 2வது பக்ஷத்தின் கருத்து. இரண்டு மதங்களையுமே பின்னால் நிராகரிக்கிறார். (176)

मुमुक्षोर्युज्यते त्यागः कथं विहितकर्मणः ।
इति शङ्का न कर्तव्या मूढवत् पण्डितोत्तमैः ॥ १७७ ॥

முமுக்ஷோர் யுஜ்யதே த்யாக: கதம் விஹித கர்மண: 1
இதி சங்கா ந கர்தவ்யா மூடவத் பண்டிதோத்தமை: ॥

**मुमुक्षोः**-மோக்ஷமடைய ஆவலுள்ளவனுக்கு, **विहितकर्मणः**-செய்ய வேண்டியதாக விதிக்கப்பட்ட கர்மாவின், **त्यागः**-தியாகம், **कथं**-எவ்வாறு **युज्यते**-யுக்தமாகும், **इति**-என்று, **मूढवत्**-முட்டாள்போல, **पण्डितोत्तमैः**-பண்டித சிரேஷ்டர்களால், **शंका**-கேள்வி, **न कर्तव्या**-கேட்கக்கூடாது.

மோக்ஷமடைய விருப்பமிருந்தபோதிலும், அவசியம் அனுஷ்டிக்கவேண்டு மென்று சாஸ்திரங்களில் தனது கடமையாக விதிக்கப்பட்டிருக்கும் கர்மாக்களை விடுவது உசிதமா? இதனால் ப்ரத்யவாயம் வராதா என்று சில மூடர்கள் கேட்கிறார்கள். படித்தவர்கள் இப்படிக் கேட்கமாட்டார்கள். (177)

(அ) கர்மாவும் ஞானமும் ஒன்றுசேர முடியாதபடி அவற்றி லுள்ள வைலக்ஷண்யங்களை விவரிக்கிறார்:—

कर्मणः फलमन्यत्तु श्रवणस्य फलं पृथक् ।
वैलक्षण्यं च सामग्र्योश्चोभयत्राधिकारिणोः ॥ १७८ ॥

கர்மண: பலமந்யத்து ச்ரவணஸ்ய பலம் ப்ருதக் ।
வைலக்ஷண்யம் ச ஸாமக்ர்யோச்சோபயத்ராதிகாரிணோ:॥

**कर्मणः**-கர்மாவின், **फलं**-பலன், **अन्यत्**-வேறு, **श्रवणस्य तु**-சிரவணத்திற்கோவெனில், **फलं**-பலன், **पृथक्**-வேறு, **उभयत्र**-இரண்டு

இடங்களிலும், **सामग्र्योश्च**-ஸாதனங்களுக்கும், **अधिकारिणोश्च**-அதிகாரிகளுக்கும், **वैलक्षण्यं**-வேற்றுமை (உள்ளது).

*கர்மாவினால் ஏற்படும் பலன் வேறு, சிரவணத்தினால் உண்டாகும் பலன் வேறு. இரண்டிலும் ஸாமக்ரிகள் விஷயத்திலும் அதிகாரி விஷயத்திலும் எவ்வளவோ வித்யாஸமிருக்கிறது.*

*(அ) அதிகாரி தாரதம்யத்தைக் கூறுகிறார்:—*

**कामी कर्मण्यधिकृतो निष्कामी(मः)श्रवणे मतः ।**
**अर्थी समर्थ इत्यादि लक्षणं कर्मिणो मतम् ॥ १७९ ॥**

**परीक्ष्य लोकानित्यादि लक्षणं मोक्षकाङ्क्षिणः ।**
**मोक्षाधिकारी संन्यासी गृहस्थः किल कर्मणि ॥ १८० ॥**

*காமீ கர்மண்யதிக்ருதோ நிஷ்காமீ ச்ரவணே மத: ।*
*அர்த்தீ ஸமர்த்த இத்யாதி லக்ஷணம் கர்மிணோ மதம் ॥*

*பரீக்ஷ்ய லோகாநித்யாதி லக்ஷணம் மோக்ஷகாங்க்ஷிண: ।*
*மோக்ஷாதிகாரீ ஸந்யாஸீ க்ருஹஸ்த்த: கில கர்மணி ॥*

**कामी**-ஆசையுள்ளவன், **कर्मणि**-கர்மாவிலும், **निष्कामी**-ஆசையற்றவன், **श्रवणे**-ச்ரவணத்திலும், **अधिकृतः**-அதிகாரியாக (செய்யத் தகுதியுள்ளவனாக), **मतः**-கருதப்பட்டிருக்கிறான். **अर्थी**-பலனை வேண்டுபவன், **समर्थः**-ஸாமர்த்யமுள்ளவன், **इत्यादि**-இது முதலானது, **कर्मिणः**-கர்மா செய்பவனுக்கு, **लक्षणं**-அடையாளமாக, **मतम्**-ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. **लोकान्**-உலகங்களை, **परीक्ष्य**-நன்கு ஆராய்ந்து, **इत्यादि**-இது முதலானது, **मोक्षकाङ्क्षिणः**-மோக்ஷத்தை விரும்புபவனுக்கு, **लक्षणं**-அடையாளம், **संन्यासी**-ஸந்யாஸி, **मोक्षाधिकारी**-மோக்ஷத்தில் அதிகாரி, **गृहस्थः किल**-கிருஹஸ்தனல்லவா, **कर्मणि**-கர்மாவில் (அதிகாரி).

*ஆசையுள்ளவன் கர்மாவில் அதிகாரமுள்ளவன் அதாவது கர்மாவைச் செய்யத் தகுதியுள்ளவன். ஆசையற்றவன் சிரவணத்தில் அதிகாரி என்று கருதப்படுகிறான். கர்மாதிகாரிக்கு லக்ஷணம்*

"வேண்டுபவன் சக்தியுள்ளவன்" முதலியது சொல்லப்படுகிறது. மோக்ஷத்தில் ஆசையுள்ளவனுக்கு லக்ஷணம் "உலகங்களை பரிசீலனை செய்து (வைராக்கியம் அடைய வேண்டும்)" முதலானது. மோக்ஷத்தில் அதிகாரி ஸன்னியாஸி. கர்மாவிலோ கிருஹஸ்தன். (179-180)

(அ) ஸாமக்ரீ வைலக்ஷண்யத்தைக் கூறுகிறார் :—

कर्मणः साधनं भार्यास्रुक्स्रुवादिपरिग्रहः ।
नैवान्यसाधनापेक्षा शुश्रूषोस्तु गुरुं विना ॥ १८१ ॥

கர்மண: ஸாதநம் பார்யா ஸ்ருக்ஸ்ருவாதி பரிக்ரஹ: ।
நைவாந்யஸாதநாபேக்ஷா சுச்ருஷோஸ்து குரும் விநா ॥

भार्या-மனைவி, स्रुक्स्रुवादिपरिग्रहः-ஸ்ருக், ஸ்ருவம் முதலான வஸ்துக்களை சேகரிப்பது, कर्मणः-கர்மாவிற்கு, साधनं-ஸாதனம், शुश्रूषोस्तु-ச்ரவணத்தில் விருப்பமுள்ளவனுக்கோவெனில், गुरुं विना-குருவைத்தவிற, नैव अन्यसाधनापेक्षा-வேறு ஸாதனத்தின் அபேக்ஷை கிடையவே கிடையாது.

கர்மாவிற்கு ஸாதனம் பத்னீ, ஸ்ருக், ஸ்ருவம், (ஆஜ்யத்தை எடுப்பதற்கும் ஹோமம் செய்வதற்கும் உள்ள பாத்திரங்கள்) முதலியவைகளை சேர்த்துக்கொள்ளல். சிரவணத்தில் இச்சையுள்ளவனுக்கோ குருவைத்தவிர வேறு எந்த ஸாதனத்தின் அபேக்ஷையும் கிடையாது. (181)

उपर्युपर्यहंकारो वर्धते कर्मणा भृशम् ।
अहंकारस्य विच्छित्तिः श्रवणेन प्रतिक्षणम् ॥ १८२ ॥

உபர்யுபர்யஹங்காரோ வர்த்ததே கர்மணா ப்ருசம் ।
அஹங்காரஸ்ய விச்சித்தி: ச்ரவணேன ப்ரதிக்ஷணம் ॥

कर्मणा-கர்மாவினால், उपर्युपरि-மேன்மேலும், अहंकारः-அஹங்காரம், भृशं-அதிகமாக, वर्धते-வளருகிறது, श्रवणेन-சிரவணத்தால், प्रतिक्षणं-ஒவ்வொரு க்ஷணமும், अहंकारस्य-அஹங்காரத்தின், विच्छित्तिः-நாசம் (ஏற்படுகிறது).

கர்மாவினால் மேன்மேலும் அஹங்காரம் (நான் என்ற எண்ணம்) அதிகமாக வளரும். சிரவணத்தினால் ஒவ்வொரு க்ஷணத்திலும் அஹங்காரத்தின் நாசமே ஏற்படும். (182)

**प्रवर्तकं कर्मशास्त्रं ज्ञानशास्त्रं निवर्तकम् ।**
**इत्यादि वैपरीत्यं तत्साधने चाधिकारिणोः ॥ १८३ ॥**

*ப்ரவர்த்தகம் கர்மஶாஸ்த்ரம் ஞாநஶாஸ்த்ரம் நிவர்த்தகம் ।*
*இத்யாதி வைபரீத்யம் தத்ஸாதநே சாதிகாரிணோ: ॥*

**कर्मशास्त्रं**-கர்மாவை விதிக்கும் வேதபாகம், **प्रवर्तकम्** -ப்ரவர்த்திக்கும் படி செய்கிறது, **ज्ञानशास्त्रं**-ஞானத்தை உபதேசிக்கும் உபநிஷத் **निवर्तकम्** -கர்மாவைச் செய்வதினின்றும் திருப்புகிறது **इत्यादि**-இது முதலான, **वैपरीत्यं**-வைலக்ஷண்யமானது, **तत्साधने**-அந்த கர்ம, ஞானம் இவைகளின் ஸாதனத்திலும், **अधिकारिणोः च**-அதிகாரி விஷயமாகவும் உள்ளது.

கர்ம சாஸ்திரம் பிரவிருத்திக்கச் செய்யும். கர்மாக்களைச் செய்யும்படி தூண்டும். ஞானசாஸ்திரம் நிவிருத்திக்கச் செய்யும். கர்மாக்களை விட்டுவிடும்படி செய்யும். இரண்டின் ஸாதன விஷயத்திலும் அதிகாரி விஷயத்திலும் இது முதலான பலவித விபரீதத்தன்மை இருந்துவருகிறது. (183)

**द्वयोः परस्परापेक्षा विद्यते न कदाचन ।**
**सामग्र्योश्चोभयोस्तद्वत् उभयत्राधिकारिणोः ॥ १८४ ॥**

*த்வயோ: பரஸ்பராபேக்ஷா வித்யதே ந கதாசந ।*
*ஸாமக்ர்யோச்சோபயோஸ்தத்வத் உபயத்ராதிகாரிணோ:*

**द्वयोः**-கர்மா, ஞானம் இரண்டிற்கும், **उभयोः**-இரண்டின், **सामग्र्योश्च**-ஸாதனங்களுக்கும், **तद्वत्** -அதுபோல், **उभयत्र**-இரண்டிலும், **अधिकारिणोः**-அதிகாரிகளுக்கும், **कदाचन**-ஒருபொழுதும், **परस्परापेक्षा**-ஒன்றுக்கொன்று அபேக்ஷை, **न विद्यते**-இல்லை.

இரண்டிலும் ஒன்றுக்கு மற்றொன்றின் அபேக்ஷையானது ஒருபொழுதும் கிடையாது. அப்படியே இரண்டினுடைய ஸாமக்ரிகளுக்குள்ளும் பரஸ்பரம் அபேக்ஷை கிடையாது. அதேமாதிரி

இரண்டிடத்திலுமுள்ள அதிகாரிகளுக்குள்ளும் பரஸ்பரம் அபேக்ஷை கிடையாது. (184)

**ऊर्ध्वं नयति विज्ञानं अधः प्रापयति क्रिया ।**
**कथं अन्योन्यसापेक्षा कथं वाऽपि समुच्चयः ॥ १८५ ॥**

*ஊர்த்வம் நயதி விஜ்ஞாநம் அத: ப்ராபயதி க்ரியா ।*
*கதமந்யோந்யஸாபேக்ஷா கதம் வாऽபி ஸமுச்சய: ॥*

**विज्ञानं**-ஞானமானது, **ऊर्ध्वं**-மேல் நிலைக்கு, **नयति**-அழைத்துச் செல்கிறது, **क्रिया**-கர்மாவானது, **अधः**-கீழ்நிலையை, **प्रापयति**-அடைவிக்கிறது, **अन्योन्यसापेक्षा**-இரண்டிற்கும் ஒன்றுக்கொன்று அபேக்ஷையுடன் கூடியிருப்பது, **कथं**-எப்படியிருக்கமுடியும்? **वा**-அல்லது, **समुच्चयोऽपि**-சேர்க்கையும், **कथं**-எவ்வாறு இருக்கும்?

ஞானம் மேலே கொண்டுபோகிறது, கர்மா கீழே கொண்டு போய்ச்சேர்க்கிறது. இவ்விரண்டிற்கும் ஒன்றுக்கொன்று அபேக்ஷை எப்படியிருக்க முடியும்? இரண்டின் சேர்க்கைதான் எப்படியிருக்க முடியும்? (185)

**यथाऽग्नेस्तृणकूटस्य तेजसस्तिमिरस्य च ।**
**सहयोगो न घटते तथैव ज्ञानकर्मणोः ॥ १८६ ॥**

*யதாக்நேஸ் த்ருணகூடஸ்ய தேஜஸஸ் திமிரஸ்ய ச ।*
*ஸஹயோகோ ந கடதே ததைவ ஞாநகர்மணோ: ॥*

**यथा**-எப்படி, **अग्नेः**-நெருப்பிற்கும், **तृणकूटस्य**-காய்ந்த புல் குவியலுக்கும், **तेजसः**-ஒளிக்கும், **तिमिरस्य च**-இருளுக்கும், **सहयोगः**-கூடசேர்க்கை, **न घटते**-பொருந்தாதோ, **तथैव**-அவ்விதமே, **ज्ञान-कर्मणोः**-ஞானத்திற்கும் கர்மாவிற்கும், (சேர்க்கை பொருந்தாது).

எவ்விதம் அக்னிக்கும் காய்ந்த புல் குவியலுக்கும், அப்படியே வெளிச்சத்திற்கும் இருட்டிற்கும், சேர்ந்திருத்தல் ஸாத்தியமில்லையோ, அப்படியேதான் ஞானத்திற்கும் கர்மாவிற்கும் சேர்ந்திருத்தல் ஸாத்தியமில்லை. ஒன்றுக்கொன்று விருத்தமான இரு வஸ்துக்கள் ஒரே இடத்தில் சேர்ந்து இருக்கமுடியாது. ஒன்று மற்றொன்றை அழித்துவிடும். கடைசியில் ஒன்றுதான் மிஞ்சி

*நிற்கும் புல்லுக்கட்டுடன் நெருப்பைச் சேர்த்தால் புல் இருக்குமா? சாம்பலாகிவிடாதா? ஒளியுள்ள இடத்தில் இருள் இருக்குமா? இதுபோலவே ஞானமும் கர்மாவை அழித்துவிடும். இரண்டும் சேர்ந்து இருக்கமுடியாது.* **(186)**

**किमूपकुर्यात् ज्ञानस्य कर्म स्वप्रतियोगिनः ।**
**यस्य संनिधिमात्रेण स्वयं न स्फूर्तिमृच्छति ॥ १८७ ॥**

*கிமுபகுர்யாத் ஞாநஸ்ய கர்ம ஸ்வப்ரதியோகிந: ।*
*யஸ்ய ஸந்நிதிமாத்ரேண ஸ்வயம் ந ஸ்பூர்த்திம்ருச்சதி ॥*

**यस्य**-எது, **संनिधिमात्रेण**-ஸமீபத்தில் இருப்பதாலேயே, **स्वयं**-தான், **स्फूर्तिं न ऋच्छति**-விளங்காதோ (அந்த), **स्वप्रतियोगिनः**-தனது எதிரியான, **ज्ञानस्य**-ஞானத்திற்கு, **कर्म**-கர்மாவானது, **किमु उपकुर्यात्** -என்ன உதவி செய்யும் ?

*எது முன்னால் இருந்தாலே தான் இருக்க முடியாதோ, அவ்விதமாக தனக்கு நேர் எதிரியான ஞானத்திற்கு கர்மா என்ன உபகாரம் செய்யும்?* **(187)**

**कोटीन्धनाद्रिज्वलितोऽपि वह्निः अर्कस्य नार्हत्युपकर्तुमीषत् ।**
**यथा तथा कर्मसहस्रकोटिः ज्ञानस्य किंतु स्वयमेव लीयते ॥ १८८ ॥**

*கோடீந்தநாத்ரிஜ்வலிதோऽபி வஹ்நி:*
*அர்கஸ்ய நார்ஹத்யுபகர்துமீஷத் ।*
*யதா ததா கர்மஸஹஸ்ரகோடி:*
*ஞாநஸ்ய கிம் து ஸ்வயமேவ லீயதே ॥*

**यथा**-எப்படி, **कोटीन्धनाद्रिज्वलितोपि**-மலைபோலுள்ள கோடிக் கணக்கான விறகுகளால் ஜ்வலித்தபோதிலும்: **वह्निः**-நெருப்பானது, **अर्कस्य**-ஸூர்யனுக்கு, **ईषत्** -சிறிதும், **उपकर्तुं**-உதவி செய்வதற்கு, **न अर्हति**-தகுதியுள்ளதல்லவோ, **तथा**-அப்படியே, **कर्मसहस्रकोटिः**-ஆயிரம் கோடி கர்மாவும், **ज्ञानस्य**-ஞானத்திற்கு (உதவி செய்ய முடியாது), **किंतु**-ஆனால், **स्वयमेव**-தானாகவே, **लीयते**-மறைந்து விடுகிறது.

கோடிக்கணக்கான விறகு மலைகள் எரிந்து அக்னி ஜ்வலித்தாலும் அது கொஞ்சமேனும் ஸூர்யனுக்கு உதவி செய்ய யோக்கியதையற்றது ஸூர்யன் கிளம்பியவுடன் அக்னியின் அத்தனை ஒளியும் இருக்குமிடம் தெரியாமல் மங்கிப் போய் விடுகிறது. இது எப்படி ஸூரியனுக்கு உதவி செய்ய முடியும்? இதுபோல் ஆயிரம் கோடி கர்மாக்கள் சேர்ந்தாலும் ஞானத்திற்கு உதவியாயிருக்க முடியாது. தவிரவும், ஞானத்தைக் கண்டு கர்மா தானாகவே மறைந்து கூடப் போய்விடும். (188)

(அ) 174-வது சுலோகத்தில் இரண்டு கைகள் போல ஞானமும், கர்மாவும் சேர்ந்து ஒரு காரியத்தை ஸாதிக்கலாமே என்று ஸமப்ரதானமாக ஞானகர்ம ஸமுச்சயம் சொன்னதற்கு பதில் சொல்கிறார் :—

**एककर्त्राश्रयौ हस्तौ कर्मण्यधिकृतावुभौ ।**
**सहयोगस्तयोर्युक्तो न तथा ज्ञानकर्मणोः ॥ १८९ ॥**

ஏககர்த்ராச்ரயௌ ஹஸ்தௌ கர்மண்யதிக்ருதாவுபௌ ।
ஸஹயோகஸ் தயோர் யுக்தோ ந ததா ஞாநகர்மணோ: ॥

**उभौ हस्तौ**-இரு கைகளும், **एककर्त्राश्रयौ**-ஒரே கர்த்தாவை (செய்கிறவனை) ஆச்ரயமாகக்கொண்டவை, **कर्मणि अधिकृतौ**-கர்மாவைச் செய்யும் தகுதிவாய்ந்தவை (ஆகையால்), **तयोः**-அவைகளுக்கு, **सहयोगः**-கூடச்சேர்க்கை, **युक्तः**-உசிதம்தான், **तथा**-அதுபோல, **ज्ञानकर्मणोः**-ஞானத்திற்கும் கர்மாவிற்கும் (கூடச்சேர்க்கை), **न**-பொருந்தாது.

கர்மாவைச் செய்யும் ஒரே மனிதனிடம் இருகைகளும் உள்ளன. இருகைகளும் கர்மாவைச் செய்யும் தகுதி வாய்ந்தவை ஆகையால் இருகைகளும் சேர்ந்து ஒரு காரியத்தைச் செய்வது பொருந்தும். இம்மாதிரி ஞானமும் கர்மாவும் ஒரே இடத்தில் சேர்ந்து இருக்க முடியாது. ஏனெனில் கர்த்தா (செய்கிறவன்) தான் கர்மாவுக்கு ஆச்ரயம். அகர்த்தா (செய்யாதவன்) ஞானத்திற்கு ஆச்ரயம் வெவ்வேறு இடத்திலிருப்பவை இரண்டும் எவ்வாறு ஒன்று சேர முடியும்? மேலும் ஆசையுள்ளவன் கர்மாவில் அதிகாரி. ஆசையற்றவன் ஞானத்தில் அதிகாரி. இவ்வாறு ஆச்ரயம், அதிகாரி இரண்டும் வெவ்வேறாக இருப்ப

தால் கர்மா ஞானம் இரண்டும் ஒரே இடத்தில் சேர்ந்து இருந்து பலனைத்தர முடியாது. (189)

(அ) கர்மாவிற்கும் ஞானத்திற்கும் எப்படி விரோதம் என்பதை அவைகளின் தன்மையை கவனித்தால் தெளிவாய் தெரியவருமென்று மேல் சுலோகங்களில் காட்டுகிறார் :—

कर्त्रा कर्तुं अकर्तुं वाऽप्यन्यथा कर्म शक्यते ।
न तथा वस्तुनो ज्ञानं कर्तृतन्त्रं कदाचन ॥ १९० ॥

கர்த்ரா கர்துமகர்தும் வாஉப்யந்யதா கர்ம ஶக்யதே ।
ந ததா வஸ்துநோ ஞாநம் கர்த்ருதந்த்ரம் கதாசந ॥

कर्त्रा-கர்த்தாவினால், कर्म-கர்மாவானது, कर्तुं-செய்வதற்கோ अकर्तुं वा- செய்யாமலிருப்பதற்கோ, अन्यथापि-வேறுவிதமாகச்செய்வதற்கோ, शक्यते-முடியும், तथा-அதுபோல், वस्तुनः-வஸ்துவின் ज्ञानं-ஞானமானது, कदाचन-ஒருபொழுதும், न कर्तृतन्त्रं-கர்த்தாவுக்குட்பட்டதல்ல.

கர்மாவானது கர்த்ருதந்த்ரம் அதாவது செய்பவனுக்கு அதீனமானது. கர்த்தாவானவன் தன் இஷ்டப்படி கர்மாவைச் செய்யவோ, அல்லது செய்யாமலிருக்கவோ, அல்லது வேறு விதமாகச் செய்யவோ முடியும். இதுபோல் ஞானம் கர்த்ருதந்த்ரமல்ல. இது வஸ்து தந்த்ரம். அதாவது வஸ்து தன்முன் இருக்கும் போது அதை அறிந்து கொள்ளும் விஷயத்தில் அறிகிறவனுக்கு எவ்வித ஸ்வாதந்திரியமும் கிடையாது. அது அவனை எதிர்பார்க்காமலே அறியப்பட்டு விடும். அவன் அறிய மாட்டேன் என்றாவது வேறு விதமாக அறிந்து கொள்வேன் என்றாவது சொல்வதற்கு முடியாது. (190)

यथा वस्तु तथा ज्ञानं प्रमाणेन विजायते ।
नापेक्षते च यत्किंचित् कर्म वा युक्तिकौशलम् ॥ १९१ ॥

யதா வஸ்து ததா ஞாநம் ப்ரமாணேந விஜாயதே ।
நாபேக்ஷதே ச யத்கிஞ்சித் கர்ம வா யுக்திகௌஶலம் ॥

वस्तु-வஸ்து, यथा-எவ்வாறு உள்ளதோ, तथा-அவ்வாறு, प्रमाणेन-ப்ரமாணத்தால், ज्ञानं-ஞானம், विजायते-உண்டாகிறது,

**यत्किंचित्**-ஏதாவது, **कर्म**-கர்மாவையோ **युक्तिकौशलं वा**-யுக்தித் திறமையையோ, **न चापेक्षते**-எதிர்பார்ப்பதில்லை.

*வஸ்து எப்படியிருக்கிறதோ அப்படியே பிரமாணத்தினால் ஞானம் உண்டாகிறது. அது எவ்வித கர்மாவையாவது யுக்தி ஸாமர்த்தியத்தையாவது அபேக்ஷிக்கிறதில்லை.* (191)

ज्ञानस्य वस्तुतन्त्रत्वे संशयाद्युदयः कथम् ।
अतो न वास्तवं ज्ञानं इति नो शङ्क्यतां बुधैः ॥ १९२ ॥

*ஞாநஸ்ய வஸ்துதந்த்ரத்வே ஸம்ஶயாத்யுதய: கதம் I*
*அதோ ந வாஸ்தவம் ஞாநமிதி நோ ஶங்க்யதாம் புதை: II*

**ज्ञानस्य वस्तुतन्त्रत्वे**-ஞானம் வஸ்துவையனுசரித்து ஏற்படுமானால், **संशयाद्युदयः**-ஸந்தேஹம் முதலியது உண்டாவது, **कथं**-எப்படி ? **अतः**-ஆகையால், **ज्ञानं**-ஞானமானது, **न वास्तवं**-வஸ்துவை மட்டும் ஒட்டி ஏற்படுவதில்லை, **इति**-என்று, **बुधैः**-அறிவாளிகளால், **नो शंक्यतां** ஆக்ஷேபிக்கப்படவேண்டாம்.

*"ஞானம் வஸ்துதந்த்ரமானால், அதாவது வஸ்து எப்படி உள்ளதோ அப்படியே ஞானம் ஏற்படுமானால் சில சமயம் உள்ளபடி ஞானம் ஏற்படாமல் ஸந்தேஹம், ப்ராந்தி முதலியது ஏற்படக் காரணம் என்ன? ஆகையால் ஞானம் வஸ்துதந்த்ர மல்ல" என்று மூடர் கேட்கலாம். படித்தவர் கேட்கக்கூடாது.*

प्रमाणासौष्ठवकृतं संशयादि न वास्तवम् ।
श्रुतिप्रमाणसुष्ठुत्वे ज्ञानं भवति वास्तवम् ॥ १९३ ॥

*ப்ரமாணாஸௌஷ்டவக்ருதம் ஸம்ஶயாதி ந வாஸ்தவம் I*
*ஶ்ருதிப்ரமாணஸுஷ்டுத்வே ஞாநம் பவதி வாஸ்தவம் II*

**प्रमाणासौष्ठवकृतं**-பிரமாணம் சரியாக இல்லாததால் ஏற்படும், **संशयादि**-ஸந்தேஹம் முதலியவை **न वास्तवम्**-வஸ்துவை ஒட்டியல்ல, **श्रुतिप्रमाण**-வேதபிரமாணம், **सुष्ठुत्वे**-நிர்துஷ்டமாக இருக்கும்பொழுது, **ज्ञानं**-ஞானமானது, **वास्तवं भवति**-வஸ்துவை ஒட்டியே ஏற்படுகிறது.

ஞானம் உண்டாவதற்கு ஸாதனமாக உள்ள இந்திரியம் முதலான பிரமாணம் நன்கு இல்லாதகினுல் ஏற்படுவது ஸம்சயம் முதலியவை ஆகையால் அது வஸ்துவைச் சார்ந்ததில்லை. இங்கு வேதமாகிற பிரமாணம் நன்ருக இருப்பதினுல் அதனுல் ஏற்படும் ஞானம் வஸ்து இருக்கிறபடி தான் ஏற்படும். இந்திரியம் முதலான ப்ரமாணத்தில் ஏதாவது தோஷமிருந்தால் அதனுல் ஏற்படும் ஞானம் ஸம்சயமாகவோ, ப்ராந்தியாகவோ இருக்கும் ப்ரமாணத்தில் தோஷமில்லாவிட்டால் வஸ்து எப்படி உள்ளதோ அப்படியே ஞானம் ஏற்படும். (193)

वस्तु तावत् परं ब्रह्म नित्यं सत्यं ध्रुवं विभु ।
श्रुतिप्रमाणे तज्ज्ञानं स्यादेव निरपेक्षकम् ॥१९४॥

வஸ்து தாவத் பரம் ப்ரஹ்ம நித்யம் ஸத்யம் த்ருவம் விபு ।
ச்ருதிப்ரமாணே தஜ்ஞாநம் ஸ்யாதேவ நிரபேக்ஷகம் ॥

**वस्तु तावत्**-வஸ்துவோ எனில், **नित्यं**-உற்பத்தியில்லாததும், **सत्यं** உண்மையானதும், **ध्रुवं**-ஸ்திரமானதும், **विभु**-வியாபகமானதுமான **परं ब्रह्म**-பரப்ரஹ்மம், **श्रुतिप्रमाणे**-வேதபிரமாணமிருக்கும்பொழுது **तज्ज्ञानं**-அந்தப்ரஹ்மத்தின் ஞானம், **निरपेक्षकम्**-வேறு ஒன்றையும் எதிர்பாராமல், **स्यादेव**-ஏற்படத்தான் செய்யும்.

வஸ்து என்பதோ நித்யமாய் ஸத்யமாய் ஸ்திரமாய் வியாபகமாய் மேலானதாயுள்ள பிரஹ்மம் வேதமாகிற பிரமாணமிருக்கையில் அந்த பிரஹ்ம விஷயமான ஞானம் வேறு எதையும் எதிர்பாராமல் ஏற்பட்டே தீரும். (194)

रूपज्ञानं यथा सम्यग्दृष्टौ सत्यां भवेत् तथा ।
श्रुतिप्रमाणे सत्येव ज्ञानं भवति वास्तवम् १९५ ॥

ரூபஞானம் யதா ஸம்யக்த்ருஷ்டௌ ஸத்யாம் பவேத் ததா ।
ச்ருதிப்ரமாணே ஸத்யேவ ஞானம் பவதி வாஸ்தவம் ॥

**सम्यग्दृष्टौ सत्यां**-பார்வை நன்ருக இருந்தால், **यथा**-எவ்வாறு, **रूपज्ञानं**-ரூபத்தின் அறிவு, **भवेत्**-ஏற்படுமோ, **तथा**-அவ்வாறு, **श्रुति-**

**प्रमाणे सति** -- வேதப்ரமாணமிருக்கும்பொழுது, **ज्ञानं** - ஞானமானது, **वास्तवं**-வஸ்து உள்ளபடி, **भवत्येव**-ஏற்படவே செய்யும்.

நல்ல பார்வையிருந்ததேயானால் ரூபவிஷயமான ஞானம் எப்படி ஏற்படுமோ, அப்படியே வேதப்பிரமாணமிருக்கையில் வஸ்துவிருக்கிறபடியே ஞானம் ஏற்படும். (195)

**न कर्म यत्किंचिदपेक्षते हि रूपोपलब्धौ पुरुषस्य चक्षुः ।**
**ज्ञानं तथैव श्रवणादिजन्यं वस्तुप्रकाशे निरपेक्षमेव ॥ १९६ ॥**

ந கர்ம யத்கிஞ்சிதபேக்ஷதே ஹி
ரூபோபலப்தௌ புருஷஸ்ய சக்ஷு: ।
ஞானம் ததைவ ச்ரவணாதிஜந்யம்
வஸ்துப்ரகாசே நிரபேக்ஷமேவ ॥

**पुरुषस्य**-புருஷனின், **चक्षुः**-கண்ணானது, **रूपोपलब्धौ**-ரூபத்தை அறிவதில், **यत्किंचित् कर्म**-எவ்வித கர்மாவையும், **न अपेक्षते हि**-எதிர் பார்ப்பதில்லையல்லவா? **तथैव**-அவ்வாறே, **वस्तुप्रकाशे** - வஸ்துவை பிரகாசிக்கச்செய்வதில், **श्रवणादिजन्यं**-சிரவணம் முதலியவைகளால் உண்டாகும் **ज्ञानं**-ஞானமானது, **निरपेक्षमेव**-ஒன்றையும் எதிர்பார்க்கிற தில்லை.

மனிதனுடைய கண்ணானது உருவத்தை கிரஹிப்பதில் எவ்வித கர்மாவையும் அபேக்ஷிக்கிறதில்லை யல்லவா? அதைப் போலவே சிரவணம் முதலானவைகளால் ஏற்படும் ஞானம் பிரஹ்ம வஸ்துவை பிரகாசப்படுத்துவதில் எதையும் அபேக்ஷிக்கிறதில்லை தான். (196)

**कर्तृतन्त्रं भवेत् कर्म कर्मतन्त्रं शुभाशुभम् ।**
**प्रमाणतन्त्रं विज्ञानं मायातन्त्रं इदं जगत् ॥ १९७ ॥**

கர்த்ருதந்த்ரம் பவேத் கர்ம கர்மதந்த்ரம் ஶுபாஶுபம் ।
ப்ரமாணதந்த்ரம் விஞ்ஞானம் மாயாதந்த்ரமிதம் ஜகத் ॥

**कर्म**-கர்மாவானது, **कर्तृतन्त्रं भवेत्**-கர்த்தாவுக்கு உட்பட்டதாக ஏற்படும், **शुभाशुभं**-நல்லதும் கெட்டதும், **कर्मतन्त्रं**-கர்மாவை அனு

ஸரித்தது, **विज्ञानं**–ஞானமானது, **प्रमाणतन्त्रं**–ப்ரமாணத்தையொட்டியது **इदं जगत्**–இந்த பிரபஞ்சம், **मायातन्त्रं**-மாயைக்குக்கட்டுப்பட்டது.

*கர்மாவானது செய்கிறவனுக்கு உட்பட்டது. நல்லது கெட்டது என்பது நாம் செய்யும் கர்மாவை ஒட்டியது. ஞானம் பிரமாணாதீனமாக ஏற்படுவது. இந்த உலகம் மாயைக்கு கட்டுப்பட்டது (197)*

**विद्यां चाविद्यां चेति सहोक्तिरियमुपकृता सद्भिः ।**
**सत्कर्मोपासनयोः न त्वात्मज्ञानकर्मणोः क्वापि ॥ १९८ ॥**

*வித்யாம் சாவித்யாம் சேதி ஸஹோக்திரியமுபக்ருதா ஸத்பி: ।*
*ஸத்கர்மோபாஸனயோர் ந த்வாத்மஞான கர்மணோ: க்வாபி ॥*

**विद्यां च अविद्यां च**– வித்யையையும் அவித்யையையும், **इति**– என்று **इयं सहोक्तिः**-இந்த கூடச்சேர்த்துச் சொல்லியிருப்பது, **सद्भिः**– ஸாதுக்களால், **उपकृता** - விளக்கப்பட்டுள்ளது, **सत्कर्मोपासनयोः**– நல்ல கர்மாக்களுக்கும் உபாஸனத்திற்கும் (சேர்க்கை). **क्वापि**–ஒரு இடத்திலும், **न तु आत्मज्ञानकर्मणोः**–ஆத்மஞானத்திற்கும் கர்மாவுக்கும் அல்ல (என்று)

*"வித்யையையும் அவித்யையையும்" என்று ஈசாவாஸ்யோப நிஷத்தில் சேர்த்துச்சொல்லியிருக்கிறது இது நல்ல கர்மாவையும் உபாஸனையையும் சேர்த்துள்ளதாக பெரியோர்களால் விவரிக்கப் பட்டுள்ளது. ஆத்ம ஞானத்தையும் கர்மாவையும் சேர்த்துச் சொன்னதாக ஒருக்காலும் ஆகாது.* **विद्यां चाविद्यां च यस्तद्वेदोभयं सह । अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते ॥** *என்று ஈசாவாஸ்யோபநிஷத்தில் "வித்யையையும் அவித்யையையும் எவன் சேர்த்து அனுஷ்டிக்கிறானோ, அவன் அவித்யையால் மிருத்யுவைக் கடந்து வித்யையால் அமிருதநிலை அடைகிறான்" என்று கர்மாவிற்கும் ஞானத்திற்கும் சேர்க்கை கூறப்பட்டிருக் கிறதே என்று ஸந்தேஹம் வரலாம். ஆனால் இங்கு 'வித்யா' என்பது உபாஸனத்தையும் 'அவித்யா' என்பது கர்மாவையும் குறிக்கிறது. உபாஸனமும் கிரியை தான். ஆகவே கர்மாவுக்கும் உபாஸனத்திற்கும் தான் சேர்க்கை இங்கு கூறப்பட்டுள்ளதே*

தவிர கர்மாவிற்கும் ஞானத்திற்கும் சேர்க்கை கூறப்படவில்லை. இவ்வாறே பெரியோர்கள் விளக்கம் செய்து உதவியிருக்கிறார்கள். (198)

नित्यानित्यपदार्थबोधरहितो यश्चोभयत्र स्रगा-
द्यर्थानामनुभूतिलग्नहृदयोऽनिर्विण्णबुद्धिर्जनः ।
तस्यैवास्य जडस्य कर्म विहितं श्रुत्या विरज्याभितो
मोक्षेच्छोर्न विधीयते तु परमानन्दार्थिनो धीमतः ॥ १९९ ॥

*நித்யாநித்யபதார்த்தபோதரஹிதோ யச்சோபயத்ர ஸ்ரகா-*
*த்யர்த்தாநாமநுபூதிலக்நஹ்ருதயோऽநிர்விண்ணபுத்திர் ஜந: ।*
*தஸ்யைவாஸ்ய ஜடஸ்ய கர்ம விஹிதம் ச்ருத்யா விரஜ்யாபிதோ*
*மோக்ஷேச்சோர் ந விதீயதே து பரமாநந்தார்த்திநோ தீமத: ॥*

**यः जनः**-எந்த மனிதன், **नित्यानित्यपदार्थबोधरहितः**-பதார்த்தங்களில் இது நித்யம், இது அநித்யம் என்ற விவேகஞானமில்லாமலும், **उभयत्र**-இவ்வுலகிலும் மேலுலகிலும், **स्रगाद्यर्थानां**-மாலை முதலிய வஸ்துக்களின், **अनुभूतिलग्नहृदयः** அனுபவத்தில் ஈடுபட்டமனமுள்ளவனும், **अनिर्विण्णबुद्धिः**-வைராக்யம் ஏற்படாத புத்தி உள்ளவனும் (இருக்கிறானோ) **तस्य**-அந்த, **अस्य**-இந்த, **जडस्यैव**-மூடனுக்குத்தான், **श्रुत्या**-வேதத்தால், **कर्म**-கர்மாவானது, **विहितं**-செய்யும்படியாக விதிக்கப்பட்டுள்ளது, **अभितो विरज्य**-எங்கும் ஆசையைத்துறந்து, **मोक्षेच्छोः**-விடுதலையை விரும்புபவனும், **परमानन्दार्थिनः**-மேலான ப்ரஹ்மானந்தத்தை வேண்டுபவனுமான, **धीमतः तु**-புத்திமானுக்கோவெனில், **न विधीयते**-(கர்மாவானது) விதிக்கப்படவில்லை.

*நித்ய பதார்த்தம் எது, அநித்திய பதார்த்தம் எது என்ற அறிவில்லாமல், இஹலோகத்திலும் பரலோகத்திலும் கிடைக்கக் கூடிய புஷ்பமாலை முதலிய விஷயங்களை அனுபவிப்பதில் பற்றுள்ள மனஸுடன், சிறிதும் வைராக்யத்தை அடையாத அறிவற்ற மனிதனுக்குத்தான் கர்மாவானது வேதத்தினால்*

விதிக்கப்பட்டிருக்கிறது மோக்ஷத்தில் ஆவல்கொண்டு எல்லா விஷயங்களிலிருந்தும் வைராக்யத்தையடைந்து, மேலான ஆனந்தத்தை விரும்புகிற புத்திமானுக்கு கர்மா விதிக்கப்படவில்லை.

मोक्षेच्छया यदहरेव विरज्यतेऽसौ
न्यासस्तदैव विहितो विदुषो मुमुक्षोः ।
श्रुत्या तयैव परया च ततः सुधीभिः
प्रामाणिकोऽयमिति चेतसि निश्चितव्यः ॥ २०० ॥

மோக்ஷேச்சயா யதஹரேவ விரஜ்யதேऽஸௌ
ந்யாஸஸ்ததைவ விஹிதோ விதுஷோ முமுக்ஷோ: ।
ச்ருத்யா தயைவ பரயா ச தத: ஸுதீபி:
ப்ராமாணிகோऽயமிதி சேதஸி நிச்சிதவ்ய: ॥

मोक्षेच्छया-மோக்ஷமடைவதில் விருப்பத்தால், यदहरेव-என்றைய தினமே, असौ-இவன், विरज्यते-வைராக்யமடைகிறானோ, तदैव-அன்றைய தினமே, मुमुक्षोः-முமுக்ஷுவான, विदुषः-புத்திமானுக்கு, परया-சிறந்த, तया-அந்த, श्रुत्यैव-வேதத்தாலேயே, न्यासः-ஸந்யாஸம் विहितः-விதிக்கப்பட்டுள்ளது. ततः-ஆகையால், सुधीभिः-வித்வான்களால், अयं-இது, प्रामाणिकः-பிரமாணமுள்ளது, इति-என்று, चेतसि-மனதில், निश्चितव्यः-தீர்மானிக்கத்தகுந்தது.

மோக்ஷத்தில் இச்சையினால் என்றைய தினமே இவன் வைராக்யத்தை அடைகிறானோ அப்பொழுதே அந்த வித்வானை முமுக்ஷுவுக்கு அதே வேதமானது ஸர்வகர்மபரித்யாக ரூபமான ஸந்யாஸத்தை விதிக்கிறது. ஆகையால் வைராக்யமில்லாதவனுக்கு கர்மானுஷ்டானம், வைராக்யமடைந்தவனுக்கு ஸந்யாஸம் என்பதுதான் பிரமாணஸித்தம் என்று புத்தியுள்ளவர்கள் தீர்மானம் செய்துகொள்ளவேண்டும். (200)

स्वापरोक्षस्य वेदादेः साधनत्वं निषेधति ।
नाहं वेदैर्न तपसेत्यादिना भगवानपि ॥ २०१ ॥

ஸ்வாபரோக்ஷஸ்ய வேதாதே: ஸாதனத்வம் நிஷேததி ।
நாஹம் வேதைர் ந தபஸேத்யாதிநா பகவானபி ॥

**अहं**—நான், **वेदैः**-வேதங்களால், **न**— அறியத்தக்கவனல்ல, **तपसा**—தவத்தால், **न**—அல்ல. **इत्यादिना**—இது முதலிய வாக்கியத்தால், **भगवानपि**—கிருஷ்ணனும், **स्वापरोक्षस्य**—தனக்கே பிரத்யக்ஷமாக உள்ள ஆத்மாவிற்கு, **साधनत्वं**—ஸாதனத்தன்மையை, **वेदादेः**-வேதாத்யயனம் முதலியவற்றிற்த, **निषेधति**—மறுக்கிறுர்.

*' நான் வேதங்களினுலாவது தவத்தாலாவது (அறியத் தக்கவனில்லை'' இது முதலான வாக்யங்களினுல் பகவான்கூட (கீதை II-53) தானுகவே பிரத்யக்ஷமாகும் ஆத்மாவையறிய வேதாத்யயனம் முதலிய கர்மாசகள் ஸாதனமல்ல என்பதை கூறுகிறுர். தானுகவே தனக்கு அபரோக்ஷமாகும் ஆத்மாவை ஞான்த்தால்தான் அடையமுடியும் அத்யயனம், தவம் முதலிய வற்றுல் அடைய முடியாது.* **(201)**

**प्रवृत्तिश्च निवृत्तिश्च द्वे एते श्रुतिगोचरे ।**
**प्रवृत्त्या बध्यते जन्तुः निवृत्या तु विमुच्यते ॥ २०२ ॥**

*ப்ரவ்ருத்திச்ச நிவ்ருத்திச்ச த்வே ஏதே ச்ருதி கோசரே ।*
*ப்ரவ்ருத்த்யா பத்யதே ஜந்துர் நிவ்ருத்த்யா து*
*விமுச்யதே ॥*

**प्रवृत्तिश्च**—ப்ரவ்ருத்தியும் (கர்மாவைச் செய்வதும்), **निवृत्तिश्च**—நிவ்ருத்தியும் (விதிபூர்வமாக கர்ம பரித்யாகமும்), **एते द्वे**-இவ்விரண்டும், **श्रुतिगोचरे**—வேதத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் (இவற்றில்), **प्रवृत्त्या**—ப்ரவ்ருத்தியால், **जन्तुः**—மனிதன், **बध्यते**—கட்டுப்படுகிறுன். **निवृत्त्या तु**—நிவ்ருத்தியாலோவெனில், **विमुच्यते**—விடுபடுகிறுன்.

*ப்ரவ்ருத்தி, நிவ்ருத்திஎன இரண்டு மார்க்கங்கள் வேதத்தில் கூறப்பட்டுள்ளன. இவற்றில் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் செல்பவன் பந்தத்தை அடைகிறுன். நிவ்ருத்திமார்கத்தில் செல்பவன் முக்தியை (விடுதலையை) அடைகிறுன்.* **(202)**

**यत्र स्वबन्धोऽभिमतो मूढस्यापि क्वचित् ततः ।**
**निवृत्तिः कर्मसंन्यासः कर्तव्यो मोक्षकाङ्क्षिभिः ॥ २०३ ॥**

*யத் ந ஸ்வபந்தோऽபிமத: மூடஸ்யாபி க்வசித் தத: ।*
*நிவ்ருத்தி: கர்மஸந்யாஸ: கர்த்தவ்யோ மோக்ஷ*
*காங்க்ஷிபி: ॥*

**यत्**–எதனுல், **क्वचित्**–ஒரு இடத்திலும், **स्वबन्धः**–தனக்கு பந்த மேற்படுவது, **मूढस्यापि**–முட்டாளுக்கும், **न अभिमतः**–இஷ்ட மில்லாததோ, **ततः**–அதனுல், **मोक्षकाङ्क्षिभिः**–முக்தியை விரும்புபவர் களால், **निवृत्तिः**–நிவ்ருத்தியாகிற, **कर्मसंन्यासः**–கர்ம பரித்யாகம், **कर्तव्यः**–செய்யத்தக்கது.

*முட்டனுக்குக்கூட எக்காலத்திலும் (எவ்விடத்திலும்) தனக்கு பந்தமேற்படுவது இஷ்டமாயிருக்காது ஆகையால் மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் நிவிருத்தியாகிற கர்மஸன்யாஸமே செய்ய வேண்டியது.* **(203)**

**न ज्ञानकर्मणोर्यस्मात् सहयोगस्तु युज्यते ।**
**तस्मात् त्याज्यं प्रयत्नेन कर्म ज्ञानेच्छुना ध्रुवम् ॥ २०४ ॥**

*ந ஞாநகர்மணோர் யஸ்மாத் ஸஹயோகஸ்து யுஜ்யதே ।*
*தஸ்மாத் த்யாஜ்யம் ப்ரயத்நேந கர்ம ஞானேச்சுநா*
*த்ருவம் ॥*

**यस्मात्**–எதனுல், **ज्ञानकर्मणोः**–ஞானத்திற்கும் கர்மாவிற்கும், **सहयोगस्तु**–கூடசேர்க்கை, **न युज्यते**–பொருந்தாதோ, **तस्मात्**–அதனுல் **ज्ञानेच्छुना**–ஞானத்தை விரும்புபவனுல், **ध्रुवं**–நிச்சயமாக, **प्रयत्नेन**–முயற்சியுடன், **कर्म**–கர்மா, **त्याज्यं**–த்யாகம் செய்யத்தக்கது.

*ஞானமும் கர்மாவும் சேர்ந்திருக்காது என்பது பல காரணங் களால் விளக்கிக்காட்டப்பட்டது. அதினுல் ஞானத்தை இச்சிப் பவன் பிரயத்தினம் செய்து அவசியம் கர்மாவை தியாகம் செய்ய வேண்டும்.* **(204)**

**इष्टसाधनताबुद्ध्या गृहीतस्यापि वस्तुनः ।**
**विज्ञाय फल्गुतां पश्चात् कः पुनस्तत् प्रतीक्षते ॥ २०५ ॥**

*இஷ்டஸாதநதாபுத்த்யா க்ருஹீதஸ்யாபி வஸ்துந: ।*
*விஜ்ஞாய பல்குதாம் பச்சாத் க: புநஸ்தத் ப்ரதீக்ஷதே ॥*

**इष्टसाधनताबुद्ध्या**-தனது விருப்பத்திற்கு ஸாதனம் என்ற எண்ணத்தால், **गृहीतस्यापि**-ஸ்வீகரிக்கப்பட்டபோதிலும், **पश्चात्**-பின்னால், **वस्तुनः**-அந்த வஸ்துவின், **फल्गुतां**-பிரயோஜனமற்ற தன்மையை, **विज्ञाय**-அறிந்து (பின்), **तत्**-அதை, **कः पुनः**-எவன் தான், **प्रतीक्षते**-விரும்புவான் ?

*நாம் விரும்பும் பலன் இந்த வஸ்துவால் கிடைக்கும் என்று தன்புத்தியால் எண்ணி அந்த வஸ்துவை ஸம்பாதித்த போதிலும் பின்னால் நன்கு ஆலோசித்துப்பார்த்ததில் அது ஸாரமற்றது, நிஷ்ப்ரயோஜனம். அதனால் கிடைக்கும் பலனும் அல்பமானது என்று ஒருவனுக்குத்தெரிந்துவிட்டால் பிறகும் அதில் ஆசை கொள்வானா? ஸுகம் கிடைக்குமென்ற எண்ணத்துடன் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் செல்கிறான். இந்த ஸுகம் மறைந்து விடுகிறது, துக்கம் கலந்தது என்பதை அநுபவத்தாலும் சாஸ்திரங்களாலும் தெரிந்து கொள்கிறான். பின்னர் அவன் ப்ரவ்ருத்திமார்க்கத்தில் செல்வானா?* (205)

*(அ) இது வரை உபரதி என்ற வார்த்தைக்கு ஸன்யாஸம் என்றேஅர்த்தம் வைத்துககொண்டு சொன்னபோதிலும் இதை விட மேலாக முக்கியமான உபரதி ஒன்றிருக்கிறது என்பதைக் குறிப்பிடுகிறார். அந்த உபரதிக்கு ஸன்யாஸம் அங்கமானதினால் தான் இதுவும் உபரதி என்று கௌணமாக கூறப்படுகிறது என்கிறார்:—*

**उपरतिशब्दार्थो ह्युपरमणं पूर्वदृष्टवृत्तिभ्यः ।**
**सोऽयं मुख्यो गौणश्चेति च वृत्त्या द्विरूपतां धत्ते ॥ २०६ ॥**

*உபரதிஶப்தார்த்தோ ஹ்யுபரமணம் பூர்வத்ருஷ்ட*
*வ்ருத்திப்ய: ।*
*ஸோऽயம் முக்யோ கௌணச்சேதி ச வ்ருத்த்யா*
*த்விரூபதாம் தத்தே ॥*

**पूर्वदृष्टवृत्तिभ्यः**-முன்காணப்பட்ட விருத்திகளிலிருந்து, **उपरमणं**-ஓய்வு பெறுதல், **उपरतिशब्दार्थः**-உபரதி என்னும் பதத்தின் பொருளாகும், **सोऽयं**-அந்த இது (உபரதி), **मुख्यः**-முக்யமென்றும், **गौणश्चेति**-கௌணமென்றும், **वृत्त्या**-காரியத்தால, **द्विरूपतां**-இருவிதமாக இருக்கும் தன்மையை, **धत्ते**-தரிக்கிறது.

உபரதி என்ற சொல்லுக்கு ஓய்வுபெறுவது என்று பொருள். ஒருகாரியத்தைச்செய்து வந்தவன் அந்தக்காரியத்தை இனி செய்யாமல் ஒதுங்கிவிடுவது உபரதியாகும் இதுபோல் விஷய ஸுகத்தைத்தேடி ஆசையுடன் அனுபவித்து வருபவன் இதை விட்டு ஒதுங்கிவிடுவதும் உபரதியாகும். இதுவரை உலகவிஷயங் களைக்கண்டு மனதில் பலவிதமான விருத்திகள் ஏற்பட்டு வருவதைத்தடுத்து அம்மாதிரி விருத்திகள் ஏற்படாமல் செய்வது தான் இங்கு உபரதியாகும். இது காரியத்தைப் பொறுத்து முக்கியமென்றும் கௌணமென்றும் இருவிதமாகும். (206)

वृत्तेर्दृश्यपरित्यागो मुख्यार्थ इति कथ्यते ।
गौणार्थः कर्मसंन्यासः श्रुतेरङ्गतया मतः ॥ २०७ ॥

வ்ருத்தே: த்ருச்யபரித்யாகோ முக்யார்த்த இதி கத்யதே ।
கௌணார்த்த: கர்மஸந்யாஸ: ச்ருதேரங்கதயா மத: ॥

वृत्तेः–மனோ விருத்தியின், दृश्यपरित्यागः–அறியப்படும் விஷயத்தை ஒதுக்குவது, मुख्यार्थः इति–உபரதி என்ற சொல்லின் முக்கியமான அர்த்தமென்று, कथ्यते–சொல்லப்படுகிறது. श्रुतेः–சிரவணத்திற்கு, अङ्गतया–அங்கமாக, मतः–ஒப்புக்கொள்ளப்பட்ட, कर्मसंन्यासः–விதிபூர்வமாக கர்ம பரித்யாகமானது, गौणार्थः–கௌண மான அர்த்தம்.

மனது விஷயவடிவமாகப் பரிணமமடைவதுதான் விருத்தி எனப்படும் இதில் விஷயவடிவத்தை நீக்குவதுதான் முக்யமான உபரதியாகும். மனதில் விருத்தியே ஏற்படக்கூடாது. அல்லது திருச்யவடிவமில்லாமல் ஆத்மாகாரமாக இருக்கலாம். சிரவணத் திற்கு அங்கமான கர்மஸந்யாஸமானது கௌணமான உபரதி யாகும். விதிபூர்வமாக கர்மாக்களிலிருந்து ஒதுங்குவதால் இதுவும் உபரதி என்று சொல்லப்படுகிறது. (207)

पुंसः प्रधानसिद्ध्यर्थमङ्गस्याश्रयणं ध्रुवम् ।
कर्तव्यमङ्गहीनं चेत्प्रधानं नैव सिध्यति ॥ २०८ ॥

பும்ஸ: ப்ரதானஸித்த்யர்த்தம் அங்கஸ்யாச்ரயணம் த்ருவம் ।
கர்த்தவ்யமங்கஹீனம் சேத் ப்ரதானம் நைவ ஸித்யதி ॥

**पुंसः**—மனிதனுக்கு, **प्रधानसिद्ध्यर्थं**—பிரதானம் நிறைவேறுவதற்கு, **ध्रुवं**—நிச்சயமாக, **अङ्गस्य आश्रयणं**—அங்கத்தை ஆச்ரயிப்பது, **कर्तव्यम्**—செய்யத்தகுந்தது. **अङ्गहीनं चेत्**—அங்கம் இல்லாவிட்டால், **प्रधानं**—பிரதானம், **नैव सिद्ध्यति**—நிறைவேறாது.

*மனிதனுக்கு பிரதானமாயுள்ளது ஸித்திப்பதற்காக அங்கத்தையும் அவசியம் அனுஷ்டிக்கவேண்டும். அங்கம் குறைந்திருந்தால் பிரதானம் ஸித்திக்கவே மாட்டாது. அங்கமான ஸந்யாஸத்தை ஸ்வீகரித்துக்கொண்டு சிரவணாதிகளையனுஷ்டித்தால் தான் பின்னால் மனோவிருத்திபரித்யாகரூபமான முக்ய உபரதி ஸித்திக்கும்.* (208)

**संन्यसेत्सुविरक्तः सन्निहामुत्रार्थतः सुखात् ।**
**अविरक्तस्य संन्यासो निष्फलोऽयाज्ययागवत् ॥ २०९ ॥**

*ஸந்யஸேத் ஸுவிரக்த: ஸன் இஹாமுத்ரார்த்தத: ஸுகாத் ।*
*அவிரக்தஸ்ய ஸந்யாஸோ நிஷ்பலோऽயாஜ்யயாகவத் ॥*

**इहामुत्रार्थतः**—இவ்வுலகிலும் மேலுலகிலுமுள்ள விஷயத்திலிருந்து (உண்டாகும்), **सुखात्**—ஸுகத்திலிருந்து, **सुविरक्तः सन्**—நன்கு வைராக்யமடைந்துகொண்டு, **संन्यसेत्**—ஸந்யாஸம் செய்துகொள்ள வேண்டும். **अविरक्तस्य**—வைராக்யமில்லாதவனின், **संन्यासः**—ஸந்யாஸமானது, **अयाज्ययागवत्**—யாகம் செய்யத்தகாதவன் செய்யும் யாகம் போல, **निष्फलं**—பலனற்றது.

*இஹலோகத்திலும் பரலோகத்திலுமுள்ள விஷயங்களிலிருந்து கிடைக்கக்கூடிய ஸுகங்களில் தீவிர வைராக்யமுள்ளவன்தான் ஸன்யாஸம்செய்து கொள்ளவேண்டியது. வைராக்யமில்லாதவனுடைய ஸன்யாஸம், யாகம் செய்ய அதிகாரமில்லாதவன் செய்யும் யாகத்தைப்போல, பலனற்றதேயாகும்.* (209)

**संन्यस्य तु यतिः कुर्यान्न पूर्वविषयस्मृतिम् ।**
**तां तां तत्स्मरणे तस्य जुगुप्सा जायते यतः ॥ २१० ॥**

ஸந்யஸ்ய து யதி: குர்யாத் ந பூர்வவிஷயஸ்ம்ருதிம் ।
தாம் தாம் தத்ஸ்மரணே தஸ்ய ஜுகுப்ஸா ஜாயதே யத: ॥

**संन्यस्य**-ஸந்யாஸம் செய்துகொண்டு, **यतिः**–யதியானவர், **तां तां**-அந்தந்த, **पूर्वविषयस्मृतिं**–முன் அனுபவித்த விஷயங்களின் நினைவை **न कुर्यात्**–செய்யக்கூடாது, **यतः**–ஏனெனில், **तत्स्मरणे**–அதை நினைவு படுத்திக்கொண்ட பொழுது, **तस्य**–அவனுக்கு, **जुगुप्सा**-ஜுகுப்ஸை (அருவறுப்பு) **जायते**-உண்டாகும்.

ஸந்யாஸம் செய்துகொண்டதற்குப்பிறகு ஏற்கனவே முன்னால் அநுபவித்த அந்தந்த விஷயங்களைப்பற்றிச் சிறிதும் நினைக்கக்கூடாது அதை நினைக்கும்போதே அதில் அருவறுப்பு உண்டாகும், (210)

—o—